உ

திருச்சிற்றம்பலம்.

# பதினோராந்திருமுறைப்பிரபந்தங்கள்.

## இத்திருமுறையுளடங்கிய

திருமுகப்பாசுரம்,
திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகங்கள்,
திருவிரட்டைமணிமாலை,
அற்புதத்திருவந்தாதி,
க்ஷேத்திரத்திருவெண்பா,
பொன்வண்ணத்தந்தாதி,
திருவாரூர் மும்மணிக்கோவை,
திருவாதியுலா,
கயிலைபாதிகாளத்திபாதித்திருவந்தாதி
யாகிய திருப்பிரபந்தங்கள்

திரிசிரபுரம் மஹாவித்துவான்

**மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்**

மாணாக்கருளொருவராகிய

சென்னைக்கவர்ன்மெண்டு நார்மல்பாடசாலைத்

தமிழ்ப்புலவர்

திரிசிரபுரம்

சோடசாவதானம்

**சுப்பராயசெட்டியாரால்**

பலபிரதிகளைக்கொண்டு பரிசோதிக்கப்பட்டு,

பூவிருந்தவல்லி,

சுப்பராயமுதலியார் குமாரராகிய

**கன்னியப்பமுதலியாரால்**

சென்னை

சி. டிக்குரூஸது,

மலைச்சாலையிலிருக்கும் அத்திநீயம் அன்ட் டேலிநியூஸ் பிரான்ச்
அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

விபவஸு மாசி மீ

பதினோராந்திருமுறையு ளடங்கிய
மற்றைத்திருப்பிரபந்தங்கள்
இப்போது, அச்சிட்டுவருகின்றன
அவைவிரைவில் வெளியிடப்படும்.

# பிழைதிருத்தல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௧௩ | ௨௮ | பாதத்தான் | பாகத்தான் |
| ௧௯ | ௩௮ | அருத்து | அருத்த |
| ௨௧ | ௯ | தென்றிருவாப்பாடியான் | தென்றிருவாய்ப்பாடியான் |
| ௸ | ௧௨ | கன்னெஞ்சேய் | கன்னஞ்செய் |
| ௨௫ | ௫ | விரிகின்ற | *விரிகின்ற |
| ௸ | ௭ | கா*ரிருள் | காரிருள் |

உ

திருச்சிற்றம்பலம்.

# பதினோராந் திருமுறைப் பிரபந்தங்கள்.

## திருவாலவாயுடையார் சேரமான்பெருமா ணாயனாருக்கு அருளிச்செய்த திருமுகப்பாசுரம்.

நேரிசை யாசிரியப்பா

மதிமலிபுரிசை மாடக்கூடற் பதிமிசை நிலவும்பானிறவரிச்சிறை
யன்னம்பயில் பொழிலாலவாயின்
மன்னியசிவனியான் மொழிதரு மாற்றம்
பருவக்கொண்மூப்படி யெனப்பாவலர்க்
* குரிமையினுரிமையி னுதவியொளிதிகழ்
குருமாமதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமாவுகைக்குஞ் சேரலன்காண்க
பண்பால் யாழ்வல்லபாணபத்திரன்
தன்போலென்பாலன் பன்றன்பாற்
காண்பதுகருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்துவரவிடுப்பதுவே

* ஒருமையினுரிமையி னெனவும்பாடமுண்டு.

திருச்சிற்றம்பலம்.

திருவாலவாயுடையார் சேரமான் பெருமாணாயனார்க்கு அருளிச்செய்த திருப்பிரபந்தம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# காரைக்கால் அம்மையார் அருளிச்செய்த திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்.

## பண். நட்டபாடை.

கொங்கைதிரங்கிநரம் பெழுந்துகுண்டுகண்வெண்பற் குழிவயிற்றுப்
பங்கிசிவந்திருபற்கணீண்டு பரடுயர்நீள்கணைக்காலோர் பெண்பேய்
தங்கியலறியுலறுகாட்டிற்றாழ் சடையெட்டுத்திசையும்வீசி
யங்கங்குளிர்ந்தனலாடு மெங்களப்பனிடந் திருவாலங்காடே............. (௧)

கள்ளிக்கவட்டிடைக்காலைநீட்டிக் கடைக்கொள்ளிவாங்கிமசித்துமையை
விள்ளவெழுதி வெடுவெடென்ன நக்குவெருண்டு விலங்குகாட்டிற்
றுள்ளித்துடித்துச்சுடு பிணத்தீச்சுட்டிட முற்றுஞ்சுழிந்துபூழ்தி
யள்ளியவிக்கநின்றாடு மெங்களப்பனிடந் திருவாலங்காடே............... (௨)

வாகைவிரிந்து வெண்ணெற்றொலிப்பமயங்கிருள் கூர்நடுநாளையாங்கே
கூகையோடாண்டலை பாடவாந்தைகோடதன்மேற் குதித்தோடிவீசி
யீகைபடர்தொடர்கள்ளி நீழலீமமிடுசுடு காட்டகத்தே
யாகங்குளிர்ந்தனலாடு மெங்களப்பனிடந் திருவாலங்காடே...... ...... (௩)

குண்டிலோமக்குழிச் சோற்றைவாங்கிக்குறுநரிதின்னவதனைமுன்னே
கண்டிலோமென்று கனன்றுபேய்கள் கையடித்தோடிடுங் காடரங்கா
மண்டிலநின்றங்குளாளமிட்டு * வாதித்துவீசியெடுத்தபாத
மண்டமுறநிமிர்ந்தாடு மெங்களப்பனிடந்திருவாலங்காடே............... (௪)

விழுதுநிணத்தை விழுக்கியிட்டுவெண்டலை மாலைவிரவிப்பூட்டிக்
கழுதுதன்பிள்ளையைக்காளி யென்றுபேரிட்டுச் சீருடைத்தாய்வளர்த்துப்
புழுதிதுடைத்து முலைகொடுத்துப் போயினதாயை வரவுகாணா
தழுதுறங்கும் புறங்காட்டிலாடு மப்பனிடந்திருவாலங்காடே............ (௫)

பட்டடிநெட்டுகிர்ப்பாறுகாற்பேய்பருந்தொடு கூகைபகண்டையாந்தை
குட்டியிடமுட்டை கூகைபேய்கள் குறுநரிதின்றிணங்காடுகாட்டிற்
பிட்டடித்துப்புறங்காட்டிலிட்ட பிணத்தினைப்போகப்புரட்டியாங்கே
* யட்டமேபாயநின்றாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே...... ...... (௬)

சுழலுமழல்விழிக்கொள்ளிவாய்ப்பேய் சூழ்ந்துதுணங்கையிட்டோடியாடித்
தழலுளெரியும் பிணத்தைவாங்கித்தான்றடிதின் றிணங்காடுகாட்டிற்
கழலொலியோசைச்சிலம் பொலிப்பக்காலுயர்வட்டணையிட்டுநட்ட
மழலுமிழ்ந்தோரிகதிக்கவாடுமப்பனிடந் திருவாலங்காடே............ .. (௭)

நாடுநகருந்திரிந்துசென்று நன்னெறிநாடிநயந்தவரை
மூடிமுதுபிணத்திட்டமாடே முன்னியபேய்க்கணஞ்சூழச் சூழக்
காடுங்கடலுமலையு மண்ணும்விண்ணுஞ் சுழலவனல்கையேந்தி
யாடுமமரர்புயங்களெங்களப்பனிடந் திருவாலங்காடே...... ............ (௮)

---

* மட்டித்துவீசி - எனவும்பாடமுண்டு— மட்டித்து - சுழன்று.
* அட்டம்- திசைச்சொற்றிரிபு - அட்டம்- குறுக்கு.

துத்தங்கைக்கிளைவிளரிதாரமுழையிளியோசைபண்கெழுமப்பாடிச்
சச்சரிகொக்கரைதக்கையோடு தகுணிச்சந்துந்துமிதாளம்வீணை
மத்தளங்கரடிகைமுன்கைமென்றோற்றமருகங் குடமுழாமொந்தைவாசித்
தத்தனமைவினோடாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே................ (கூ)

புந்திகலங்கி மதிமயங்கியிறந்தவரைப்புறங்காட்டி லிட்டுச்
சந்தியில்வைத்துக்கடமைசெய்து தக்கவரிட்டசெந்தீவிளக்கா
முந்தியமரர்முழவினோசை திசைகதுவச்சிலம் பார்க்கவார்க்க
வந்தியின்மாநடமாடு மெங்களப்பனிடந்திருவாலங்காடே... ............ (ய)

ஒப்பிணையில்லவன்பேய்கள்கூடி யொன்றினையொன்றடித்தொக்கலித்துப்
பப்பிணையிட்டுப்பரண்டைபாடப்பாடிருந்தந்நரியாழ மைப்ப
வப்பனையணிதிருவாலங்காட்டுளடிகளைச்செடிதலைக்காரைக்காற்பேய்
செப்பியசெந்தமிழ்பத்தும் வல்லார்சிவகதிசேர்ந்தின்பமெய்துவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

# மூத்ததிருப்பதிகம். பண். இந்தளம்.

எட்டியிலவமீகை சூரைகாரைபடர்ந்தெங்குஞ்
சுட்டசுடலை சூழ்ந்தகள்ளிசோர்ந்த குடர்கவ்வப்
பட்டபிணங்கள் பரந்தகாட்டிற்பறைபோல் விழிகட்பேய்
கொட்டமுழவங்கூளிபாடக்குழகனாடுமே........... ............ ......... (க)

நிணந்தானுருகி நிலந்தானனைப்பநெடும்பற்குழிகட்பேய்
* சுணங்கையெறிந்து சூழுநோக்கிச்சுடரநவித்தெங்குங்
கணங்கள்கூடிப்பிணங்கண் மாந்திக்களித்தமநத்தவா
யணங்குகாட்டிலனல்கையேந்தி யழகனாடுமே.............................. (உ)

புட்கள்பொதுத்தபுலால் வெண்டலையைப்புறமேநரிகவ்வ
வட்கென்றழைப்பவாந்தை வீசவருகேசிறுகூகை
யுட்கவிழிக்கவூமன் வெருட்டவோரிகதித்தெங்கும்
பிட்கநக்கம்பேணுமிறைவன்பெயரும் பெருங்காடே......... ...... ...... (ந)

செத்தபிணத்தைத்தெளியாதொரு பேய்சென்றுவிரல்சுட்டிக்
கத்தியுருமிக்கனல்விட்டெறிந்து கடக்கப்பாய்ந்துபோய்ப்
பத்தல்வயிற்றைப்பதைக்கமோதிப்பலபேயிரிந்தோடப்
பித்தவேடங்கொண்டுநட்டம் பெருமானாடுமே............ ............. ... (ச)

முள்ளிதீந்துமுளரிகருகி மூளைசொரிந்துக்குக்
கள்ளிவற்றிவெள்ளில் பிறங்குகடுவெங்காட்டுள்ளே
புள்ளியுழைமான்றோலொன்றுடுத்துப்புலித்தோல்பியற்கிட்டுப்
பள்ளியிடமுமது வேயாகப்பரமனாடுமே................................... (ரு)

வாளைக்கிளரவளைவாளெயிற்றுவண்ணச்சிறுகூகை
மூளைத்தலையும் பிணமும்விழுங்கிமுரலுமுதுகாட்டிற்
றுளிப்பனையினிலைபோன் மயிர்க்கட்டழல்வாயழல்கட்பேய்
கூளிக்கணங்கள்குழலோடி யம்பக்குழகனாடுமே........................ (சு)

---

* துனங்கையெறிந்தெனவும் பாடமுண்டு துணங்கை இருகையு முடக்கிப் பழுப்புடை யொற்றியாடல்.

நொந்திக்கிடந்த சுடலைதடவிநுகரும் புழுக்கின்றிச்
சிந்தித்திருந்தங்குறங்குஞ் சிறுபேய்சிரமப்படுகாட்டின்
முந்திமுழவம்விழவினோசைமுறைமைவழுவாமே
யந்திநிருத்தமனல்கை யேந்தியழகனாடுமே................................ (எ)

வேய்களோங்கி வெண்முத்துதிரவெடிகொள்சுடலையுள்
ஓயுமுருவிலுலறுகூந்தலலறு பகுவாய்ப்
பேய்கள்கூடிப்பிணங்கண்மாந்தியணங்கு பெருங்காட்டின்
மாயனாடமலையான் மகளுமருண்டுநோக்குமே................................ (அ)

கடுவனுகளுங்கழைசூழ்பொதும் பிற்கழுகும்பேயுமா
யிடுவெண்டலையுமீமப்புகையு மெழுந்தபெருங்காட்டிற்
கொடுவெண்மழுவும் பிறையுந்ததும்பக்கொள்ளென்றிசைபாடப்
படுவெண்டுடியும்பறையுங் கறங்கப்பரமனாடுமே................................ (கூ)

குண்டைவயிற்றுக்குறியசிறியநெடியபிறங்கற்பேய்
இண்டுபடர்ந்தவிருள்சூழ் மயானத்தெரிவாயெயிற்றுப்பேய்
கொண்டுகுழவித்தடவிவெருட்டிக்கொள் ளென்றிசைபாட
மிண்டிமிளிர்ந்தசடை கடாழவிமலனாடுமே................................ (ய)

சூடுமதியஞ்சடைமேலுடையார் சுழல்வர்திருநட்ட
மாடுமரவமணையிலார்த்தவடிகளருளாலே
காடுமலிந்தகனல்வாயெ யிற்றுக்காரைக்காற்பேய்தன்
பாடல்பத்தும்பாடியாடப்பாவநாசமே................................ (கக)

திருச்சிற்றம்பலம்.

அம்மையாரருளிச்செய்த திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள்.

முற்றுப்பெற்றன.

திருச்சிற்றம்பலம்.

# காரைக்காலம்மையார் அருளிச்செய்த திருவிரட்டைமணிமாலை.

கிளர்ந்துந்துவெந்துயர்வந்திடும்போதஞ்சிநெஞ்சமென்பாய்த்
தளர்ந்திங்கிருத்தறவிர்திகண்டாய்தளராதுவந்தி
வளர்ந்துந்துகங்கையும்வானத்திடைவளர்கோட்டுவெள்ளை
இளந்திங்களும்மெருக்குமிருக்குஞ்சென்னியீசனுக்கே................ (க)

ஈசனவனல்லாதில்லையெனநினைந்து
கூசிமனத்தகத்துக்கொண்டிருந்து—பேசி
மறவாதுவாழ்வாரைமண்ணுலகத்தென்றும்
பிறவாதுகாக்கும்பிரான்................................ (உ)

பிரானென்றுதன்னைப்பன்னாள்பரவித்தொழுவாரிடர்கண்
டிரானென்னநிற்கின்றவீசன்கண்டீரினவண்டுகிண்டிப்
பொராநின்றகொன்றைப் பொதும்பர்க்கிடந்துபொம்மென்னுரவாய்
அராநின்றிரைக்குஞ் சடைச்செம்பொனீண்முடியந்தணனே...... ...... (௩)

அந்தணனைத்தஞ்சமென்றாட்பட்டாராழாமே
வந்தணைந்துகாத்தளிக்கும்வல்லாளன்—கொந்தணைந்த
பொன்கண்டாற்பூணாதேகோணாகம்பூண்டானை
என்கண்டாய்நெஞ்சேயினி........................... ......................... (௪)

இனிவார்சடையினிற்கங்கையென்பாளையங்கத்திருந்த
கனிவாய்மலைமங்கைகாணிலென்செய்திகையிற்சிலையான்
முனிவார்திரிபுரமூன்றும்வந்தன்றுசெந்தீயின்மூழ்கத்
தனிவார்கணையொன்றினான்மிக்ககொற்றவெஞ்சங்கரனே...... ... ...... (௫

சங்கரனைத்தாழ்ந்தசடையானையச்சடைமேற்
பொங்கரவம்வைத்துகந்தபுண்ணியனை—யங்கொருநாள்
ஆவாவென்றாழாமைக்காப்பானையெப்பொழுதும்
ஓவாதுநெஞ்சேயுரை........................................ .................. (௬)

உரைக்கப்படுவதுமொன்றுண்டுகேட்கிற்செவ்வான்றொடைமேல்
இரைக்கின்றபாம்பினை யென்றுந்தொடேலிழிந்தோட்டத்தெங்கும்
திரைக்கின்றகங்கையுந்தேனின்றகொன்றையுஞ் செஞ்சடைமேல்
* விரைக்கின்றவன்னியுஞ்சென்னித்தலைவைத்தவேதியனே............... (௭)

வேதியனைவேதப்பொருளானைவேதத்துக்
காதியனையாதிரைநன்னாளானைச்—சோதிப்பான்
வல்லேனமாய்ப்புக்குமாலவனு * மாட்டாது
கில்லேனமாவென்றான்கீழ்...................... .............................. (௮)

கீழாயினதுன்பவெள்ளக்கடற்றள்ளியுள்ளுறப்போய்
வீழாதிருந்தின்பம்வேண்டுமென்பீர்விரவார்புரங்கள்
பாழாயிடக்கண்டகண்டனெண்டோளன்பைம்பொற்கழலே
தாழாதிறைஞ்சிப்பணிந்துபன்னாளுந்தலைநின்மினே.. ............ ......... (௯)

தலையாயவைந்தினையுஞ்சாதித்துத்தாழ்ந்து
தலையாயினவுணர்ந்தோர்காண்பர்—தலையாய
அண்டத்தானாதிரையானாலாலமுண்டிருண்ட
கண்டத்தான்செம்பொற்கழல்............................................... (௰)

கழற்கொண்டசேவடிகாணலுற்றார்தம்மைப்பேணலுற்றார்
நிழற்கண்டபோழ்தத்துநில்லாவினைநிகரோதுமின்றித்
தழற்கொண்டசோதிச்செம்மேனியெம்மானைக்கைம்மாமலர்தூய்த்
தொழக்கண்டுநிற்கிற்குமோதுன்னிநம்மடுந்தொல்வினையே...... ...... (௧௧)

---

* விரைக்கின்ற - விரையென்னும் பெயரடியாகப்பிறந்த பெயரெச்சம்.
* மாட்டாதுகில்லேனமாவென்றான்- மாட்டாதுகில்லேன் - அம்மா- என்றான்- எனப்பிரித்துக்கொள்க.

தொல்லைவினைவந்துசூழாமுன்ருழாமே
ஒல்லைவணங்கியுமையென்னு—மெல்லியலோர்
கூற்ருனைக்கூற்றுருவங்காய்ந்தானைவாய்ந்திலங்கு
நீற்ருனைநெஞ்சேநினை........................................ (கஉ)

* நினையாதொழுதிகண்டாய்நெஞ்சமேயங்கோர்தஞ்சமென்று
மனையாளையுமக்கடம்மையுந்தேறியோராறுபுக்கும்
நனையாச்சடைமுடிநம்பனந்தாதைநொந்தாதசெந்தீ
யனையானமரர்பிரானண்டவாணனடித்தலமே........................ (கங)

அடித்தலத்தினன்றரக்க * னைஞ்ஞான்குதோளும்
முடித்தலமுநீமுரித்தவாறென்—முடித்தலத்தில்
ஆருடியாருவனலாடியவ்வனலின்
நீருடிநெய்யாடிநீ........................................ (கச)

நீநின்றுதானவர்மாமதின்மூன்றுநிரந்துடனே
தீநின்றுவேவச்சிலைதொட்டவாறென்றிரங்குவல்வாய்ப்
பேய்நின்றுபாடப்பெருங்காடரங்காப்பெயர்ந்துநட்டம்
போய்நின்றுபூதந்தொழச்செய்யுமொய்கழற்புண்ணியனே... ...... ... (கரு)

புண்ணியங்கள்செய்தனவும்போநெறிக்கட்சாராமே
எண்ணியோரைந்துமிசைந்தனவாற்—றிண்ணிய
கைம்மாவினீருரிவைமூவுருவும்போர்த்துகந்த
அம்மானுக்காட்பட்டவன்பு........................................ (கசு)

அன்பாலடைவதெவ்வாறுகொன்மேலதோராடரவந்
தன்பாலொருவரைச்சாரவொட்டார்தவேயுமன்றி
முன்பாயினதலையோடுகள்கோத்தவையார்த்துவெள்ளை
என்பாயினவுமணிந்தங்கோரேறுகந்தேறுவதே........................ (கஎ)

ஏறலாலேதமற்றில்லையேயெம்மானூர்
ஆறெலாம்பாயுமவிர்சடையார்—வேறூர்
* படங்குவளைநாகம்வளாய்ப்பண்டமரர் சூழ்ந்த
தடங்கடனஞ்சுண்டார்தமக்கு........................................ (கஅ)

தமக்கென்றுமின்பணிசெய்திருப்பேமுக்குத் தாமொருநாள்
எமக்கென்றுசொன்னாலருளுங்கொலாமிணையாதுமின்றிச்
சுமக்கின்றபிள்ளைவெள்ளேறொப்பதொன்றுதொண்டைக்கனிவா
யுமைக்கொன்றுதேடிப்பெருதுடனேகொண்டவுத்தமரோ...... ......... (கக)

உத்தமராய்வாழ்வாருலந்தக்காலுற்ருர்கள்
செத்தமரமடுக்கித்தீயாமு—னுத்தமனாய்
நீளாழிநஞ்சுண்டநெய்யாடிதன்றிறமே
கேள்வாழிநெஞ்சேகிளர்ந்து........................................ (உய)

திருச்சிற்றம்பலம்.

திருவிரட்டை மணிமாலை. முற்றுப்பெற்றது.

---

* நினையாத்தொழுதி - என்பதில் - தகரமெய் - தொகுத்தல்விகாரம்.

* ஐஞ்ஞான்கு - ஐகாரத்தின் பின்னின்றநகரம் ஞகரமாகநின்றது இடைநிலைப்போலி.

* படக்குல்வுநாகமுமிழ் - எனவும்பாடமுண்டு படங்குவளைநாகம்வளாய்- படத்தால் உலகத்தைவளைக்கும் பாம்பைவளைத்து - எனக்கொள்க.

திருச்சிற்றம்பலம்.

# காரைக்காலம்மையார் அருளிச்செய்த
# அற்புதத்திருவந்தாதி.

## நேரிசை வெண்பா.



பிறந்துமொழிபயின்றபின்னெல்லாங்காதல்
சிறந்துநின்சேவடியேசேர்ந்தே—னிறந்திகழு
மைஞ்ஞான்றகண்டத்துவானோர்பெருமானே
யெஞ்ஞான்றுதீர்ப்பதிடர்............................................(௧)

இடர்களையாரேனுமெமக்கிரங்காரேனும்
படருநெறிபணியாரேனுஞ்—சுடருருவி
லென்பறாக்கோலத்தெரியாடுமெம்மானார்க்
கன்பறாதென்னெஞ்சவர்க்கு............................................(௨)

அவர்க்கேயெழுபிறப்புமாளாவோமென்றும்
அவர்க்கேநாமன்பாவதல்லாற்* பவர்சடைமேல்
* வாகாப்போழ்சூடுமவர்க்கல்லான்மற்றொருவர்க்
காகாப்போமெஞ்ஞான்றுமாள்............................................(௩)

ஆளானோமல்லலறியமுறையிட்டாற்
கேளாததென்கொலோகோளாமை—நீளாகஞ்
செம்மையானாகித்திருமிடறுமற்றொன்றாம்
எம்மையாட்கொண்டவிறைக்கு............................................(௪)

இறையவனேயெவ்வுயிருந்தோற்றுவிப்பான்றோன்றி
யிறையவனேயீண்டிறக்கஞ்செய்வா—னிறையவனே
யெந்தாயெனவிரங்குமெங்கண்மேல்வெந்துயரம்
வந்தாலதுமாற்றுவான்............................................(௫)

வானத்தானென்பாருமென்கமற்றும்பர்கோன்
தானத்தானென்பாருந்தாமென்க—ஞானத்தான்
முன்னஞ்சத்தாலிருண்டமொய்யொளிசேர்கண்டத்தான்
என்னெஞ்சத்தானென்பன்யான்............................................(௬)

யானேதவமுடையேனென்னெஞ்சேநன்னெஞ்சம்
யானேபிறப்பறுப்பானெண்ணினேன்யானேயக்
கைம்மாவுரிபோர்த்தகண்ணுதலான்வெண்ணீற்ற
அம்மானுக்காளாயினேன்............................................(௭)

ஆயினேனாள்வானுக்கன்றேபெறற்கரிய
னாயினேனஃதன்றேயாமாறு—தூய
புனற்கங்கையேற்றானோர்பொன்வரையேபோல்வான்
அனற்கங்கையேற்றானருள்............................................(௮)

---

* பவர், கொடி.
* வாகாப்போழ்சூடும். என்பதற்கு. அழகாகமதியின்பிள வைச்சூடும். எனக் கொள்க.

அருளேயுலகெலாமாள்விப்பதீசன்
அருளேபிறப்பறுப்பதானு—லருளாலே
மெய்ப்பொருளைநோக்கும்விதியுடையேனெஞ்ஞான்றும்
எப்பொருளுமாவதெனக்கு.............................................. (கூ)

எனக்கினியவெம்மானையீசனையானென்றும்
மனக்கினியவைப்பாகவைத்தே—னெனக்கவனைக்
கொண்டேன்பிரானாகக்கொள்வதுமேயின்புற்றேன்
உண்டேயெனக்கரியதொன்று.............................................. (ய)

ஒன்றேநினைந்திருந்தேனொன்றேதுணிந்தொழிந்தேன்
ஒன்றேயென்னுள்ளத்தினுள்ளடைத்தே—னொன்றேகாண்
கங்கையான்றிங்கட்கதிர்முடியான்பொங்கொளிசேர்
அங்கையாற்காளாமது.............................................. (கக)

அதுவேபிரானாமாறாட்கொள்ளுமாறும்
அதுவேயினியறிந்தோமானால்—அதுவே
பனிக்கணங்குகண்ணியாரொண்ணுதலின்மேலோர்
தனிக்கணங்குவைத்தார்தகவு.............................................. (கஉ)

தகவுடையார்தாமுளரேற்றாரகலஞ்சாரப்
புகவிடுதல்பொல்லாதுகண்டீர்—மிகவடர
ஊர்ந்திடுமாநாகமொருநாண்மலைமகளைச்
சார்ந்திடுமேலேபாவந்தான்.............................................. (கங)

தானேதனிநெஞ்சந்தன்னையுயக்* கொள்வான்
றானேபெருஞ்சேமஞ்செய்யுமாற்—றானேயோர்
பூணாகத்தாற்பொலிந்துபொங்கழல்சேர்நஞ்சமிழு
நீணாகத்தானைநினைந்து.............................................. (கச)

நினைந்திருந்துவானவர்கணீண்மலராற்பாதம்
புனைந்துமடிபொருந்தமாட்டார்—நினைந்திருந்து
மின்செய்வான்செஞ்சடையாய்வேதியனேயென்கின்றேற்
கென்செய்வான்கொல்லோவினி.............................................. (கரு)

இனியோநாமுய்ந்தோமிறைவனருள்சேர்ந்தோம்
இனியோரிடரில்லோநெஞ்சே—யினியோர்
வினைக்கடலையாக்குவிக்குமீளாப்பிறவிக்
கனைக்கடலைநீந்தினோங்காண்.............................................. (கசா)

காண்பார்க்குங்காணலாந்தன்மையனேகைதொழுது
காண்பார்க்குங்காணலாங்காதலாற்—காண்பார்க்குச்
சோதியாய்ச்சிந்தையுளேதோன்றுமேதொல்லுலகுக்
காதியாய்நின்றவரன்.............................................. (கஎ)

அரனென்கோநான்முகனென்கோவரிய
பரனென்கோபண்புணரமாட்டேன்—முரணழியத்
தானவனைப்பாதத்தனிவிரலாற்செற்றானை
யானவனையெம்மானையின்று.............................................. (கஅ)

* கொள்வான், என்பதற்கு. கொள்ள எனப்பொருள் கொள்க.

இன்றுநமக்கெளிதேமாலுக்குநான்முகற்கும்
அன்றுமளப்பரியனானானை—யென்றுமோர்
மூவாமதியானைமூவேழுலகங்கள்
ஆவானைக்காணுமறிவு.......................................... (௧௯)

அறிவானுந்தானேயறிவிப்பான்றானே
யறிவாயறிகின்றான்றானே—யறிகின்ற
மெய்ப்பொருளுந்தானேவிரிசுடர்பாராகாயம்
அப்பொருளுந்தானேயவன்.......................................... (௨௦)

அவனேயிருசுடர்தீயாகாயமாவான்
அவனேபுவிபுனல்காற்றாவா—னவனே
யியமானனாயட்டமூர்த்தியுமாய்ஞான
மயனாகிநின்றானும்வந்து.......................................... (௨௧)

வந்திதனைக்கொள்வதேயொக்குமிவ்வாளரவின்
சிந்தையதுதெரிந்துகாண்மினோ—வந்தோர்
இராநீரிருண்டனையகண்டத்தீரெங்கள்
பிரானீருஞ்சென்னிப்பிறை.......................................... (௨௨)

பிறையும்புனலுமனலரவுஞ்சூடும்
இறைவரெமக்கிரங்காரேனும்—கறைமிடற்ற
எந்தையார்க்காட்பட்டேமென்றென்றிருக்குமே
* யெந்தையாவுள்ளமிது.......................................... (௨௩)

இதுவன்றேயீசன்றிருவுருவமாமா
றிதுவன்றேயென்றனக்கோர்சேம—மிதுவன்றே
மின்னுஞ்சுடருருவாய்மீண்டாயென்சிந்தனைக்கே
யின்னுஞ்சுழல்கின்றதிங்கு.......................................... (௨௪)

இங்கிருந்துசொல்லுவதெனெம்பெருமானெண்ணாதே
யெங்கும்பலிதிரியுமெத்திறமும்—பொங்கிரவில்
ஈமவனத்தாடுவதுமென்னுக்கென்றாராய்வோம்
நாமவனைக்காணலுற்றஞான்று.......................................... (௨௫)

ஞான்றகுழற்சடைகள்பொன்வரைபோன்மின்னுவன
போன்றகறைமிடற்றான்பொன்மார்பின்—ஞான்றெங்கும்
மிக்கயலேதோன்றவிளங்கிமிளிருமே
யக்கயலேவைத்தவரவு.......................................... (௨௬)

அரவமொன்றாகத்துநீயந்துபூணேல்
பரவித்தொழுதிரந்தோம்பன்னாண்—முரணழிய
ஒன்னாதார்மூவெயிலுமோரம்பாலெய்தோனே
பொன்னாரமற்றொன்றுபூண்.......................................... (௨௭)

பூணாகவொன்றுபுனைந்தொன்றுபொங்கதனில்
நாணாகமேன்மிளிரநன்கமைத்துக்—கோணாகம்

---

* தயா - என்பதன்-யகரமெய்முன்னின்ற- அகரம் தையா- எனமுதனிலைப் போலியாய்நின்றது.

பொன்முடிமேற்சூடுவதுமெல்லாம்பொறியிலியேற்
கென்முடியாதாகவிவர்............................................................ (உஅ)

இவரைப்பொருளுணரமாட்டாதாரெல்லாம்
இவரையிகழ்வதேகண்டீ—ரிவர்தமது
பூக்கோலமேனிப்பொடிபூசியென்பணிந்த
பேய்க்கோலங்கண்டார்பிறர்............................................................ (உகூ)

பிறரறியலாகாப்பெருமையருந்தாமே
பிறரறியும்பேருணர்வுந்தாமே—பிறருடைய
என்பேயணிந்திரவிற்றீயாடுமெம்மானார்
வன்பேயுந்தாமுமகிழ்ந்து............................................................ (௩0)

மகிழ்ந்திம்மடநெஞ்சேமானிடரினீயுந்
திகழ்ந்திப்பெருஞ்சேமஞ்சேர்ந்தா—லிகழாதே
யாரென்பேயேனுமணிந்துழல்வார்க்காட்பட்ட
பேரன்பேயின்னும்பெருகு............................................................ (௩க)

பெருகொளியசெஞ்சடைமேற்பிள்ளைப்பிறையின்
ஒருகதிரேபோந்தொழுகிற்றொக்குந்—தெரியின்
முதற்கண்ணான்முப்புரங்களன்றெரித்தான்மூவா
நுதற்கண்ணான்றன்மார்பினூல்............................................................ (௩உ)

நூலறிவுபேசிநுழைவிலாதார்திரிக
நீலமணிமிடற்றானீர்மையே—மேலுலகத்
தெக்கோலத்தெவ்வுருவாயெத்தவங்கள்செய்வார்க்கும்
அக்கோலத்தவ்வுருவேயாம்............................................................ (௩௩)

ஆமாறறியாமேவல்வினைகளந்தரத்தே
நாமாளென்றேத்தாநகர்மூன்றும்—வேமா
றொருகணையாற்செற்றானையுள்ளத்தாலுள்ளி
யருகணையாதாரையடும்............................................................ (௩௪)

அடுங்கண்டாய்வெண்மதியென்றஞ்சியிருள்போந்
திடங்கொண்டிருக்கின்றதொக்கும்—படங்கொள்
அணிமிடற்றபேழ்வாயரவசைத்தான்கோல
மணிமிடற்றினுள்ளமறு............................................................ (௩௫)

மறுவுடையகண்டத்தீர்வார்சடைமேனாகந்
தெறுமென்றுதேய்ந்துழலுமாவா—வுறுவான்
தளரமீதோடுமேற்றானதனையஞ்சி
வளருமோபிள்ளைமதி............................................................ (௩௬)

மதியாவடலவுணர்மாமதின்மூன்றட்ட
மதியார்வளர்சடையினானை—மதியாலே
யென்பாக்கையர்லிகழாதேத்துவரோயிவ்வுலகில்
என்பாக்கையாப்பிறவாரீண்டு............................................................ (௩எ)

ஈண்டொளிசேர்வானத்தெழுமதியைவாளரவந்
தீண்டச்சிறுகியதேபோலாதே—பூண்டதோர்.

தாரோறுபாம்புடையான்மார்பிற்றழைந்திலங்கு
கூரோறுகாரோனக்கொம்பு........................................ (ருஅ)

கொம்பினையோர்பாகத்துக்கொண்டகுழகன்றன்
அம்பவளமேனியதுமுன்னஞ்—செம்பொன்
அணிவரையேபோலும் பொடியணிந்தால்வெள்ளி
மணிவரையேபோலுமறித்து........................................ (ருகூ)

மறித்துமடநெஞ்சேவாயாலுஞ்சொல்லிக்
குறித்துத்தொழுதொண்டர்பாதங்—குறித்தொருவர்
கொள்ளாததிங்கட்குறுங்கண்ணிகொண்டார்மாட்
டுள்ளாதார்கூட்டமொருவு........................................ (சo)

ஒருபாலுலகளந்தமாலவனுமற்றை
யொருபாலுமையவளாமென்று—லிருபாலும்
நின்னுருவமாகநிறந்தெரியமாட்டோமால்
நின்னுருவோமின்னுருவோநேர்ந்து........................................ (சக)

நேர்ந்தரவங்கொள்ளச்சிறுகிற்றேநீயதனை
யீர்ந்தளவேகொண்டிசையவைத்தாயோ—பேர்ந்து
வளங்குழவித்தாய்வளரமாட்டாதோவென்றோ
இளங்குழவித்திங்களிது........................................ (சஉ)

திங்களதுசூடிச்சில்பலிக்கென்றூர்திரியேல்
எங்கள்பெருமானேயென்றறிந்து—பொங்கொளிய
வானோர்விலக்காரோல்யாம்விலக்கவல்லமே
தானேயறிவான்றனக்கு........................................ (சங)

தனக்கேயடியேனாய்த்தன்னடைந்துவாழும்
எனக்கேயருளாவாறென்கொன்—மனக்கினிய
சீராளன்கங்கைமணவாளன்செம்மேனிப்
பேராளன்வானோர்பிரான்........................................ (சச)

பிரானவனைநோக்கும்பெருநெறியேபேணிப்
பிரானவன்றன்பேரருளேவேண்டிப்—பிரானவனை
எங்குற்றானென்பீர்களென்போல்வார்சிந்தையினும்
இங்குற்றான்காண்பார்க்கெளிது........................................(சரு)

எளியதிதுவென்றேயேழைகாள்யாதும்
அளியீரறிவிலீராவா—வொளிகொண்மிடற்
றெந்தையராப்பூண்டுழலுமெம்மானையுண்ணினைந்த
சிந்தையராய்வாழுந்திறம்........................................(சசு)

திறத்தான்மடநெஞ்சேசென்றடைவதல்லாற்
பெறத்தானுமாதியோபேதாய்—நிறத்த
* இருவடிக்கணேழைக்கொருபாகமீந்தான்
திருவடிக்கட்சேருந்திரு........................................ (சஎ)

---

* வடி - மாவடுவின்பிளவு.

திருமார்பிலேனச்செழுமருப்பைப்பார்க்கும்
பெருமான்பிறைக்கொழுந்தைநோக்கு—மொருநாள்
இதுமதியென்றொன்றாகவின்றளவுந்தேரா
ததுமதியொன்றில்லாவரா........................................ (௪௮)

அராவிவளைத்தனையவங்குழவித்திங்கள்
விராவுகதிர்விரியவோடி—விராவுதலாற்
பொன்னோடுவெள்ளிப்புரிபுரிந்தாற்போலவே
தன்னோடேயொப்பான்சடை........................................ (௪௯)

சடைமேலக்கொன்றைதருகனிகள்போந்து
புடைமேவித்தாழ்ந்தனவேபோலு—முடிமேல்
வலப்பாலக்கோலமதிவைத்தான்றன்பங்கின்
குலப்பாவைநீலக்குழல்........................................ (௫௦)

குழலார்சிறுபுறத்துக்கோல்வளையைப்பாகத்
தெழிலாகவைத்தேகவேண்டாம்—கழலார்ப்பப்
பேரிரவிலீமப்பெருங்காட்டிற்பேயோடும்
ஆரழல்வாய்நீயாடுமங்கு........................................ (௫௧)

அங்கண்முழுமதியஞ்செக்கரகல்வானத்
தெங்குமினிதெழுந்தாலொவ்வாதே—செங்கண்
திருமாலைப்பங்குடையான்செஞ்சடைமேல்வைத்த
சிரமாலைத்தோன்றுவதோர்சீர்........................................ (௫௨)

சீரார்ந்தகொன்றைமலர்தழைப்பச்சேணுலவி
நீரார்ந்தபேரியாறுநீத்தமாய்ப்—போரார்ந்த
நாண்பாம்புகொண்டசைத்தநம்மீசன்பொன்முடிதான்
காண்பார்க்குச்செவ்வேயோர்கார்........................................ (௫௩)

காருருவக்கண்டத்தெங்கண்ணுதலையெங்கொளித்தாய்
* ஒருருவாய்நின்னோடுழிதருவா—னீருருவ
மேக்த்தாற்செய்தனையமேனியானின்னுடைய
பாதத்தான்காணுமேபண்டு........................................ (௫௪)

பண்டமரரஞ்சப்படுகடலினஞ்சுண்டு
கண்டங்கறுத்ததுவுமன்றியே—யுண்டு
பணியுறுவார்செஞ்சடைமேற்பான்மதியினுள்ளே
மணிமறுவாய்த்தோன்றும்வடு........................................ (௫௫)

வடுவன்றெனக்கருதிநீமதித்தியாயின்
சுடுவெண்பொடிநிறத்தாய்சொல்லாய்—படுவெண்
புலாற்றலையினுள்ளூண்புறம்பேசக்கேட்டோ
நிலாத்தலையிற்சூடுவாய்நீ........................................ (௫௬)

நீயுலகமெல்லாமிரப்பினுநின்னுடைய
தீயவரவொழியச்செல்கண்டாய்—தூய
மடவரலார்வந்துபலியிட்டாரஞ்சி
விடவரவமேலாடமிக்கு........................................ (௫௭)

* உழிதரல் - சுழலல்.

மிக்கமுழங்கெரியும்வீங்கியபொங்கிருளும்
ஒக்கவுடனிருந்தாலொவ்வாதே—செக்கர்போல்
ஆகத்தான்செஞ்சடையுமாங்கவன்றன்பொன்னுருவிற்
பாகத்தாள்பூங்குழலும்பண்பு.......................................... (ருஅ)

பண்புணரமாட்டேனீயேபணித்துக்காண்
கண்புணருநெற்றிக்கறைக்கண்டா—பெண்புணரும்
அவ்வுருவோமாலுருவோவானேற்றாய்நீறணிவ
தெவ்வுருவோநின்னுருவமேல்.......................................... (ருகூ)

மேலாயமேகங்கள்கூடியோர்பொன்விலங்கல்
போலாமொளிபுதைத்தாலொவ்வாதே—மாலாய
கைம்மாமதக்களிற்றுக்காருரிவைப்போர்த்தபோ
தம்மான்றிருமேனியன்று.......................................... (சூ0)

அன்றுந்திருவுருவங்காணாதேயாட்பட்டேன்
இன்றுந்திருவுருவங்காண்கிலே—னென்றுந்தான்
எவ்வுருவோனும்பிரானென்பார்கட்கென்னுரைக்கேன்
எவ்வுருவோநின்னுருவமேது.......................................... (சூக)

ஏதொக்குமேதொவ்வாதேதாகுமேதாகா
தேதொக்குமென்பதனையாரறிவார்—பூதப்பால்
வில்வேடனாகிவிசயனோடேற்றநாள்
வல்வேடனானவடிவு.......................................... (சூஉ)

வடிவுடையசெங்கதிர்க்குமாறாய்ப்பகலே
நெடிதுலவிநின்றெறிக்குங்கொல்லோ—கடியுலவு
சொன்முடிவொன்றில்லாதசோதியாசொல்லாயால்
நின்முடிமேற்றிங்கணிலா.......................................... (சூந)

நிலாவிலங்குவெண்மதியைநேடிக் * கொள்வான்போ
லுலாவியுழிதருமாகொல்லோ—நிலாவிருந்த
செக்கரவ்வானமேயொக்குந்திருமுடிக்கே
புக்கரவங்காலையேபோந்து.......................................... (சூச)

காலையேபோன்றிலங்குமேனிகடும்பகலின்
வேலையேபோன்றிலங்கும்வெண்ணீறு—மாலையின்
தாங்குருவேபோலுஞ்சடைக்கற்றைமற்றவற்கு
வீங்கிருளேபோலுமிடறு.......................................... (சூரு)

மிடற்றில்விடமுடையீரும்மிடற்றைநக்கி
மிடற்றில்விடங்கொண்டவாறே—மிடற்றகத்து
* மைத்தாமிருள்போலும்வண்ணங்கரிதாலோ
பைத்தாடும்மார்பிற்பாம்பு.......................................... (சூசூ)

---

* கொள்வான் - என்பதில் - வான் - தொழிற்பெயர்விகுதி.

* தாவும் - என்பதின் - ஈற்றின்மேனின்றவுகரம் தன்னாலூரப்பட்ட மெய்யோடு கெட்டது - தொல்காப்பியம் - வினையியல் "அவற்றுள் - செய்யுமென்னும் பெயரொஞ்சுகிளவிக்கு மெய்யொடுங் கெடுமேயீற்று மிசையுகரம் - அவ்விடனறிதலென்மனார்புலவர்." என்னும் சக-ம் சூத்திரத்தாட்காண்க.

பாம்புமதியுமடமானும்பாய்புலியுந்
தாம்பயின்றுதாழருவிதாங்குதலா—லாம்பொன்
உருவடிவிலோங்கொளிசேர்கண்ணுதலான்கோலத்
திருவடியின்மேயசிலம்பு........................................................ (சுஎ)

சிலம்படியாளூடலைத்தான்றவிர்ப்பான்வேண்டிச்
சிலம்படிமேற்செவ்வரத்தஞ்சேர்த்து—நலம்பெற்
றெதிராயசெக்கரினுமிக்கோலஞ்செய்தான்
முதிராமதியான்முடி........................................................ (சுஅ)

முடிமேற்கொடுமதியான்முக்கணனல்ல
வடிமேற்கொடுமதியோங்கூற்றைப்—படிமேற்
குனியவலமாமடிமைகொண்டாடப்பெற்றோம்
இனியவலமுண்டோவெமக்கு........................................................ (சுகூ)

எமக்கிதுவோபேராசையென்றுந்தவிரா
தெமக்கொருநாள்காட்டுதியோவெந்தாய்—அமைக்கவே
போந்தெரிபாய்ந்தன்னபுரிசடையாய்பொங்கிரவில்
ஏந்தெரிபாய்ந்தாடுமிடம்........................................................ (எ0)

இடப்பாலவானத்தெழுமதியைநீயோர்
மடப்பாவைதன்னருகேவைத்தா—லிடப்பாகங்
கொண்டாண்மலைப்பாவைகூறொன்றுங் கண்டிலங்காண்
கண்டாயேமுக்கண்ணாய்கண்........................................................ (எக)

கண்டெந்தையென்றிறைஞ்சிக்கைப்பணியான்செய்யேனேல்
அண்டம்பெறினுமதுவேண்டேன்—றுண்டஞ்சேர்
விண்ணாளுந்திங்களாய்மிக்குலகமேழினுக்குங்
கண்ணாளாவீதென்கருத்து........................................................ (எஉ)

கருத்திணீகருதினெல்லாமுடனே
திருத்தலாஞ்சிக்கெனநான்சொன்னேன்—பருத்தரங்க
வெள்ளநீரேற்றானடிக்கமலநீவிரும்பி
உள்ளமேயெப்போதுமோது........................................................ (எங)

ஓதநெடுங்கடல்களெத்தனையுமுய்த்தட்ட
ஏதுநிறைந்தில்லையென்பராற்—பேதையர்கள்
எண்ணிடும்பலியாலென்ணோநிறைந்தவா
கண்ணார்கபாலக்கலம்........................................................ (எச)

கலங்குபுனற்கங்கையூடாடலாலும்
இலங்குமதியியங்கலாலு—நலங்கொள்
பரிசுடையானீண்முடிமேற்பாம்பியங்கலாலும்
விரிசடையாங்காணில்விசும்பு........................................................ (எரு)

விசும்பில்விதியுடையவிண்ணோர்பணிந்து
பசும்பொன்மணிமகுடந்தேய்ப்ப—முசிந்தெங்கும்
எந்தாய்தழும்பேறியேபாவம்பொல்லாவாம்
அந்தாமரைபோலடி........................................................ (எசு)

அடிபேரிற்பாதாளம்பேருமடிகள்
முடிபேரின்மாமுகடுபேரும்—கடக
மறிந்தாடுகைபேரில்வான்றிசைகள்பேரும்
அறிந்தாடுமாற்றாதரங்கு.......................................... (எஎ)

அரங்கமாய்ப்பேய்க்காட்டிலாடுவான்வாளா
இரங்குமோவெவ்வுயிர்க்குமேழா—யிரங்குமேல்
என்னாகவையான்றானெவ்வுலகமீந்தளியான்
பன்னாளிரந்தாற்பணிந்து.......................................... (எஅ)

பணிந்தும்படர்சடையான்பாதங்கள்போதால்
அணிந்துமணிந்தவரையேத்தத்—துணிந்தென்றும்
எந்தையார்க்காட்செய்யப்பெற்றவிதுகொலோ
சிந்தையார்க்குள்ளசெருக்கு.......................................... (எகூ)

செருக்கினால்வெற்பெடுத்தவெத்தனையோதிண்டோள்
அரக்கனையுமுன்னின்றடர்த்த—திருத்தக்க
மாலயனுங்காணாதரற்றிமகிழ்ந்தேத்தக்
காலனையும்வென்றுதைத்தகால்.......................................... (அ0)

காலனையும்வென்றோங்கடுநரகங்கைகழன்றோம்
மேலையிருவினையும்வேரறுத்தோங்—கோல
அரணாரவிந்தழியவெந்தீயம்பெய்தான்
சரணாரவிந்தங்கள்சார்ந்து.......................................... (அக)

சார்ந்தார்க்குப்பொற்கொழுந்தேயொத்திலங்கிச்சாராது
பேர்ந்தார்க்குத்தீக்கொடியின்பெற்றியதாம்—தேர்ந்துணரின்
தாழ்சுடரோன்செங்கதிருஞ்சாயுந்தழல்வண்ணன்
வீழ்சடையேயென்றுரைக்குமின்.......................................... (அஉ)

மின்போலுஞ்செஞ்சடையான்மாலோடுமீண்டிசைந்தால்
என்போலுங்காண்பார்கட்கென்றிரேற்—றன்போலும்
பொற்குன்றுநீலமணிக்குன்றுந்தாமுடனே
நிற்கின்றபோலுநெடிது.......................................... (அங)

நெடிதாயபொங்கெரியுந்தண்மதியுநேரே
கடிதாங்கடுஞ்சுடரும்போலுங்—கொடிதாக
விண்டார்கண்மும்மதிலும்வெந்தீயினிலழியக்
கண்டாலுமுக்கணான்கண்.......................................... (அச)

கண்ணாரக்கண்டுமென்கையாரக்கூப்பியு
மெண்ணாரவெண்ணத்தாலெண்ணியும்—விண்ணோன்
எரியாடியென்றென்றுமின்புறுவன்கொல்லோ
பெரியானைக்காணப்பெறின்.......................................... (அரு)

பெறினும்பிறிதியாதும்வேண்டேநமக்கீ
துறினுமுறாதொழியுமேனுஞ்—சிறிதுணர்த்தி
மற்றொருகணெற்றிமேல்வைத்தான்றன்பேயாய
நற்கணத்திலொன்றாயநாம்.......................................... (அசு)

நாமாலை சூடியுநம்மீசன்பொன்னடிக்கே
பூமாலைகொண்டுபுனைந்தன்பாய்—நாமோர்
அறிவினையேபற்றினாலெற்றேதடுமே
எறிவினையேயென்னுமிருள்........................ ............ ......... (௮௭)

* இருளினுருவென்கோமாமேகமென்கோ
மருளின்மணிநீலமென்கோ—வருளெமக்கு
நன்றுடையாய்செஞ்சடைமேனக்கிலங்குவெண்மதியம்
ஒன்றுடையாய்கண்டத்தொளி.......................................... (௮௮)

ஒளிவிலிவன்மதனையொண்பொடியாநோக்கித்
தெளிவுள்ளசிந்தையினிற்சேர்வா—யொளிநஞ்சம்
உண்டவாயஃதிருப்பவுன்னுடையகண்டமிருள்
கொண்டவாறென்னிதனைக்கூறு.................. ............ ......... (௮௯)

கூறெமக்கீதெந்தாய்குளிர்சடையைமீதழித்திட்
டேறமிகப்பெருகினென்செய்தி—சீறி
விழித்தூரும்வாளரவும்வெண்மதியுமீர்த்துத்
தெழித்தோடுங்கங்கைத்திரை.......................... ............ (௯௦)

திரைமருவுசெஞ்சடையான்சேவடிக்கேயாளாய்
உரைமருவியாமுணர்ந்தோங்கண்டீர்—தெரிமினோ
இம்மைக்குமம்மைக்குமெல்லாமமைந்தோமே
எம்மைப்புறனுரைப்பதென்.............................. ............. (௯௧)

என்னையுடையானுமேகமாய்நின்றானுந்
தன்னையறியாததன்மையனும்—பொன்னைச்
சுருளாகச்செய்தனையதூச்சடையான்வானோர்க
கருளாகவைத்தவவன்.................................. ............... (௯௨)

அவன்கண்டாய்வானோர்பிரானாவானென்றும்
அவன்கண்டாயம்பவளவண்ண—னவன்கண்டாய்
* மைத்தமர்ந்தகண்டத்தான்மற்றவன்பானன்னெஞ்சே
மெய்த்தமர்ந்தன்பாய்நீவிரும்பு...... ..................... ........... (௯௩)

விருப்பினாணீபிரியகில்லாயோவேறு
இருப்பிடமற்றில்லையோவென்னோ—பொருப்பன்மகள்
மஞ்சுபோன்மால்விடையாய்நிற்பிரிந்துவேறிருக்க
அஞ்சுமோசொல்லாயவள்.................................... ............(௯௪)

அவளோர்குலமங்கைபாகத்தகலாள்
இவளோர்சலமகளுமீதே—தவளநீ
றென்பணிவீரொன்றும்பிரிந்தறியீரிங்கிவருள்
அன்பணியார்சொல்லுமினிங்கார்........................................ (௯௫)

---

* என்கோ - என்று சொல்லுவேனோ எனக்கொள்க - என்கோ- என்கு - ஓ - கு - தனித் தன்மையீறு - தொல்காப்பியம் வினையியல் "கடதறவென்னு- மந் நான் கூர்ந்த -குன்றி யலுகரமோடென்னே னல்லென" என்னும் - ௯ - ம் சூத்திரத்திற்காண்க.

* மைத்து என்பதில் - து - பகுதிப்பொருள்விகுதி.

ஆர்வல்லார்காணவரனவனையன்பென்னும்
போர்வையதனாலேபோர்த்தமைத்துச்—சீர்வல்ல
தாயத்தானுமுந்தனிநெஞ்சினுள்ளடைத்து
மாயத்தால்வைத்தோமறைத்து ........................................(கசு)

மறைத்துலகமேழினிலும்வைத்தாயோவன்றேல்
உறைப்போடுமுன்கைக்கொண்டாயோ—நிறைத்திட்
டுளைந்தெழுந்துதீயெரிப்பமூவுலகுமுள்புக்
களைந்தெழுந்தசெந்தீயழல் ........................................(கஎ)

அழலாடவங்கைசிவந்ததோவங்கை
அழகாலழல்சிவந்தவாறோ—கழலாடப்
பேயாடுகானிற்பிறங்கவனலேந்தித்
தீயாடுவாயிதனைச்செப்பு ........................................(கஅ)

செப்பேந்திளமுலையாள்காணவோதீப்படுகாட்
டப்பேய்க்கணமவைதாங்காணவோ—செப்பெனக்கொன்
றாகத்தானங்காந்தனலுமிழுமைவாய
நாகத்தாயாடுன்னடம் ........................................(கக)

நடக்கிற்படிநடுங்குநோக்கிற்றிசைவேம்
இடிக்கினுலகனைத்துமேங்கு—மடக்கற்
பொருமேறேவானேறேபொன்னொப்பாய்நின்னே
றுருமேறேவொன்றுவுரை ........................................(க00)

உரையினாலிம்மாலையந்தாதிவெண்பாக்
கரைவினாற்காரைக்காற்பேய்சொற்—பரவுவார்
ஆராதவன்பினோடண்ணலைச்சென்றேத்துவார்
பேராதகாதல்பிறந்து ........................................(க0க)

## அற்புதத் திருவந்தாதி

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

அறுபத்துமூன்று நாயன்மாரு ளொருவராகிய

# ஐயடிகள்காடவர்கோனாயனார்

அருளிச்செய்த க்ஷேத்திரத்

## திருவெண்பா.



ஓடுகின்றநீர்மையொழிதலுமேயுற்றாரும்
கோடுகின்றார்மூப்புங்குறுகிற்று—நாடுகின்ற

* நல்லச்சிற்றம்பலமேநண்ணுமுனன்னெஞ்சே
* தில்லைச்சிற்றம்பலமேசேர்....................................................... (க)

கடுவடுத்தநீர்கொடுவாகாடிதாவென்று
நடுநடுத்துநாவடங்காமுன்னம்—பொடியடுத்த
* பாழ்க்கோட்டஞ்சேராமுன் பன்மாடத்தென்குடந்தைக்
கீழ்க்கோட்டஞ்செப்பிக்கிட....................................................... (உ)

குந்திநடந்துகுனிந்தொருகைகோலூன்றி
நொந்திருமியேங்கிநுரைத்தேறி—வந்துந்தி
* யையாறுவாயாறுபாயாமுனெஞ்சமே
யையாறுவாயாலழை....................................................... (ங)

காலைவடிவொழிந்து * கையறவோடையுறவாய்
நாளுமணுகிநலியாமுன்—பாளை
யவிழ்கமுகம்பூஞ்சோலையாரூரற்காளாய்க்
கவிழ்கமுகங்கூம்புகவென்கை....................................................... (ச)

வஞ்சியனநுண்ணிடையார்வாட்டடங்கணீர்சோரக்
குஞ்சிகுறங்கின்மேற்கொண்டிருந்து * கஞ்சி
யருத்தொருத்திகொண்டுவாவென்னுமுன்னெஞ்சே
திருத்துருத்தியான்பாதஞ்சேர்....................................................... (ரு)

காலைக்கனாயிழையாற்கட்டித்தன்கையார்த்து
மாலைதலைக்கணிந்துமையெழுதி—மேலோர்
* பருக்கோடிமூடிப்பலரழாமுன்னந்
திருக்கோடிகாவடைநீசென்று....................................................... (சு)

மாண்டுவாயங்காவாமுன்னமடநெஞ்சே
வேண்டுவாயாகில்விரைந்தொல்லைப்—பாண்டவாய்த்
தென்னிடைவாய்மேயசிவனார்திருநாம
நின்னிடைவாய்வைத்துநினை....................................................... (எ)

தொட்டுத்தடவித்துடிப்பொன்றுங்காணாது
பெட்டப்பிணமென்றுபேரிட்டுக்—கட்டி
* யெடுங்களத்தாவென்னுமுன்னேழைமடநெஞ்சே
நெடுங்களத்தான்பாதநினை....................................................... (அ)

---

* நல்லச்சிற்றம்பலம் - கரியசிறியபொதுவிடம் - நரகமென்பது பொருள்.

* சித் - அம்பலம் சிற்றம்பலம் - இது வடமொழித்திரிபு - சிற்றம்பலம்- ஞான அம்பலம்.

* பாழ்க்கோட்டப் - பாழாகிய சுடுகாடு - பாழ் - பழமையென்னும் பண்பின் றிரிபு.

* ஐயாறு - கோழையாகிய ஆறு.

* கையறவு - துன்பம்.

* கஞ்சியருத்தொருத்திகொண்டுவா - கஞ்சி - அருத்து - ஒருத்தி - கொண்டுவா - எனப்பிரிக்க.

* பருக்கோடி மூடி - பரியகோடியால்மூடி - எனக்கொள்க.

* எடுங்களத்தாவென்று - எடும்- களத்து - ஆ - என்று- எனப்பிரிக்க.

அழுகுதிரிகுரம்பையாங்கதுவிட்டாவி
யொழுகும்பொழுதறியவொண்ணா—கழுகு
* கழித்துண்டலையாமுன்காவிரியின்றென்பாற்
குழித்தண்டலையானைக்கூறு........................................................ (௯

படிமுழுதும்வெண்குடைக்கீழ்ப்பாரெலாமாண்ட
முடியரசர்செல்வத்துமும்மை—கடியிலங்கு
தோடேந்துகொன்றையந்தார்ச்சோதிக்குத்தொண்டுபட்
டோடேந்தியுண்பதுறும்........................................................ (௧0)

குழீஇயிருந்த சுற்றங்குணங்கள்பாராட்ட
வழீஇயிருந்தவங்கங்களெல்லாந்—தழீஇயிருந்து
* மென்னானைக்காவாவிதுதகாவென்னுமுன்
றென்னானைக்காவடைநீசென்று........................................................ (௧௧)

குயிலொத்திருள்குஞ்சிகொக்கொத்திருமல்
பயிலப்புகாமுன்னநெஞ்சே—மயிலைத்
திருப்புன்னையங்கானல்சிந்தியாயாகி
* லிருப்புன்னையங்காந்திளைத்து........................................................ (௧௨

காளையர்களிளையர்களாகிக்கருமயிரும்
பூளையெனப்பொங்கிப்பொலிவழிந்து—சூளையர்க
* ளோகாளஞ்செய்யாமுனெஞ்சமேயுஞ்சேனை
மாகாளங்கைதொழுதுவாழ்த்து........................................................ (௧௩)

இல்லும்பொருளுமிருந்தமனையளவே
சொல்லுமயலார்துடிப்பளவே—நல்ல
கிளைகுளத்துநீரளவேகிற்றியேநெஞ்சே
வளைகுளத்துளீசனையேவாழ்த்து........................................................ (௧௪)

அஞ்சனஞ்சேர்கண்ணாருருவருக்குமப்பதமாய்க்
குஞ்சிவெளுத்துடலங்கோடாமுன்—னெஞ்சமே
போய்க்காடுகூடப்புலம்பாதுபூம் * புகார்ச்
சாய்க்காடுகைதொழுநீசார்ந்து........................................................ (௧௫)

இட்டகுடிநீரிருநாழியோருழக்காச்
சட்டவொருமுட்டைநெய்தான்கலந்—தட்ட
வருவாச்சாறொன்றங்கழாமுன்னம்பாச்சிற்
திருவாச்சிராமமேசேர்........................................................ (௧௬)

கழிந்தது * நென்னற்றுக்கட்டுவிட்டுநாறி
யொழிந்ததுடலிராவண்ண—மழிந்த

---

* கழித்துண்டலையாமுன் - கழித்து - உண்டு - அலையாமுன் - எனப்பிரிக்க.
* என்னானைக்காவா- என் - ஆனைக்கு - ஆவா - எனப்பிரிக்க.
* இருப்பு - உன் - ஐ - எனப்பிரிக்க - ஐ - சாரியை.
* ஓகாளம் - அருவருப்பு.
* புகார் - காவிரிப்பூம்பட்டினம்.
* நென்னற்று - நென்னல் - து - று - பகுதிப்பொருள்விகுதி.

* திராமலையாகொண்டுபோவென்றுமுன்னெஞ்சே
சிராமாலையான்பாதமேசேர்........................................ (கஎ)

இழவாடிச்சுற்றத்தாரெல்லாருங்கூடி
விழவாடியாவிவிடாமுன்ன—மழபாடி
யாண்டானையாரமுதையன்றயன்மால்காணாமை
நீண்டானைநெஞ்சேநினை........................................ (கஅ)

உள்ளிடத்தான்வல்லையேனெஞ்சமேயூழ்வினைகள்
கள்ளிடத்தான்வந்துகலவாமுன்—கொள்ளிடத்தின்
றென்றிருவாப்பாடியான்றெய்வமறைநான்கினையுந்
* தன்றிருவாய்ப்பாடியான்றாள்........................................ (கக)

என்னெஞ்சேயுன்னையிரந்துமுரைக்கின்றேன்
கன்னெஞ்சேய்வாயாகிற்காலத்தால்—வன்னஞ்சேய்
மாகம்பத்தானையுரித்தானைவண்கச்சி
யேகம்பத்தானையிறைஞ்சு........................................ (உ௦)

கரமூன்றிக்கண்ணிடுங்கிக்கால்குலையமற்றோர்
மரமூன்றிவாய்குதட்டாமுன்னம்—புரமூன்றுந்
தீச்சரத்தாற்செற்றான்றிருப்பனந்தாட்டாடகைய
வீச்சரத்தான்பாதமேயேத்து........................................ (உக)

தஞ்சாகமூவுலகுமாண்டுதலையளித்திட்
டெஞ்சாமைபெற்றிடினும் யான்வேண்டேன்—நஞ்சங்
கரந்துண்டகண்டர்தம் மொற்றியூர்பற்றி
யிரந்துண்டிருக்கப்பெறின்........................................ (உஉ)

நூற்றனைத்தோர்பல்லூழிநுண்வயிரவெண்குடைக்கீழ்
வீற்றிருந்தசெல்வம்விழையாதே—கூற்றுதைத்தான்
ஆடரவங்கச்சாவரைக்கசைத்தவம்மான்றன்
பாடரவங்கேட்டபகல்........................................ (உ௩)

உய்யுமருந்திதனையுண்மினெனவுற்றார்
கையைப்பிடித்தெதிரே காட்டியக்காற்—பைய
வெழுந்திருமியான்வேண்டேனென்றுமுனெஞ்சே
செழுந்திருமயானமேசேர்........................................ (உச)

ஐயடிகள் காடவர் கோனாயனார் அருளிச்செய்த
க்ஷேத்திரத்திருவெண்பாத்
திருப்பிரபந்தம். முற்றிற்று.

---

* இராமலையா - இராமல் - ஐயா - எனப்பிரிக்க.
* தன்றிருவாய்ப்பாடியான் - தனது திருவாயாற்சொன்னவனெனக்கொள்க.

திருச்சிற்றம்பலம்.



# சேரமான்பெருமாணயனூர்

## அருளிச்செய்த பொன்வண்ணத்தந்தாதி.

பொன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமேனிபொலிந்திலங்கு
மின்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணம்வீழ்சடைவெள்ளிக்குன்றந்
தன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமால்விடைதன்னைக்கண்ட
வென்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமாகியவீசனுக்கே................ (க)

ஈசனைக்காணப்பலிகொடுசெல்லவெற்றேயிவளோர்
பேயனைக்காமுறுபிச்சிகொலாமென்றுபேதையர்முன்
றாயெனையீர்ப்பத்தமியேன்றளரவத்தாழ்சடையோன்
வாவெனைப்புல்லவென்றுனிமைவிண்டனவாட்கண்களே................ (உ)

* கண்களங்கஞ்செய்யக்கைவளைசோரக்கலையுஞ்செல்ல
வொண்களங்கண்ணுதல்வேர்ப்பவொண்கொன்றையந்தாருருவப்
பெண்களங்கம்மிவள்பேதுறுமென்பதோர்பேதைநெஞ்சம்
பண்களங்கம்மிசைபாடநின்றும்பரமனையே......... ..................... (ங)

* பரமனையேபலிதேர்ந்துநஞ்சுண்டதுபன்மலர்சேர்
பிரமனையேசிரங்கொண்டுங்கொடுப்பதுபேரருளாஞ்
சரமனையேயுடம்பட்டுமுடம்பொடுமாதிடமாம்
வரமனையேகிளையாகுமுக்கண்ணுடைமாதவனே........... .................... (ச)

தவனேயுலகுக்குத்தானேமுதறுன்படைத்தவெல்லாஞ்
சிவனேமுழுதுமென்பார்சிவலோகம்பெறுவர்செய்ய
வவனேயடல்விடையூர்திகடலிடைநஞ்சமுண்ட
* பவனேயெனச்சொல்லுவாரும்பெறுவரிப்பாரிடமே..................... (ரு)

இடமால்வலந்தானிடப்பாறுழாய்வலப்பாலொண்கொன்றை
வடமாலிடந்துகிருேல்வல்மாழியிடம்வலமா
னிடமால்கரிதால்வலஞ்சேதிவனுக்கெழினலஞ்சேர்
* குடமாலிடம்வலங்கொக்கரையாமெங்கள்கூத்தனுக்கே............... (சா)

கூத்துக்கொலாமிவராடித்திரிவதுகோல்வளைகள்
* பாத்துக்கொலாம்பலிதேர்வதுமேனிபவளங்கொலா

---

* கண்களங்கஞ்செய்ய - கண்கள் - அங்கு - அம் - செய்ய - எனப்பிரிக்க அம் - சலம்.

* பரமனை - ஏதிலர்மனை - சரமனை - சரம்- மன் - ஐ - எனப்பிரிக்க - சாமன் மன்மதன்.

* பவன் - ஆன்மாக்களுக்குப்பந்தமருள்வோன்.

* குடம் - விட்டுணுவின் கூத்து - கொக்கரை- கொக்கரித்தல்.

* பாத்து - உணவு.

மேத்துக்கொலாமிவராதரிக்கின்றதிமையவர்த
மோத்துக்கொலாமிவர்கண்டதிண்டைச்சடையுத்தமரோ.................. (எ)

உத்தமராயடியாருலகாளத்தமக்குரிய
மத்தமராமதிமாடம்பதிநலஞ்சேர்மைகுன்று
வெத்தமராயும்பணிகொள்ளவல்லவிறைவர்வந்தென்
சித்தமராயகலாதுடனாடித்திரிதவரோ.............................. (அ)

திரிதவர்கண்ணுள்ளுமுள்ளத்தினுள்ளுந்திரிதரினு
மரிதவர்தன்மையறிவிப்பதாயினுமாழிநஞ்சேய்
கரிதவர்கண்டம்வெளிதவர்சாந்தங்கண்மூன்றுடொன்றும்
பரிதவர்தாமேயருள்செய்துகொள்வர்தம்பல்பணியே.................. (கூ)

பணிபதம்பாடிசையாடிசையாகப்பனிமலரா
லணி * பதங்கன்பற்கொளப்பனையத்தவற்கேயடிமை
துணிபதங்காமுறுதோலொடுநீறுடனூர்த்துநல்ல
தணிபதங்காட்டிடுஞ்சஞ்சலநீயென்றனிநெஞ்சமே...... ................ (க0)

நெஞ்சந் * தளிர்விடக்கண்ணீர்ததும்பமுகமலர
வஞ்செங்கரதலங்கூம்பவட்டாங்கமடிபணிந்து
தஞ்சொன்மலராலணியவல்லோர்கட்குத்தாழ்சடையான்
வஞ்சங்கடிந்துதிருத்திவைத்தான்பெருவானகமே......... ............ (கக)

வானகமாண்டுமந்தாகினியாடிநந்தாவனஞ்சூழ்
தேனகமாமலர்சூடிச்செல்வோருஞ் * சிதவல்சுற்றிக்
கானகந்தேயத்திரிந்திரப்பேரருங்கனகவண்ணம்
பானிறநீற்றற்கடியருமல்லாப்படிறருமே.................................. (கஉ)

படிறுயினசொல்லிப்பாழுடலோம்பிப்பலகடைச்சென்
றிடறுதொழிதுமெழுநெஞ்சமேயெரியாடியெம்மான்
கடறுயினநஞ்சமுண்டபிரான்கழல்சேர்தல்கண்டா
யுடறுனுளபயனுவசொன்னேனிவ்வுலகினுள்ளே......................... (கங)

உலகாளுறுவீர்தொழுமின்விண்ணுள்வீர்பணிமினித்தம்
பலகாமுறுவீர்நினைமின்பரமனோடொன்றலுற்றீர்
* நலகாமலராலருச்சிமினுணரகத்துநிற்கு
மலகாவுறுவீரானடியாரையலைமின்கனே................................ (கச)

அலையார்புனலனன்ஞாயிறவனிமதியம்விண்கா
றலையாவுயிருடம்பாகியசோதியைத்தொக்குமினோ
தலையாற்சுமந்துதடித்தொண்கொடித்தேராக்கனென்னே
கலையானெருவிரற்றுங்ககில்லாவிட்டகாரணமே.......................... (கரு)

---

* பதங்கன் - சூரியன்.
* தளிர்க்ககள் நீர்ததும்ப முகமலரக்கூம்ப - எனமலர்க்குரிய இலக்கணமாகப் பொருள்கொள்ளுதலு மமையும்.
* சிதவல் - சீலைத்துணி.
* நலகாமலரால் - நல்ல - கா - மலரால் எனப்பிரிக்க- கா - சோலை.

காரணன் * காமரம்பாடவோர்காமரம்பூடுறத்தன்
ஞரணங்காகத்தளர்கின்றதையலைத்தாங்குவர்யார்
போரணிவேற்கண்புனற்படம்போர்த்தனபூஞ்சுணங்கா
ரோரணிகொங்கையும்பொற்படமூடியிருந்தனவே...................... (கசு)

இருந்தனமெய்தியுநின்றுந்திரிந்துங்கிடந்தலைந்தும்
வருந்தியவாழ்க்கைதவிர்த்திடுபோகநெஞ்சேமடவாள்
பொருந்தியபாகத்துப்புண்ணியன்புண்ணியசூலத்தெம்மான்
றிருந்தியபோதவன்றனேகனையுநந்தீவினையே...... ...................... (கஎ)

தீவினையேனைநின்றைவரிராப்பகற் * செத்தித்தின்ன
மேவினவாழ்க்கைவெறுத்தேன்வெறுத்துவிட்டேன்வினையு
மோவினதுள்ளந்தெளிந்ததுகள்ளங்கடிந்தடைந்தேன்
பாவினசெஞ்சடை * முக்கணனாரணன்பாதங்களே...................... (கஅ)

பாதம்புவனிசுடர்நயனம்பவனம்முயிர்ப்போங்
கோதமுடுக்கையுயர்வான்முடிவிசும்பேயுடம்பு
வேதமுகந்திசைதோண்மிகுபன்மொழிகீதமென்ன
போதமிவற்கோர்மணிநிறந்தோற்பதுபூங்கொடியே...................... (ககூ)

கொடிமேலிடபமுங்கோவணக்கீளுமோர்கொக்கிறகு
மடிமேற்கழலுமகலத்திநீறுமைவாயரவு
முடிமேன்மதியுமுருகலர்கொன்றையுமூவிலைய
வடிவேல்வடிவுமென்கண்ணுளெப்போதும்வருகின்றவே................ (உ0)

வருகின்றமூப்பொடுதீப்பிணிக்கூற்றம்வைகற்குவைகல்
பொருகின்றபோர்க்கொன்றுமாற்றகில்லேன்பொடிப்பூசிவந்துன்
னருகொன்றிநிற்கவருளுகண்டாயழல்வாயரவம்
வெருகொன்றவெண்மதிசெஞ்சடைமேல்வைத்தவேதியனே............ (உக)

வேதியன்பாதம்பணிந்தேன்பணிந்துமெய்ஞ்ஞானமென்னுஞ்
சோதியென்பால்கொள்ளவுற்றுநின்றேற்கின்றுதொட்டிதுதா
னீதியென்றன்செல்வமாவதென்றேன்மேனினைப்புவண்டே
ரோதிநின்போல்வகைத்தேயிருபாலுமொழித்ததுவே.................. (உஉ)

ஒழித்தேன்பிறவியையூர்ந்தேனறுபகையோங்கிற்றுள்ள
மிழித்தேனுடம்பினையேலேன்பிறரிடையிம்மையும்
பழித்தேன்பழியேவிளைக்கும்பஞ்சேந்தியக்குஞ்சரமுந்
தெழித்தேன்சிவனடிசேர்ந்தேனினிமிகத்தெள்ளியனே.................. (உங)

தெள்ளியமாந்தரைச்சேர்ந்திலன்றீங்கவிபாடலுற்றே
னுள்ளியசொல்லும்பொருளும்பெறே * னுரைத்தாருரைத்த
கள்ளியபுக்காற்கவிகளொட்டார்கடனஞ்சயின்றாய்
கொள்ளியவல்லகண்டாய்புன்சொலாயினுங்கொண்டருளே............ (உச)

---

* செத்தி - வருத்தி,—இடமால் - எனமுற்கூறினமையின் - முக்கண்ணன் - நாரணன் - எனக்கொள்க.

* முக்கணன் - ஆரணனெனினும்மையும்.

* காமரம் - ஓரிசை - காமரம்பு - மன்மதரம்பு.

* உரைத்த - வினைப்பெயர்- கள்ளிய - செய்யிய வென்னும்வாய்பாட்டுவினையெச்சம்.

அருளால்வருநஞ்சமுண்டுநின்றுய்யவமரர்குழாம்
பொருளார்கவிசொல்லயானும்புன்சொற்கள்புணர்க்கலுற்றே
னிருளாசறவெழின்மாமதிதோன்றவுமேன்றதென்ன
வெருளாதெதிர்சென்றுமின்மினிதானும்விரிகின்றதே.................. (௨௫)

விரிகின்றஞாயிறுபோன்றதுமேனியஞ்ஞாயிறுசூழ்ந்
தெரிகின்றவெங்கதிரொத்ததுசெஞ்சடையச்சடைக்கீழ்ச்
சரிகின்றகா * ரிருள்போன்றதுகண்டமக்காரிருட்கீழ்ப்
புரிகின்றவெண்முகில்போன்றுளதாலெந்தைபொற்பொடியே........ (௨௬)

பொடிக்கின்றிலமுலைபோந்திலபற்சொற்பொருடெரியா
முடிக்கின்றிலள்குழலாயினுங்கேண்மின்கண்மூரிவெள்ளங்
குடிக்கொண்டசெஞ்சடைக்கொண்டலங்கண்டன்மெய்க்கொண்டணிந்த
கடிக்கொன்றைநாறுகின்றுளறியேன்பிறர்கட்டுரையே................. (௨௭)

உரைவளர்நான்மறையோதியுலகமெலாந்திரியும்
விரைவளர்கொன்றைமருவியமார்பன்விரிசடைமே
னுரைவளர்கங்கைத்திரைவளர்தீர்த்தஞ்செறியச்செய்த
கரைவளர்வொத்துளதாற்சிரமாலையெங்கண்டனுக்கே.................. (௨௮)

கண்டங்கரியன்கரியீருரியன்விரிதருசீ
ரண்டங்கடந்தபெருமான்சிறுமான்றரித்தபிரான்
* பண்டம்பரமசிவனோர்பிரமன்சிரமரிந்த
புண்டங்கயிலன்பயிலாரமார்பனெம்புண்ணியனே..................... (௨௯)

* புண்ணியன்புண்ணியவேலையன்வேலையநஞ்ச * னங்கக்
கண்ணியன்கண்ணியனெற்றியன்காரணன்காரியங்கும்
விண்ணியன்விண்ணியல்பாணியன்பாணிகொளவுமையாள்
பண்ணியன்பண்ணியல்பாடல * ஞடல்பசுபதியே..................... (௩௦)

பதியார்பலிக்கென்றுவந்தாரொருவர்க்குப்பாவைநல்லீர்
கதியார்விடையுண்டுகண்மூன்றுளகறைக்கண்டமுண்டு
கொதியார்மழுவுண்டுகொக்கரையுண்டிறைகூத்துமுண்டு
மதியார்சடையுளமாலுளதீவதுமங்கையர்க்கே............................(௩௧)

மங்கைகொங்கைத்தடத்திங்குமக்குங்குமப்பங்கநுங்கி
யங்கமெங்கும்நெகச்சங்கமங்கைத்தலத்துங்கவர்வான்
கங்கைநங்கைத்திரைப்பொங்குசெங்கணரவங்கள்பொங்கிப்
பங்கிதங்கும்மலர்த்திங்கடங்கும்முடிப் * பண்டங்கனே............... (௩௨)

பண்டங்கன்வந்து * பலிதாவென்றான்பகலோற்கிடென்றே
னண்டங்கடந்தவ * னன்னமென்றானயனூர்தியென்றேன்
கொண்டிங்கு * ஐயம்பெய்யென்றான்கொடித்தேரனங்கனென்றே
னுண்டிங்கமைந்ததென்றாற்கதுசொல்லவுணர்வுற்றதே..................(௩௩)

* ஒருதொடரிற் கட்பலவுவமை- வந்ததால் - பலவயிற்போலியுவமையணி.
* பண்டம் - பண்டு- அம்- எனப்பிரிக்க.
* புண்ணியன் - விபூதியையுடையவன் * அங்கக்கண்ணியன் - என்புமாலையையுடையவன் * நாடல் - நாடுக - அல் - வியக்கோள் வினைமுற்றுவிகுதி.
* பாண்டரங்கன் - பண்டங்கனென நின்றது - வடமொழித்திரிபு.
* பலிதா - பலிகொடு - பல் - இதா - இந்தா - என்பதுபொருள் - இதோளி - எனனும் - உருபிடைச்சொல்- இதா - எனமருவிற்று * அன்னம்-சோறு - அன்னப்புள் * ஐயம்பெய் - பிச்சையிடு - ஐந்து - அம்பு - எய்.

உற்றடியாருலகாளவோருணுமுறக்குமின்றிப்
பெற்றமதாவதென்றேறும்பிரான்பெருவேனெடுங்கட்
சிற்றடியாய்வெண்பற்செவ்வாயிவள்சிரமாலைக்கென்று
மிற்றிடையாம்படியாகவென்னுக்குமெலிக்கின்றதே...................... (௩௪)

மெலிக்கின்றவெந்தீவெயில்வாயிழுதழல்வாய்மெழுகு
கலிக்கின்றகாமங்கரதலமெல்லிதுறக்கம்வெங்கூற்
றொலிக்கின்றநீருறுதீயொளியார்முக்கணத்தர்மிக்க
பலிக்கென்றுவந்தார்கடிக்கொன்றைசூடியபல்லுயிரோ...... ......... (௩௫)

பல்லுயிர்பாகமுடறலைதோல் * பகலோன்மறல்பெண்
வில்லியோர்வேதியன்வேழநிரையேபறித்துதைத்துப்
புல்லியுஞ்சுட்டுமறுத்துமுரித்துங்கொண்டான்புகழே
சொல்லியும்பாடியுமேத்தக்கெடுநங்கள்சூழ்துயரோ...................... (௩௬)

துயருந்தொழுமழுஞ்சோருந்துகிலுங்கலையுஞ்செல்லப்
பெயரும்பிதற்றுநகும்வெய்துயிர்க்கும்பெரும்பிணிகூர்ந்
தயருமமர்விக்கு * மூரிநிமிர்க்குமந்தோவிங்ஙனே
மயரு * மறைக்காட்டிறைக்காட்டகப்பட்டவாணுதலே............... (௩௭)

வாணுதற்கெண்ணநன்றன்றுவளர்சடையெந்தைவந்தா
ணுதற்கெண்ணுள்பலிகொடுசென்றுநகுநயந்து
பேணுதற்கெண்ணும்பிரமன்றிருமாலவர்க்கரிய
தாணுவுக்கென்னோவிராப்பகனைந்திவடாழ்கின்றதே..................... (௩௮)

தாழுஞ்சடைசடைமேலதுகங்கையக்கங்கைநங்கை
வாழுஞ்சடைசடைமேலதுதிங்களத்திங்கட்பிள்ளை
போழுஞ்சடைசடைமேலதுபொங்கரவவ்வரவம்
வாழுஞ்சடைசடைமேலதுகொன்றையெம்மாமுனிக்கே.............. (௩௯)

முனியேன்முருகலர்கொன்றையினாயென்னைமூப்பொழித்த
கனியேகழலடியல்லாற்களைகண்மற்றொன்றுமிலே
னினியேலிருந்தவஞ்செய்யேன்றிருந்தவஞ்சேநினைந்து
தனியேன்படுகின்றசங்கடமார்க்கினிச்சாற்றுவனே...................... (௪0)

சாற்றுவன்கோயிற்றலையுமனமுந்தவமிவற்று
லாற்றுவனன்பெனுநெய்சொரிந்தாற்றியஞ்சொன்மலரா
லேற்றுவனீசன்வந்தென்மனத்தானென்றெழுந்தலரோ
தூற்றுவன்றோத்திரமாயினவேயினிச்சொல்லுவனே...................... (௪௧)

சொல்லாதனகொழுநாவல்லசோதியுட்சோதிதன்பேர்
செல்லாச்செவிமரந்தேறித்தொழாதகைமண்டிணிந்த
கல்லாநினையாமனம்வணங்காததலையும் * பொறையா
மல்லாமவையவந்தானுமனிதர்க்கசேதனமே...... ...................... (௪௨)

---

* பகலோன் - பல் - மறல - உயிர் - பெண் - பாகம் - வில்லியோர் - உடல் - வேதியன் - தலை - வேழம் - தோல் - பறித்து - உதைத்து - புல்லி- சுட்டு - அறுத்து - உரித்து - எனமுறைநிரனிறையாகப்பொருள்கொள்க.

* மூரி- நெரிவு * மறைக்காட்டிறைக்காட்டகப்பட்ட- வேதாரணியத்திலெழுந்தருளிய சிவபெருமானாகியகாட்டிலகப்பட்ட- எனவும் - சிவபெருமானுக்கு ஆளாகத்தகப்பட்ட எனவுங் கொள்க.

* பொறை - சலதாரைமுதலியவற்றையடைக்குங்கல்.

* தனக்குன்றமாவையஞ்சங்கரன்றன்னருளன்றிப்பெற்றான்
மனக்கென்றுநஞ்சிற்கடையாநினைவன்மதுவிரியும்
புனக்கொன்றையானருளாற்புழுவாகிப்பிறந்திடினு
மெனக்கென்றும்வானவர்பொன்னுலகோடொக்கவெண்ணுவனே......(௪௩)

எண்ணமிறையேபிழைக்குங்கொலாமிமையோரிறைஞ்சுந்
தண்ணம்பிறைச்சடைச்சங்கரன்சங்கக்குழையன்வந்தெ
னுண்ணன்குறைவதறிந்துமொளிமாநிறங்கவர்வான்
கண்ணுமுறங்காதிராப்பகலெய்கின்றகாமனுக்கே........................ (௪௪)

காமனைமுன்செற்றதென்றாளவளிவள்காலனென்னுந்
தாமநன்மார்பனைமுன்செற்றதென்றுதன்கையெறிந்தா
ளாமுனஞ்செற்றதன்றாரையென்றேற்கிருவர்க்குமஞ்சி
யாமெனக்கிற்றிலரன்றெனக்கிற்றிலரந்தணரே........................ (௪௫)

அந்தணராமிவராரூருறைவதென்றேனதுவே
சந்தணைதோளியென்றாள் * தலையாயசலவனென்றேன்
பந்தணைகையாயதுவுமுண்டென்ருருமையறியக்
கொந்தணைதாரீருரைமினென்றேன்றுடிகொட்டினரே.................. (௪௬)

கொட்டுஞ்சிலபலசூழநின்றார்க்குங்குப்புற்றெழுந்து
நட்டமறியுங்கிரீடிக்கும்பாடுநகும்வெருட்டும்
வட்டம்வருமருஞ்சாரணைசெல்லுமலர்தயங்கும்
புட்டங்கிரும்பொழில்சூழ்மறைக்காட்டரன்பூதங்களே............... (௪௭)

பூதப்படையுடைப்புண்ணியரோபுறஞ்சொற்கணும்மே
லேதப்படவெழுகின்றனவாலினையாளொடும்மைக்
காதற்படுப்பான்கணைதொட்டகாமனைக்கண்மலராற்
சேதப்படுத்திட்டகராணீரிறைசெப்புமினே.............. ............ (௪௮)

செப்பனகொங்கைக்குத்தேமலர்க்கொன்றைநிறம்பணித்தான்
மைப்புரைகண்ணுக்குவார்புனற்கங்கைவைத்தான்மனத்துக்
கொப்பனவில்லாவொளிகிள * ருன்மத்தமுமமைத்தா
னப்பனையம்மனைநீயென்பெறுதுநின்றார்க்கின்றதே...................... (௪௯)

ஆர்க்கின்ற * நீருமனலுமதியுமைவாயரவு
மோர்க்கின்றயோகுமுமையுமுருவுமருவும்வென்றி
பார்க்கின்றவேங்கையுமானும்பகலுமிரவுமெல்லாங்
கார்க்கொன்றைமாலையினார்க்குடனாகிக்கலந்தனவே...................... (௫௦)

கலந்தனக்கென்பலர்கட்டவிழ்வார்கொன்றைகட்டரவார்
சலந்தனக்கண்ணியகானகமாடியோர்சா * ணகமு
நிலந்தனக்கில்லாவகதியனாகியநீலகண்டத்
தலந்தலைக்கென்னேயலந்தலையாகியழுகின்றதே........................ (௫௧)

---

* தனக்குன்றமாவையம் - தனக்குன்றம் - மா- வையம்-எனப்பிரிக்க.

* தலையாயசலவர் - தலையின்கண்ணாயகங்கையையுடையார்- எனவும் - முதன்மையாய தணியாக்கோபமுடையாரெனவுங்கொள்க.

* உன்மத்தம் - உளமத்தை - மயக்கம்.

* நீரும்- அனலும்- முதலிய- பகைமையுடையபொருள்கள் - நட்பாகிக்கலந்தனவெனக்கொள்க.

* அகலம்- அகமென- இடைக்குறையாநின்றது.

அழிகின்றதாருயிராகின்றதாகுலமேறிடுமா
விழிகின்றசங்கமிருந்தமுலைமேற்கிடந்தனபீர்
பொழிகின்றகண்ணீர்புலர்ந்ததுவாய்கலைபோனவந்தார்
மொழிகின்றதென்னினிநான்மறைமுக்கண்முறைவனுக்கே............ (௫௨)

முறைவனைமூப்புக்குநான்மறைக்கும்முதலேழ்கடலந்
துறைவனைச்சூழ்கயிலாயச்சிலம்பனைத்தொன்மைகுன்று
விறைவனையெண்குணத்தீசனையேத்தினர்சித்தந்தம்பா
லுறைவனைப்பாம்பணையாம்பின்னையென்சொல்லியோதுவதே......... (௫௩)

ஓதவனுமமுளையவன்பல்குணமுன்னைவிட்டேன்
போதவன்பின்னேபொருந்தவன்வாழ்க்கைதிருந்தச்சென்று
மாதவமாகிடுமாதவமாவளர்புன்சடையான்
யாதவன்சொன்னதுகொண்டொழியினியாரணங்கே.............. (௫௪)

ஆரணங்கின்முகமைங்கணையானகமவ்வகத்திற்
றேரணந்தோளவன்றேரகலல்குறெருன்மைக்கண்வந்த
பூரணகும்பமுலையிவைகாணப்புரிசடையெங்
காரணன்றுடொழுமன்போபகையோகருதியதே........................ (௫௫)

கருதியதொன்றில்லையாயினுங்கேண்மின்கள்காரிகையா
ளொருதினமும்முளளாகவொட்டாதொடுங்காரொடுங்கப்
பொருதநன்மால்விடைப்புண்ணியன்பொங்கிளங்கொன்றையின்னே
தருதிர்நன்றுயிடுந்தாராவிடிற்கொல்லுந்தாழிருளே..................... (௫௬)

இருளார்மிடற்றுலிராப்பகறன்னுல்வரை * மரையாற்
பொருளார்கமழ்கொன்றையான்முல்லைபுற்றரவாடுதலாற்
றெருளார்மதிவிசும்பாற்பௌவந்தெண்புனறுங்குதலா
லருளாற்பலபலவண்ணமுமாலரனுயினனே...... ...................... (௫௭)

ஆயினவந்தணர் வாய்மையராக்கலைகைவளைகள்
போயினவாணிகர் கண்ணுறுமைந்நீர்முலையிடையே
* பாயினவேள்கைக்*கரபத்திரத்துக்குச்சூத்திரம்போ
லாயினபல்சடையார்க்கன்புபட்டவெம்மாயிழைக்கே................. (௫௮)

இழையார்வனமுலைவீங்கியிடையிறுகின்றதிற்றுற்
பிழையாணமக்கிவைகட்டுண்கவென்பதுபேச்சுக்கோலாங்
கழையார்கழுக்குன்றவாணனைக்கண்டனைக்காதலித்தாள்
குழையார்செவியொடுகோலக்கயற்கண்கள்கூடியதே.................. (௫௯)

கூடியதன்னிடத்தானுமையாளிடத்தானையையா
நீடியபல்சடைமேற்றெரிவண்ணமெனப்பணிமின்
பாடியநான்மறைபாய்ந்ததுகூற்றைப்படர்புரஞ்சுட்
டாடியநீறுசெஞ்சாந்திவையாமெம்மயனெனவே........................... (௬0)

அயமேபலியிங்குமாடுளதாணுவோர்க்கிக்கிடப்
பயமேமொழியும்பசுபதியேறெம்மைப்பாய்ந்திடுமாற்

---

* மரை - ஓர் மிருகம்.
* பாயின - பரவின * கரபத்திரம் - ஈர்வாள்.

புயமேய்குழலியர் புண்ணியர்போமினிரத்தல்பொல்லா
நயமேமொழியினுநக்காமமாவும்மைநாணுதுமே........................ (௬௧)

நாணாநடக்கநலத்தார்க்கிடையில்லைநாமெழுக
வேணாரிருந்தமிழான்மறவேனுந்நினைமினென்றும்
பூணார்முலையீர்திருத்தன்புரிசடையெந்தைவந்தாற்
காணாவிட்டேன்கண்டிரவாதொழியேன்கடிமலரே........................ (௬௨)

கடிமலர்க்கொன்றைதரினும்புல்லேன்கலைசாரவொட்டேன்
முடிமலர்தீண்டின்முனிவன் முலைதொடுமேற்கெடுவ
னடிமலர்வானவரோத்தநின்றாய்க்கழகல்லவென்பன்
றொடிமலர்த்தோடொடுமேற்றிருவாணைதொடங்குவனே............... (௬௩)

தொடங்கியவாழ்க்கையைவாளாதுறப்பர்துறந்தவரோ
யடங்கியவேட்கையரன்பாலிலரறுகாற்பறவை
முடங்கியசெஞ்சடைமுக்கணனார்க்கன்றியிங்குமன்றிக்
கிடங்கினிற்பட்டகராவனையார்பலகேவலரோ......................... (௬௪)

வலந்தான்கழலிடம்பாடகம்பாம்புவலமிடமே
கலந்தான்வலநீறிடஞ்சாந்தெரிவலம்பந்திட * மென்
பலந்தார்வலமிடமாடகம்வேல்வலமாழியிடஞ்
சலந்தாழ்சடைவலந்தண்ணங்குழலிடஞ்சங்கரற்கே...... ......... .. (௬௫)

சங்கரன்சங்கக்குழையன்சரணாரவிந்தந்தன்னை
யங்கரங்கூப்பித்தொழுதாட்படுமின்றொண்டீர்நமனார்
கிங்கரர்தாஞ்செய்யுங்கீழாயினவிறைகேட்டலுமே
யிங்கரமாயிரமீரவென்னெஞ்சமெரிகின்றதே.................. ......... (௬௬)

எரிகின்றதீயொத்துளசடையீசற்கத்தீக்கிமையோர்
சொரிகின்றபாற்கடல்போன்றதுசூழ்புனலப்புனலிற்
சரிகின்றதிங்களோர்தோணியொக்கின்றதத்தோணியுய்ப்பான்
றெரிகின்றதிண்கழைபோன்றுளதாலத்திறலரவே............ ......... (௬௭)

அரவமுயிர்ப்பவழலுமங்கங்கை * வளாய்க்குளிருங்
குரவங்குழலுமையூடற்குழைந்துருகும்மடைந்தோர்
பரவும்புகழண்ணறீண்டலும்பார்வானவைவிளக்கும்
* விரவுமிடரின்பமெம்மிறைசூடியவெண்பிறையே..................... (௬௮)

பிறைத்துண்டஞ்சூடலுற்றோபிச்சைகொண்டனலாடலுற்றோ
மறைக்கண்டம்பாடலுற்றோவென்புநீறுமருவலுற்றோ
கறைக்கண்டம்புல்லலுற்றோகடுவாயரவாட்டலுற்றோ
குறைக்கொண்டிவளரன்பின்செல்வதென்னுக்குக்கூறுமினே......... (௬௯)

கூறுமினீசனைச்செய்ம்மின்குற்றேவல்குளிர்மின்கண்க
டேறுமின்சித்தந்தெளிமின்சிவனைச்செறுமின்செற்ற
மாறுமின்வேட்கையறுமினவலமிவைநெறியா
வேறுமின்வானத்திருமின்விருந்தாயிமையவர்க்கே..................... (௭௦)

---

* என்பலந்தார் - என்பு - அலம் - தார் - எனப்பிரிக்க - அலம் - அமைவு.
* வளாய் - கலந்து * விரவுமிடரின்பம் - இடர் - இன்பம் - விரவுமெனக்கூட்டுக.

இமையோர்கொணர்ந்திங்கிழித்திடநீர்மைகெட்டேந்தல்பின்போ
யமையாநெறிச்சென்றோராழ்ந்தசலமகளாயணைந்தே
யெமையாளுடையான்றலைமகளாவங்கிருப்பவென்னே
யுமையாளவள்கீழுறைவிடம்பெற்றோவுறைகின்றதே ..................... (எக)

உறைகின்றனவைவவொன்பதுவாயிலோர்மூன்றுளதான்
மறைகின்றவென்புநரம்போடிறைச்சியுதிரமச்சை
* பறைகின்றதோல்போர்குரம்பைபயனிலைப்போயடைமி
னறைகின்றதெண்புனல்செஞ்சடைக்கொண்டோன்மலரடிக்கே...... (எஉ)

அடிக்கண்ணிக்கைதொழுதார்க்ககன்ஞாலங்கொடுத் * தடிநாய்
வடிக்கண்ணிநின்னைத்தொழவலைகொண்டனைவண்டுண்கொன்றைக்
கடிக்கண்ணியாயெமக்கோரு * ரிரண்டகங்காட்டினையாற்
கொடிக்கண்ணிமேனல்லகொல்லேறுயர்த்தகுணக்குன்றமே......... (எ௩)

குன்றெடுத்தான்செவிகண்வாய்சிரங்கணெரிந்தலற
வன்றடர்த்தற்றுகச்செற்றவனற்றவர்க்காரமுதா
மன்றிடைத்தோன்றியநெல்லிக்கனிநிற்பமானுடர்ப்போ
யொன்றெடுத்தோதிப்புகுவர்நரகத்துறுகுழியே ......................... (எச)

குழிகட்கொடுநடைக்கூன்பற்கவட்டடிநெட்டிடையூ
னுழுவைத்தழைசெவித்தோன்முலைச்சூறைமயிர்ப்பகுவாய்த்
தெழிகட்டிணர்க்குரற்றேய்பல்வயிற்றுத்திருக்குவிரற்
கழுதுக்குறைவிடம்போற்கண்டனுடுங்கடியரங்கே...................... (எரு)

* அரங்காமணியன்றிறென்றலோர்கூற்றமதியமந்தீச்
சரங்காமனெய்யுஞ்சந்துட்பகையாலிங்கிவடளர்ந்தா
ளிரங்காமனத்தவரில்லையிரங்கானவ்வானவர்தஞ்
சிரங்காமுறுவானெலும்புகொள்வானென்றன்றேமொழிக்கே......... (எசு)

மொழியக்கண்டான்பழிமூளக்கண்டான்பிணிமுன்கைச்சங்க
மழியக்கண்டானன்றிலீரக்கண்டான்றென்றலென்னுயிர்மேற்
* சுழியக்கண்டான்றுயர்கூரக்கண்டான்றுகில்சூழ்கலையுங்
கழியக்கண்டான்றில்லைக்கண்ணுதலான்கண்டகள்ளங்களே............ (எஎ)

கள்ளவளாகங்கடிந்தடிமைப்படக்கற்றவர்த
முள்ள * வளாகத்துறுகின்றவுத்தமனீண்முடிமேல்
வெள்ள * வளாகத்துவெண்ணுரைசூடியவொண்பிறையைக்
கொள்ளவளாய்கின்றபாம்பொன்றுளதுகுறிக்கொண்மினே............ (எஅ)

குறிக்கொண்டிவள்பெய்தகோல்வளையேவந்துகோளிழைத்தீர்
வெறிக்கொண்ட * வெள்ளிலம்போதோவெலும்போவிரிசடைமே

---

* பறைதல் - சொல்லல்.
* அடி - தாழ்மை * இரண்டகம் - இருமனமெனவுங் கொள்க.
* அரங்காமணியன்றில் - அரம் - கா - மணி - அன்றில் - எனப்பிரிக்க - கா சோலை.
* சுழித்தல் - கோபித்தல்.
* வளாகம - இடம் - சூழல்.
* வெள்ளில் - விளா.

ஓறக்கொன்றையோவுடைத்தோலோபொடியோவுடைகலனே
கறைக்கண்டரோநுமக்கென்னோசிறுமிகடவியதே........................ (எகூ)

கடவியதொன்றில்லையாயினுங்கேண்மின்கள்காரிகையாண்
* மடவியவாறுகண்டாம்பிறைவார்சடையெந்தைவந்தாற்
கிடவியநெஞ்சமிடங்கொடுத்தாட்கவலங்கொடுத்தான்
றடவியகொம்பதன்றூண்மேலிருந்துதறிக்குறுமே........................ (அ0)

தறித்தாயயன்றலைசாய்த்தாய்சலந்தரனைத்தழலாப்
பொறித்தாயனங்கனைச்சுட்டாய்புரம்புனலுஞ்சடைமேற்
செறித்தாய்க்கிவைபுகழாகின்றகண்டிவள்சில்வளையும்
பறித்தாய்க்கிதுபழியாகுங்கொலாமென்றுபாவிப்பனே................ (அக)

பாவிக்கும்பண்டையளல்லள்பரிசறியாள்சிறுமி
* யாவிக்கும் * குற்குலுநாறுமிகநெகவங்கமெங்கும்
காவிக்கண்சோரும்பொச்சாம்புங்கறைமிடற்றானைக்கண்ணிற்
றூவிக்கும்வெண்ணகையாளம்மெல்லோதிக்குச்சந்தித்தவே.............. (அஉ)

சந்தித்தகூற்றுக்குக்கூற்றாம்பிணிக்குத்தனிமருந்தாஞ்
சிந்திக்கச்சிந்தாமணியாகித்தித்தித்தமுதமுமாம்
வந்திக்கில்வந்தென்னைமால்செய்யும்வானோர்வணங்கநின்ற
வந்திக்கண் * ஆடியினனடியார்களுக்காவனவே........................ (அங)

ஆவனயாரேயழிக்கவல்லாரமையாவுலகிற்
போவனயாரேபொதியகிற்பார்புரமூன்றெரித்த
தேவனைத்தில்லைச்சிவனைத்திருந்தடிக்கைதொழுது
தீவினையேனிழந்தேன்கலையோடுசெறிவளையே........................... (அச)

செறிவளையாய்நீவினாயல்குலநலங்கல்விமெய்யா
மிறையவன்றமைச்சேவடிப்போதென்றெல்லோருமேத்து
நிறையுடைநெஞ்சிதுவேண்டிற்றுவேண்டியநீசர்தம்பாற்
கறைவளர்கண்டனைக்காணப்பெரிதுங்கலங்கியதே..................... (அரு)

கலங்கினமால்கடல்வீழ்ந்தனகார்வரையாழ்ந்ததுமண்
மலங்கினநாகமருண்டனபல்கணம்வானங்கைபோ
யிலங்கினமின்னொடுநீண்டசடையிமையோர்வியந்தா
ரலங்கனன்மாநடமார்க்கினியாடுவதெம்மிறையே........................ (அசூ)

எம்மிறைவன்னிமையோர்தலைவன்னுமையாள்கணவன்
மும்முறையானும்வணங்கப்படுகின்றமுக்கணக்கற்
கெம்முறையாளிவளென்பிழைத்தாட்கிறையென்பிழைத்தா
னிம்முறையாலேகவரக்கருதிற்றெழிற்கலையே.......................... (அஎ)

கலைதலைசூலங்கடுங்கனல்கண்டை * கட்டங்கங்கொடி
சிலையிவையேந்தியவெண்டோட்சிவற்குமனஞ்சொற்செய்கை
நிலைபிழையாதுகுற்றேவல்செய்தார்குன்றமேருவென்னு
மலைபிழையாரென்பராலறிந்தோர்களிம்மானிலத்தே...................... (அஅ)

---

* மடவிய - மடமையென்னும்பண் படியாகப்பிறந்தபெயரெச்சம்.
* ஆவித்தல் - கொட்டாவிவிடுதல் * குற்குலு - குங்கிலியம்.
* ஆடியினன் - ஆடினன்.
* கட்டங்கம் - இதுகடங்கமென்பதன் றிரிபு - சுத்தியபொக்கணத்து - என்னும் திருக்கோவையார் உசஉ-ம் செய்யுளில் நச்சினார்க்கினியாருரையானுணர்க.

மானிலத்தோர்கட்குத்தேவரனையவத்தேவரொல்லா
மானலத்தாற்றெழுமஞ்சடையீசனிவன்பெருமை
தேனலர்த்தாமரையோன்றிருமாலவர்தேர்ந்துணரார்
பானலத்தாற்கவியாமெங்ஙனேயினிப்பாடுவதே........................ (௨௯)

பாடியவண்டுறைகொன்றையினுன்படப்பாம்புயிர்ப்ப
வோடியதீயாலுருகியதிங்களினூறலொத்த
தாடியநீறதுகங்கையுந்தெண்ணீர்யமுனையுமே
கூடியகோப்பொத்ததாலுமைபாகமெங்கொற்றவற்கே... ............. (௩௰)

கொற்றவனேயென்றுங்கோவணத்தாயென்று * மாவணத்தால்
நற்றவனேயென்றுநஞ்சுண்டியேயென்றுமஞ்சமைக்கப்
பெற்றவனேயென்றும்பிஞ்ஞகனேயென்றுமன்மதனைச்
செற்றவனேயென்றுநாளும் பரவுமென்சிந்தனையே..................... (௩௧)

சிந்தனைசெய்யமனமமைத்தேன்செப்பநாவமைத்தேன்
வந்தனைசெய்யத்தலையமைத்தேன்கைதொழவமைத்தேன்
* பந்தனைசெய்வதற்கன்பமைத்தேன்மெய்யரும்பவைத்தேன்
வெந்தவெண்ணீறணியீசற்கிவையான்விதித்தனவே..................... (௩௨)

விதித்தனவாழ்நாள்பெரும்பிணிவிச்சைகள்கொண்டுபண்டே
கொதிப்பினிலொன்றுங்குறைவில்லைகுங்குமக்குன்றனைய
பதித்தனங்கண்டனங்குன்றம்வெண்சந்தனம்பட்டனைய
மதித்தனங்கண்டனநெஞ்சினியென்செய்யும்வஞ்சனையே............... (௩௩)

வஞ்சனையாலேவரிவளைகொண்டுள்ளமால்பனிப்பத்
துஞ்சும்பொழுதுமுறத்தொழுதேன்சொரிமாலருவி
யஞ்சனமால்வரைவெண்பிறைகவ்வியண்ணந்தனைய
வெஞ்சினவானையினீருரிமூடியவீரனையே.............................. (௩௪)

வீரனயனரிவெற்பலர்நீரொரிபொன்னெழிலார்
காரொண்கடுக்கைகமலந்துழாய்விடைதொல்பறவை
* பேரொண்பதிநிறந்தாரிவரூர்திவெவ்வேறென்பரா
லாருமறியாவகையெங்களீசர்பரிசுகளே.................................. (௩௫)

பரியாதனவந்தபாவமும்பற்றுமற்றும்பணிந்தார்க்
குரியானெனச்சொல்லியுன்னுடனுவனெனவடியார்க்
கரியானிவனென்றுகாட்டுவனென்றென்றிவையிவையே
பிரியாதுறையுஞ்சடையானடிக்கென்றும்பேசுதுமே..................... (௩௬)

பேசுவதெல்லாமரன்றிருநாமமப்பேதைநல்லாள்
காய்சினவேட்கையரன்பாலதுவறுகாற்பறவை
மூசினகொன்றைமுடிமேலதுமுலைமேன்முயங்கப்
பூசினசாந்தந்தொழுமாலிவையொன்றும்பொய்யல்லவே............... (௩௭)

---

* ஆவணம் - அடையாளம்.
* பந்தனை - பந்தித்தல்.
* பேரொண்பதிநிறந்தாரிவரூர்தி - பேர் - ஊர் - நிறம் மாலை - வாகனம் எனவைத்து - வீரன்- அயன்-அரி- முதலியவற்றை - நிரணிறையாகக் கொள்க.

பொய்யாநரகம்புகினுந்துறக்கினும்போந்துபுக்கிங்
குய்யாவுடம்பினோேர்வடடப்பபறப்பவென்று
நையாவிளியினுநானிலமாளினுநான்மறைசேர்
மையார்மிடற்றனடிமறவாவரம்வேண்டுவனே ........................ (௯௮)
வேண்டியநாள்களிற்பாதியுங்கங்குன்மிகவவற்று
ளீண்டியவெந்நோய்முதல்துபிள்ளைமைமேலதுமூப்
பாண்டினவச்சம்வெகுளியவாவழுக்காறிங்ஙனே
மாண்டனசேர்தும்வளர்புன்சடைமுக்கண்மாயனையே .................. (௯௯)
மாயனன்மாமணிகண்டன்வளர்சடையாற்கடிமை
யாயினதொண்டர்துறக்கம்பெறுவதுசொல்லுடைத்தே
காய்சினவானைவளருங்கநகமலையருகே
போயினகாக்கையுமன்றேபடைத்ததுபொன்வண்ணமே .............. (௧00)

பொன்வண்ணத்தந்தாதி முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# சேரமான்பெருமாணாயனார்

## அருளிச்செய்த திருவாரூர் மும்மணிக்கோவை.

இடையிலைஞ்சீரடி பெற்றுவந்த

### நேரிசை யாசிரியப்பா.

விரிகடல்பருகியளறுபட்டன்ன
கருநிறமேகங்கன்முகடேறி
நுண்டுளிபொழியநோக்கியொண்டொடி
பொலங்குழைமின்னப்புருவவில்லிட்
டிலங்கெழிற்செவ்வாய்க்கோபமூர்தரக்
கைத்தலமென்னுங்காந்தண்மலர
முத்திலங்கெயிறெனுமுல்லையரும்பக்
குழலுஞ்சுணங்குங்கொன்றைகாட்ட
வெழிலுடைச்சாயலிளமயில்படைப்ப
வுண்ணிறையுயிர்ப்பெனுமூதையூர்தரக்
கண்ணெனப்பெயரிய * கனமழைபொழிதலி
ளெண்ணிறத்தஞ்சனக்கொழுஞ்சேறலம்பியெஞ்சா
மணியும்பொன்னுமாசறுவயிரமும்
அணிகிளரகிலுமாரமுமுரிஞ்சிக்
கொங்கையென்னுங்குவட்டிடையிழிதரப்
* பொங்குபுனல்காட்டியோளேகங்கை
வருவிசைதவிர்த்தவார்சடைக்கடவு
ளரிவைபாகத்தண்ணலாரூர்
எல்லையிரும்பலிசொரியுங்
கல்லோசென்றகாதலர்மனமே .................................. (௧)

* கனம் - மேகம் * பொங்குபுனல் - வெள்ளம்.

## வெண்பா.

மனமாலுருதேமற்றென்செய்யும்வாய்ந்த
கனமால்விடையுடையோன்கண்டத்—தினமாகித்
தோன்றினகார்தோன்றிலதேர்சோர்ந்தன * சங்கூர்ந்தனபீர்
கான்றனநீரேந்திழையாள்கண்........................................... (௨)

## கலித்துறை.

கண்ணார்நுதலெந்தைகாமருகண்டமெனவிருண்ட
* விண்ணாருருமொடுமேலதுகீழது * கொண்டல்விண்ட
மண்ணார்மலைமேலிளமயிலாலுறமானனைய
பெண்ணுமிவளினியென்னுக்கழியும்பிரிந்துறைவே........................ (௩)

அடிமுதற்கட் கூன்பெற்றுவந்த

## நேரிசை யாசிரியப்பா.

உறைகழியொள்வாண்மின்னியுருமெனு
மறைகுரன்முரசமார்ப்பக்கைபோய்
வெஞ்சிலைகோலிவிரிதுளியென்னு
மஞ்சரந்துரந்ததுவானேநிலனே
கடியவாகியகளவநன்மலரொடு
கொடியவாகியதளவமுமந்தண்
குலைமேம்பட்ட * கோடலுங்கோபமோ
டலைமேம்பட்டகாந்தளுமிவற்றொடு
காயாவெந்துயர்தருமேலவரோ
பொங்கிரும்புரிசைபோக்கறவளைஇக்
கங்குலும்பகலுங்காவன்மேவி
மாசறுவேந்தன்பாசறையோரோ—இன்னே
அலகிலாற்றலருச்சுனற்கஞ்ஞான்-றுலவாநல்வர
மருளியவுத்தமன்-அந்தணூர்
சிந்தித்துமகிழா * மயரியமாக்களைப்போலத்
துயருழந்தழியக்கண்டுயிலாவே.......................................... (௪)

## வெண்பா.

துயிலாநோயாந்தோன்றத்* தோன்றிதீத்தோன்ற
மயிலாலவந்ததான்மாதோ—வெயிலாய
வண்டத்துக்கப்பாலானந்திங்கட்கண்ணியான்
கண்டத்துக்கொப்பாயகார்................................................... (௫)

## கலித்துறை.

காருமுழக்கொடுமின்னொடும்வந்ததுகாதலர்தந்
தேருந்தெருவுஞ்சிலம்பப்புகுந்ததுசில்வளைகள்
சோருஞ்சிலபலவங்கேநெரிந்தனதுன்னருநஞ்
சாருமிடற்றண்ணலாரூரனையவணங்கினுக்கே............................ (௬)

---

* சங்கு - வளையல்.
* விண் - மேகம் * கொண்டல் - கீழ்க்காற்று - ஆலல்- ஆடுதல்.
* கோடல் - வெண்காந்தள் - மயர்தல் - மயங்கல்.
* தோன்றி - செங்காந்தள்.

## அகவல்.

அணங்குறைநெடுவரையருமைபேணாது
மணங்கமழ்தெரியல்சூடிவைகலும்
விடுசுடர்நெடுவேன்முன்னடிவிளக்காக்
கடுவிசைக்கானியாற்றுநெடுநீர்நீந்தி
யொருதனிப்பெயரும்பொழுதிற்புரிகுழல்
வானரமகளிர்நீண்மலைவழங்கக்
கலத்தானுகா*தலர்க்கவொன்று
புலவியுள்ளமொடுபொருந்தாக்கண்ணள்
கலைபிணைதிரியக்கையறவெய்தி
மெல்விரனெரித்துவிம்மிவெய்துயிர்த்
தல்லியங்கோதையழலுற்றுஅங்
கெல்லையிலிருந்துயரொய்தினள்புல்லார்
திரிபுரமெரியவொருகணைதெரிந்த
வரிவைபாகத்தண்ணலாரூர்
வளமலிகமலவாண்முகத்
திளமயிற்சாயலேந்திழைதானே......................... (எ)

## வெண்பா.

இழையார்வனமுலையீ *ரிந்தண்புனத்தி
னுழையாகப்போந்ததொன்றுண்டே—பிழையாச்சீ
ரம்மானனலாடியாரூர்க்கோனன்றுரித்த
கைம்மானேரன்னகளிறு....................................................... (அ)

## கலித்துறை.

களிறுவழங்கவழங்கா *வதர்க்கதிர்வேறுணையா
*வெளிறுவிரவவருதிகண்டாய்விண்ணினின்றிழிந்த
பிளிறுகுரற்கங்கைதங்கியபிஞ்ஞகன்பூங்கழன்மாட்
டொளிறுமணிக்கொடும்பூணிமையோர்செல்லுமோங்கிருளே............ (கூ)

## அகவல்.

இருள்புரிகூந்தலுமெழினலஞ்சிதைந்தது
மருள்புரிவண்டறைமாலையும்புரிந்தது
வொண்ணுதற்றிலதமுமழிந்ததுகண்ணு
மைந்நிறமொழிந்துசெந்நிறமெய்தி
யுள்ளறிகொடுமையுரைப்பபோன்றன
சேதகம்பரந்ததுசெவ்வாய்மேதகு
குழைகெழுதிருமுகம்வியர்ப்புள்ளுறுத்தி
யிழைகெழுகொங்கையுமின்சாந்தழிஇக்
கலையுந்துகிலும்நிலையிற்கலங்கி
யென்னிதுவிளைந்தவாறெனமற்றீ

---

* அலர் - பழிச்சொல்.

* இந்தண் - இகரச்சுட்டிடைச்சொன் முன்னின்ற தகர மிகாது இனவெழுத்து மிகுதல்-நன்னூல்- இடையுரி - என்னும்-உ௩௬-ம் சூத்திரத்தாற் கொள்க.

* அதர் - வழி - வெளிறு - வெண்மை - ௩௰௰ விளக்கத்தின்மேல் நின்றது

* ஒளிறல் - விளங்கல்.

தன்னதறிகிலம் * யாமேசெறிபொழி
லருகுடையாரூரமர்ந்துறையமுதன்
முருகுவிரிதெரியன்முக்கண்மூர்த்தி
மராமரச்சோலைச் * சிராமலைச்சராற்
சுரும்பிவர்நறும்போதுகொய்யப்
பெருஞ்செறுவனத்திலியான்பிரிந்ததிப்பொழுதே...... (௧௦)

## வெண்பா.

பொழுதுகழிந்தாலும்பூம்புனங்காத் * தெள்கி
யெழுதுகொடியிடையாயேகான்—றொழுதமரர்
முன்னஞ்சேர்மொய்கழலான்முக்கணானன்மறையான்
மன்னுஞ்சேய்போலொருவன்வந்து.................................. (௧௧)

## கலித்துறை.

வந்தாரொதிர்சென்றுநின்றேற்கொளிரும்வண்டார்தழைக
டந்தாரவையொன்றுமாற்றகில்லேன்றக்கன்வேள்விசெற்ற
செந்தாமரைவண்ணன்றீர்த்தச்சடையன்சிராமலைவாய்க்
கொந்தார்பொழிலணிநந்தாவனஞ்சூழ்குளிர்புனத்தே.................... (௧௨)

## அகவல்.

புனமயிற்சாயற்பூங்குழன்மடந்தை
மனைமலிசெல்வமகிழாளாகி
யேதிலனொருவன்காதலனாக
விடுசுடர்நடுவணின்றடுதலினீழலு
மடியகத்தொளிக்குமாரழற்கானத்து
வெவ்வினைவேடர்துடிக்குரல்வெரீஇ
மெய்விதிறெறியுஞ்செவ்வியளாகி
முள்ளிலையீந்து*மூளிதாளிலவமும்
வெள்ளிலும்பரந்த வெள்ளிடைமருங்கிற்
கடுங்குரற்கதநாய்நெடுந்தொடர்பிணித்த
பாசந்தின்றதேய்காலும்பர்
மனையதண்மேய்ந்தமயிர்ப்புன்குரம்பை
விரிநரைக்கூந்தல்வெள்வாய்மறத்தியர்
விருந்தாயினள்கொறுனேதிருந்தாக்
கூற்றெனப்பெயரியகொடுந்தொழிலொருவ
னாற்றல்செற்றவண்ணலரரூர்ச்
செய்வளர்கமலச்சீறடிக்
கொவ்வைச்செவ்வாய்க்குயின்மொழிக்கொடியே...... (௧௩)

## வெண்பா.

கொடியேர்நுடங்கிடையாள்கொய்தாரான்பின்னே
யடியானடந்தடைந்தாளாக—பொடியாக

---

* பின்னர்-யானென - ஒருமை யாகக்கூறி முன்னர்யாமெனப் பன்மையாகக் கூறியது தன் கிளையைத்தன்னோடு படுத்தற்கென அறிக * சிராமலை - காவிரியின் றென்கரையிலுள்ளவோர்தலம் - அது - திரிசிராவாற்பூசிக்கவந்தபெயர்.

* என்கல் - நிந்தித்தல்.

* மூளிதல் - உலர்தல் - தொடர் - சங்கிலி.

நண்ணாரூர்முன்றெரித்தநாகஞ்சேர்திண்சிலையான்
றண்ணாரூர்சூழ்ந்த * தடம்.......................................................... (௧௪)

### கலித்துறை.

தடப்பாற்புனற்சடைச்சங்கரன்றண்மதிபோன்முகத்து
மடப்பான்மடந்தைமலரணைச் * சேக்கையிற்பாசம்பிரீஇ
யிடப்பாற்றிரியில்வெருவுமிருஞ்சுரஞ்சென்றனளாற்
படப்பாலனவல்லவாற்றமியேன்றையல்பட்டனவே........... ........ (௧௫)

### அகவல்.

* பட்டோர்பெயருமாற்றலுமெழுதி
நட்டகல்லுமூதூர்நத்தமும்
பரன்முரம்பதருமல்லதுபடுமழை
வரன்முறையறியாவல்வெயிற்கானத்துத்
தேனிவர்கோதைசெல்லமானின
மஞ்சிலோதிநோக்கிற்கழிந்து
நெஞ்செரிவுடைமையின்விலக்காதுவிடுக
கொங்கைக்கழிந்துகுன்றிடையடைந்த
கொங்கிவர்கோங்கமுஞ்செலவுடன்படுக
மென்றோட்குடைந்துவெயினிலைநின்ற
குன்றவேய்களுங்கூற்றடைந்தொழிக
மாயிருங்கடற்றிடைவைகலாயிரம்
* பாவையைவளர்ப்போயந்நனிபாவையை
விலக்காதுபிழைத்தனைமாதோநலத்தகும்
அலைபுனலாரூரமர்ந்துறையமுதன்
கலையமர்கையன்கண்ணுதலெந்தை
தொங்கலஞ்சடைமுடிக்கணிந்த
கொங்கலர்கண்ணியாயினகுரவே........................... (௧௬)

### வெண்பா.

குரவங்கமழ்கோதைகோதைவேலோன்பின்
விரவுங்கடுங்கானம்வெவ்வா—யரவஞ்
சடைக்கணிந்தசங்கரன்றூர்மதனன்றன்னைக்
கடைக்கணித்ததீயிற்கடிது.................................................. (௧௭)

### கலித்துறை.

கடிமலர்க்கொன்றையுந்திங்களுஞ்செங்கணரவுமங்கே
முடிமலராக்கியமுக்கணக்கன்மிக்கசெக்கரொக்கும்
படிமலர்மேனிப்பரமன்னடிபரவாதவர்போ
லடிமலர்நோவநடந்தேகடந்ததெம்மனையே.......................... (௧௮)

---

* தடம் - வழி.

* சேக்கை - படுத்தற்பொருளைத்தரும் - சே - என்னு முதனிலை யடியாகப் பிறந்தசெயப்படு பொருளில் வந்ததொழிற்பெயர் - பாயல் என்பதுபொருள்.

* பட்டோர் பெயரு மாற்றலுமெழுதி நட்டகல் - போர்க்களத்திற்புறங்காட்டாது போர்செய்துபட்டோர் பெயரையும் வன்மையையும் எழுதிநட்டகல்-நுந்தைகள்ளின்றன்-என்பதனுணர்க *சில் நுண்மை* பாவை- குரவின்காய்.

### அகவல்.

மனையுறைகுருவிவளைவாய்ச்சேவல்
சினைமுதிர்பேடைச்செவ்விநோக்கி
* யீனிலிழைக்கவேண்டியாறு
வன்புபொறைகூரமேன்மேன்முயங்கிக்
கண்ணுடைக்கரும்பினுண்டோடுகவரும்
பெருவளந்தழீஇயபீடுசால்கிடக்கை
வருபுனலூரன்பார்வையாகி
மடக்கொடிமாதர்க்குவலையாத்தோன்றிப்
படிற்றுவாய்மொழிபலபாராட்டி
யுள்ளத்துள்ளதுதெள்ளிதிற்கரந்து
கள்ளநோக்கமொடுகைதொழுதிறைஞ்சி
யெம்மிலோயேபாணவவனே
யமரருமறியாவாதிமூர்த்தி
குமரன்றாதைகுளிர்சடையிறைவன்
அறைகழலெந்தையாரூராவணத்
துறையிற்றூக்குமெழின்மென்காட்சிக்
கண்ணடியனையநீர்மைப்
பண்ணுடைச்சொல்லியர்தம்பாலோனே............... (௧௯)

### வெண்பா.

பாலாயசொல்லியர்க்கேசொல்லுபோய்ப்பாண்மகனே
யேலாவிங்கென்னுக்கிடுகின்றாய்—மேலாய
தேந்தண்கமழ்கொன்றைச்செஞ்சடையான்றாள்சூடும்
பூந்தண்புனலூரன்பொய்............... ...................................... (௨0)

### கலித்துறை.

* பொய்யார்தொழலுமருளுமிறைகண்டம்போலிருண்ட
மையார்தடங்கண்மடந்தையர்கேட்கிற்பொல்லாதுவந்துன்
கையாலடி * தொடல்செல்லவெற்புல்லல்கலையலைய
லையாவிவைநன்குகற்றாய்பெரிதும்மழகியவே............................. (௨௧)

### அகவல்.

அழகுடைக்கிண்கிணியடிமிசையரற்றத்
தொழிலுடைச்சிறுபறைபூண்டுதேரீர்த்
தொருதனியுருட்டியொண்பொடியாடிப்
பொருகளிறனையபோகமொடுபிற்
றாழ்ந்த-பூங்கழற்சிறுறொடு
தூங்குநடைபயிற்றி
யக்கலையுடுத்தியைம்படைகட்டி
* ஒக்கலையிருக்குமொளிர்பூங்குஞ்சிக்

---

*ஈனில் - ஈனும் இல்லம்.
*பொய்யார் பொய்யாதவர்கள் * தொழலும்-வினையெச்சத்திரியு
* தொடல் - புல்லல் - அலையல் - என்பவற்றினிறுதி - எதிர்மறைவியங் கோட்பொருட்டு.
* ஒக்கல் - இடைப்புக்கம்.

குதலையங்கிளவிப்புதல்வன்றன்னை
யுள்ளச்சொரிந்தவெள்ளத்தீம்பா
லுடையவாகியதடமென்கொங்கை
வேண்டாதிரிந்தவிரிபுனலூரன்
பூண்டாங்ககலம்புல்குவனெனப்
போய்ப் -பெருமடமுடையைவாழிவார்சடைக்
கொடுவெண்டிங்கட்கொழுநிலவேய்க்குஞ்
சுடுபொடியணிந்ததுளங்கொளியகலத்
தண்ணலாரூர்த்திண்ணிதிற்செய்த
சிறைகெழுசெம்புனல்போல
நிறையொடுநீங்காய்நெஞ்சம்நீயே...................... (௨௨)

## வெண்பா.

நீயிருந்திங்கென்போதுநெஞ்சமேநீளிருட்க
ணாயிரங்கைவட்டித்தனலாடி-தீயரங்கத்
தைவாயரவசைத்தானன் * பணைத்தோட்கன்பமைத்த
செய்வானலூரன்திறம்............................................ (௨௩)

## கலித்துறை.

திறமலிசின்மொழிச்செந்துவர்வாயினையெங்கையர்க்கே
மறமலிவேலோனருளுகவார்சடையான் * கடவூர்த்
துறைமலியாம்பல்பல்லாயிரத்துத்*தமியேயெழினும்
நறமலிதாமரைத்தன்னதன்றேசொலலுநற்கயமே...................... (௨௪)

## அகவல்.

கயங்கெழுகருங்கடன்முதுகுதெருமரலுற
வியங்குதிமிறடவியெறியிளிநுளையர்
நெய்ம்மீன்கவரல்வேண்டிக்கைம்மிகுத்
தாலவட்டமேய்ப்பபீமிசை
முடிகெழுதருவலைவீசிமுந்நீர்க்
குடரொனவாங்கிக்கொள்ளைகொண்ட
சுரிமுகச்சங்குஞ்சுடர்விடுபவளமு
மெரிகதிர்நித்திலத்தொகுதியுங்கூடி
விரிகதிர்நிலவுஞ்செக்கருந்தாரகை
யுருவதுகாட்டுமுலவாக்காட்சித்
தண்ணந்துறைவன்றடவரையகலங்
கண்ணுறக்கண்டதுமுதலாவொண்ணிறக்
* காளமாசுணங்கதிர்மதிக்குழவியைக்
கோளிழைத்திருக்குங்கொள்கைபோல
மணிதிகழ்மிடற்றுவானவன்மருவு
மணிதிகழகலத்தண்ணலாரு
ரார்கலிவிழவினன்னதோர்
போலாச்சிறந்ததுசிறுநல்லூரோ...... ..... ......... .. (௨௫)

---

* பணை - பணைத்தல் - இது முதனிலைத்தொழிற் பெயர்.
* கடவூர் - ஓர் தலம் - தமி - தனி.
* காளம் - நஞ்சு.

## வெண்பா.

உளரொலாந்துஞ்சியுலகெலாநள்ளென்று
பாரொலாம்பாடவிந்தபாயிருட்கட்-சீருலா
* மாந்துறைவாயீசன்மணிநீர்மறைக்காட்டுப்
பூந்துறைவாய்மேய்ந்துறங்காப்புள்.................................... (உசு)

## கலித்துறை.

புள்ளுந்துயின்றுபொழுதிறுமாந்துகழுதுறங்கி
நள்ளென்றகங்குலிருள்வாய்ப்பெருகியவார்பனிநாட்
டுள்ளுங்கலைக்கைச்சுடர்வண்ணனைத்தொழுவார்மனம்போன்
றுள்ளுமுருகவொருவர்திண்டேர்வந்துலாத்தருமே...................... (உஎ)

## அகவல்.

உலாநீர்க்கங்கையொருசடைக்கரந்து
புலானீரொழுகப்பொருகளிறுரித்த
பூதநாதனுதிமூர்த்தி
திருமடமலைமகட்கொருகூறுகொடுத்துத்
தன்னன்பினமைத்தவனூருநன்பகல்
வலம்புரியடுப்பாமாமுத்தரிசி
சலஞ்சலநிறையவேற்றிநலந்திகழ்
பவளச்செந்தீமூட்டிப்பொலம்பட
விப்பியந்துடுப்பாலொப்பத்துழாவி
யடாஅதட்டவமுதம்வாய்மடுத்
திடாஅவாயமொடுண்ணும்பொழுதிற்
றிருந்திழைப்பணைத்தோட்டேமொழிமாதே
விருந்தினடியேற்கருளுதியோவென
முலைமுகநோக்கிமுறுவலித்திறைஞ்சலி
னறைகமழெண்ணெய்ச்சிறுநுண்டுள்ளி
பொங்குபுனலுற்றதுபோலவென்
னங்கமெல்லாந்தானுயினனே.............................. (உஅ)

## வெண்பா.

ஆயினவன்பாரேயழிப்பாரனலாடி
பேயினவன்பாரோம்பும்பேரருளான்—நீயினவன்
கண்ணுளனூர்க்கடலார்மடப்பாலவத்
தண்ணுருங்கொங்கைக்கேதாழ்ந்து.......... ........................ (உகூ

## கலித்துறை.

தாழ்ந்துகிடந்தசடைமுடிச்சங்கரன்றுள்பணியா
தாழ்ந்துகிடந்துநைவார்கிளைபோலயர்வேற்கிரங்கிச்
சூழ்ந்துகிடந்தகரைமேற்றிரையென்னுங்கையெறிந்து
வீழ்ந்துகிடந்தலறித்துயிலாதிவ்விரிகடலே........... .................. (௩o)

திருச்சிற்றம்பலம்.

சேரமான் பெருமாணயனர் அருளிச்செய்த
திருவாரூர் மும்மணிக்கோவை.

முற்றிற்று.

---

* மாந்துறை - ஓர்தலம்.

# சேரமான் பெருமாணயனர்

## அருளிச்செய்த திரு ஆதி யுலா.

## கலிவெண்பா.

பவனி.

திருமாலுநான்முகனுந்தேர்ந்துணராதன்றங்
கருமாலுறவழலாய்நின்ற—பெருமான்
பிறவாதேதோன்றினன்காணதேகாண்பான்
றுறவாதேயாக்கைதுறந்தான்—முறைமையா
லாழாதேயாழ்ந்தானகலாதகலியான்
ஊழாலுயராதேயோங்கினன்—சூழொளிநூ
லோதாதுணர்ந்தானுணுகாதுநுண்ணியான்
யாதுமணுகாதணுகியான்—ஆதி
யரியாகிக்காப்பானயனய்ப்படைப்பான்
அரனயழிப்பவனுந்தானே—பரனய
தேவரறியாததோற்றத்தான்றேவரைத்தான்
மேவியவாறேவிதித்தமைத்தான்—ஓவாதே
எவ்வுருவில்யாரொருவருள்குவாருள்ளத்துள்
அவ்வுருவாய்த்தோன்றியருள்கொடுப்பான்—எவ்வுருவுந்
தானேயாய்நின்றளிப்பான்றன்னிற்பிறிதுருவ
மேனோர்க்குங்காண்பரியவெம்பெருமான்—ஆனத
சீரார்சிவலோகந்தன்னுட்சிவபுரத்தில்
ஏரார்திருக்கோயிலுள்ளிருப்ப—வாராய்ந்து
செங்கணமரர்புறங்கடைச்சென்றீண்டி
யெம்பெருமானெங்கட்கருளென்ன—வங்கொருநாட்
பூமங்கைபொய்தீர்தரணிபுகழ்மங்கை
நாமங்கையென்றிவர்கணன்கமைத்த—சேமங்கொள்
ஞானக்கொழுந்து * நகராசன்றன்மடந்தை
தேன்மொய்த்தகுஞ்சியின்மேற்சித்திரிப்ப—லூனமில்சீர்
நந்தாவனமலருமந்தாகினித்தடஞ்சேர்
செந்தாமரைமலர்நூருயிரத்தால்—நொந்தா
வயந்தன்ருெடுத்தமைத்தவாசிகையுஞ்சூட்டி
நயந்திகழுநல்லுறுப்புக்கூட்டிப்—பயன்கொள்
குலமகளிர்செய்தகொழுஞ்சாந்தங்கொண்டு
நலமலியவாகந்தழீஇக்—கலைமலிந்த
கற்பகமீன்றகமழ்பட்டினையுடுத்துப்
பொற்கழல்கள்கான்மேற்பொலிவித்து—விற்பகருஞ்
சூளாமணிசேர்முடிகவித்துச்சுட்டிசேர்
வாளார்நுதற்பட்டமன்னுவித்துத்—தோளா
மணிமகரகுண்டலங்கள்காதுக்கணிந்தாங்
கணிவயிரக்கண்டிகைபொன்னுண்—பணிபெரிய
வாரமவைபூண்டணிதிகழும்பொற் * சன்ன
வீரந்திருமார்பில்வில்விலச—வேருடைய

---

* நகராசன் - மலையரசன்.
* சன்னவீரம் - ஓர்வகையாபரணம்.

வெண்டோட்குங்கேயூரம்பெய் * துதரபந்தனங்
கண்டார்மனமகிழக்கட்டுறீஇக்—கொண்டு
* கடிசூத்திரம்புனைந்துகங்கணங்கைப்பெய்து
வடிவுடையகோலம்புனைந்தாங்—கடிநிலைமேல்
நந்திமாகாளர்கடைகழிந்தபோழ்தத்து
வந்துவசுக்களிருக்குரைப்ப—வந்தமில்சீர்
எண்ணருங்கீர்த்தியெழுவரிருடிகளு
மண்ணின்மேலாசிகடாமுணர்த்த—வொண்ணிறத்த
பன்னிருவராதித்தர்பல்லாண்டெடுத்திசைப்ப
மன்னு * மகதியன்யாழ்வாசிப்பப்—பொன்னியலு
மங்கிகமழ்தூபமேந்தயமன்வந்து
மங்கலவாசகத்தால்வாழ்த்துரைப்பச்—செங்க
ணிருதிமேலோர்களுழைக்கலன்களேந்த
வருணன்மணிக்கலசந்தாங்கத்—தெருவெல்லாம்
வாயுப்புறன்விளக்கமாமழைநீர்தெளிப்பத்
தூயசீர்ச்சோமன்குடையெடுப்ப—மேவிய
வீசானன்வந்தடைப்பைகைக்கொள்ளவச்சுவினி
வாயார்ந்தமந்திரத்தால்வாழ்த்துரைப்பத்—தூய
வுருத்திரர்கடோத்திரங்கள்சொல்லக்குபேரன்
றிருத்தகுமாநிதியஞ்சிந்தக்—கருத்தமைந்த
கங்காநதியமுனையுள்ளுறுத்ததீர்த்தங்கள்
பொங்குக்கவரிபுடையிரட்டத்—தங்கிய
பைந்நாகமெட்டுஞ்சுடரொடுப்பப்பைந்தறுகட்
கைந்நாகமெட்டுங்கழல்வணங்க—மெய்ந்நாக
மேகவிதானமாமின்னெலாஞ்சூழ்கொடியா
மேகத்துருமேமுரசறையப்—போகஞ்சேர்
தும்புருநாரதர்கள்பாடத்தொடர்ந்தெங்குங்
கொம்புருவநுண்ணிடையார்கூத்தாட—வெம்பெருமான்
விண்ணோர்பணியவுயர்ந்தவிளங்கொளிசேர்
எண்ணாிளவிடையின்மேல்கொண்டாங்—கெண்ணார்
கருத்துடையப்பாரிடங்கள்காப்போத்துச்செய்யத்
திருக்கடைகளேழ்கழிந்தபோதிற்—செருக்குடைய
சேனாபதிமயின்மேன்முன்செல்லவானைமே
லானைப்போரிந்திரன்பின்படர—வானாத
வன்னத்தேரோிியயன்வலப்பால்கைபோதக்
கன்னவிலுந்திண்டோட்கருடன்மேல்—மன்னிய
மாலிடப்பாற்செல்லமலரார்கணையைந்து
மேலிடப்பான்மென்கருப்புவில்லிடப்பா—லேல்வுடைய
சங்கணையுமுன்கைத்தடமுலையார்மேலெய்வான்
கொங்கணையும்பூவாளிகோத்தமைத்த—வெங்கணையான்
காமன்கொடிப்படைமுன்னோடக்கதக் * காரி
வாமான்புரவிமேல்வந்தணைய—நாமஞ்சேர்

---

* உதரபந்தனம் - அரைப்பட்டிகை.
* கடிசூத்திரம் - அரைஞாண்.
* மகதியுன் - மகதியென்னும் ஓர் யாழில்வல்ல நாரதன்,
* காரி - வயிரவன்.

வேழமுகத்துவிநாயகனையுள்ளு...
சூழ்வளைக்கைத்தொண்டைவாய்...ண்கட்—டாழ்கூந்தல்
மங்கையெழுவருஞ்சூழமடநீலி
சிங்கவடலேற்றின்மேற்செல்லத்—...
விச்சாதரரியக்கர்கின்னரர்கிம்புருட
ரச்சாரணராக்கரோடசுர—ரெச்சார்...
சல்லரிதாளந்தகுணிசந்தத்தளகங்
கல்லலகுகல்லவடமொந்தை—நல்லிலைய
தட்டழிசங்கஞ்சலஞ்சலந்தண்ணுமை
கட்டழியாப்பேரிகரதாளங்—கொட்டுங்
குடமுழவங்கொக்கரைவீணைகுழலியா
ழிடமாந்தடாரிபடக—மிடவிய
மத்தளந்துந்துமிவாய்ந்தமுருடிவற்று
லெத்திசைதோறுமெழுந்தியம்ப—வொத்துடனே
மங்கலம்பாடுவார்வந்திறைஞ்சமல்லரும்
கிங்கரருமெங்குங்கிலுகிலுப்பத்—தங்கிய
வாருமிருதுமியோகுமருந்தவமு
மாருதமுத்திரையுமந்திரமு—மீறூர்ந்த
காலங்கண்மூன்றுங்கணமுங்குணங்களும்
* பாலகிரியரும்வந்தீண்டி—மேலை
யிமையோர்பெருமானே * போற்றியெழில்சே
ருமையாண்மணவாளாபோற்றி—யெமையாளுந்
தீயாடிபோற்றிசிவனேயடிபோற்றி
யீசனேயெந்தாயிறைபோற்றி—தூயசீர்ச்
சங்கரனேபோற்றிசடாமகுடத்தாய்போற்றி
பொங்கரவாபொன்னங்கழல்போற்றி—யங்கொருநாள்
ஆயவிழுப்போரருச்சுனனுற்றற்குப்
பாசுபதமீந்தபதம்போற்றி—தூய
மலைமேலாய்போற்றிமயானத்தாய்வானோர்
தலைமேலாய்போற்றிதாள்போற்றி—நிலைபோற்றி
போற்றுவார்பூமழையும்பெய்துபுலன்கலங்க
நாற்றிசையுமெங்குநலம்பெருக—வேற்றுக்
கொடியும்பதாகையுங்கொற்றக்குடையும்
வடிவுடையதொங்கலுஞ்சூழக்—கடிகமழும்
பூமான்கருங்குழலாருள்ளம்புதிதுண்பான்
வாமானவீரன்வரும்பவனி—நாமமுறும்

## குழாங்கள்.

வாமானவீரன்மறுவில்சீர்வானவர்தங்
கோமான்படைமுழக்கங்கேட்டலுமே—தூமாண்பின்
வானநீர்தாங்கிமறையோம்பிவான்பிறையோ
னேமில் * சூலமுடையவா—யீனமில்
வெள்ளையணிதலால்வேழத்துரிபோர்த்த

---

* பாலகிரியர் - பாவிக்குந்தொழிலர்.
* போற்றி - வந்தித்தேமென்னுமுற்றுவினை.
* சூலம் - ஓராயுதம் - இடிதாங்கி.

வள்ளலேபோலும்வடிவுடைய—வொள்ளிய
மாடநடுவின்மலராரமளியே
கூடியபோர்க்களமாக்குறித்துக்—கேடில்
சிலம்புபறையாகச்சேயரிக்கணம்பா
விலங்கேய்கொடும்புருவம்வில்லா—நலந்திகழுங்
கூழைபின்றுழவளையார்ப்பக்கைபோந்து
கேழ்கிளருமல்குலந்தேருந்திச்—சூழொளிய
கொங்கைமாப்பொங்கக்கொழுநர்மனங்கவர
வங்கம்பொருதசைந்தவாயிழையாற்—செங்கேழற்
பொற்கலத்துள்ளாலமணிநீர்முகஞ்சேர்த்தி
நற்பெருங்கோலமிகப்புனைந்து—பொற்புடைய
பேதைமுதலாகப்பேரிளம்பெண்ணீறுக
* மாதிவருஞ்சொல்லார்மகிழ்ந்தீண்டிச்—சோதிசேர்
* சூளிகையுஞ் * சூட்டுஞ் * சுழிகையுஞ்சுட்டிகையும்
* வாளிகையும்பொற்றோடுமின்வீச—மாளிகையின்
மேலேறிநின்றுதொழுவார்துயர்கொண்டு
மாலேறிநின்றுமயங்குவார்—நூலேறு
தாமமேல்வீழ்ப்பார்சடாதரனல்கானேல்
யாமமேலெம்மையடுமென்பார்—காமவே
ளாமென்பாரன்றென்பாரையுறுவார்கையெறிவார்
தாமுன்னநாணொடுசங்கிழப்பார்—பூமன்னு
பொன்னரிமாலையைப்பூண்பாரப்பூண்கொண்டு
துன்னரிமாலையாச்சூடுவார்—முன்ன
மொருகண்ணெழுதிவிட்டொன்றெழுதாதோடித்
தெருவம்புகுவார்திகைப்பா—ரருகிருந்த
கண்ணாடிமேற்பஞ்சுபெய்வார்கிளியென்று
பண்ணாடிச்சொற்பந்துக்குற்றுரைப்பா—ரண்ணன்மேற்
கண்ணென்னுமாநீலங்கோலிக்கருங்குழலார்
திண்ணநிறைந்தார்திகைத்திட்டார்—ஒண்ணிறத்த

## பேதை.

பேதைப்பருவம்பிழையாதாள்வெண்மணலாற்
* றூதைச்சிறுசோறடுதொழிலாள்—தீதி
லிடையாலுமெக்கழுத்தமாட்டாணலஞ்சே
ருடையாலுமுள்ளுருக்ககில்லா—ணடையாலுங்
கௌவைநோய்காளையரைச்செய்யாள்கதிர்முலைகள்
* வெவ்வநோய்செய்யுந்தொழில்பூணாள்—செவ்வனேர்
நோக்கிலுநோய்நோக்கநோக்காடன்செவ்வாயின்
வாக்கிற்பிறர்மனத்தும்வஞ்சியாள்—பூக்குழலும்

---

* மாது - இவரும் - எனப்பிரிக்க - மாது-விருப்பம் - இவரல்- பொருந்தல்.
* சூளிகை - நிலாமுற்றம்- சூட்டு -தலையணி * சுழிகை- ஓர்வகையாபரணம்
* சுட்டிகை - நுதலணி.
* வாளிகை - காதலணியும் ஓர்வகையாபரணம்.
* தூதை - சிறுமட்கலம்.
* வெவ்வம் - வெம்மை யென்னும்பண்படியாகப்பிறந்த பெயர்.

* பாடவந்தோன்றமுடியாளிளவேய்த்தோ
ளாடவர்தம்மையயர்வுசெய்யாள்—நாடோறு
மொன்றுணைத்ததென்றுநக்கொன்றுசெய்தொன்றின்கட்
சென்றமனத்தளாஞ்சேயிழையாள்—நன்றாகத்
* தாலிகழுத்தணிந்துசந்தனத்தான்மெய்பூசி
நீலவறுவைவிரித்துடுத்துக்—கோலஞ்சேர்
பந்தரிற்பாவைகொண்டாடுமிப்பாவைக்குத்
தந்தையாரொன்றொருத்திதான்வினவ—வந்தமில்சீர்
ஈசனெரியாடியென்பாளவனையோர்
காய்சினமால்விடைமேற்கண்ணுற்றுத்—தாய்சொன்ன
விக்கணக்குநோக்காளிவள்போல்வாள்காமநூல்
நற்கணக்கின்மேற்சிறிதேநாட்செய்தாள்—பொற்புடைய

## பெதும்பை.

பேரொளிசேர்காட்சிப்பெதும்பைப்பிராயத்தாள்
காரொளிசேர்மஞ்ஞைக்கவினியலாள்—சீரொளிய
தாமரையொன்றினிரண்டுகுழையிரண்டு
காமருகெண்டையோர்செந்தொண்டை—தூமருவு
முத்தமுரிவெஞ்சிலைசுட்டிசெம்பவளம்
வைத்ததுபோலுமதிமுகத்தா—ளொத்தமைந்த
கங்கணஞ்சேர்ந்திலகுகையாள்கதிர்மணியின்
கிண்கிணிசேர்ந்ததிருந்தடியா—ளொண்கேழல்
அந்துகில்சூழ்ந்தசைந்தவல்குலாளாய்பொதியிற்
சந்தனந்தோய்ந்ததடந்தோளாள்—வந்து
திடரிட்டதண்வரைக்கண்செய்தமுலையாள்
கடல்பட்டவின்னமுதமன்னாள்—மடல்பட்ட
மாலைவளாயகுழலாண்மணநாறு
சோலையிளங்கிளிபோற்றுமொழியாள்—சாலவும்
வஞ்சனைசெய்துமனங்கவரும்வாட்கண்ணுக்
கஞ்சனத்தையிட்டங்கழகாக்கி—யெஞ்சா
மணியாரம்பூண்டாழிமெல்விரலிற்சேர்த்தி
யணியார்வளைதோண்மேன்மின்ன—மணியார்ந்த
தூவெண்மணற்கொண்டுதோழியருந்தானுமாக்
காமனுருவம்வரவெழுதிக்—காமன்
கருப்புச்சிலையுமலரம்புந்தேரு
மொருப்பட்டுடனெழுதும்போதில்—விருப்பூருந்
தேன்மருவுங்கொன்றையந்தார்த்தீர்த்தன்சிவலோகன்
வானமாலேற்றின்மேல்வந்தணையத்—தானமா
நன்றறிவார்சொன்னநலந்தோற்றுநாண்டோற்று
நின்றறிவுதோற்றுநிறைதோற்று—நன்றாகக்
கை * வண்டுங்கண்வண்டுமோடக்கலையோட
நெய்விண்டபூங்குழலாணின்றொழிந்தாள்—மொய்கொண்ட

---

* பாடவம் - களிப்பு * தாலி - ஒருவகையாபரணம்.
* வண்டு - வளையல்.

## மங்கை.

மங்கையிடங்கடவாமாண்பினுள்வாணிழிந்த
[illegible]ங்கைச்சுழியனையவுந் [illegible] ங்கிய
வங்கைக்கமலமடிக்கம [illegible]ங்
கொங்கைக்கமலமு [illegible]ங்கமலம்—பொங்கெழிலா
[illegible]ட்டிடையும் [illegible] தோள்வேயெழிலார்
பட்டுடையவல்குலுந்தோ [illegible]ட்டு—மட்டுவிரி
கூந்தலறல் [illegible] வாயின்க
ணேய்ந்தமணிமுறுவலின்னமிர்தம்—வாய்ந்தசீர்
பண்டுவள [illegible] கைசூடிக்
கண்டிக [illegible]சேர்த்திக்—குண்டலங்கள்
காதுக்கணிந் [illegible]கலைதிருத்தித்
தீதில்செழு [illegible]கோலஞ்சித்திரித்து—மாதராள்
பொற் [illegible] யைவாங்கியதனேடுஞ்
சொ [illegible] ண்டிருந்தவேல்வைக்க—ணற்கோட்டு
வெ [illegible] மேல்வீற்றிருந்தஞாயிறுபோல்
செ [illegible] டையின்மேல்கொண்டு—தெள்ளியநீர்
[illegible] ன்சடாமகுடன்றேன்றுதலும்
[illegible] ம்மர்மனத்தளாய்ச்—சூழொளியான்
[illegible] தன்றிருநோக்குமவனுடைய
[illegible] ந்தன்னதெழினேக்கும்—பேரருளான்
[illegible] ந்தன்றேளுநோக்குமவன்மார்பி
[illegible] ம்வைத்துநெடிதுயிர்த்து—நாணேக்கா
[illegible] முருகவொழியாதவேட்கையாம்
[illegible] த்திடையழுந்திவெய்துயிர்த்தாள்—ஒள்ளிய
[illegible] ழின்றெய்வவடிவாடிருந்தியசீர்

## மடந்தை.

வாய்ந்தமடந்தைப்பிராயத்தா—ளேய்ந்தசீ
ரீசன்சிலையுமெழில்வான்பவளமுஞ்
சேய்வலங்கைவேலுந்திரண்முத்தும்—பாசிலைய
வஞ்சியும்வேயும்வளர்தாமரைமொட்டு
மஞ்சில்வருமாமதியின்மண்டிலமு—மெஞ்சாப்
புருவமுஞ்செவ்வாயுங்கண்ணுமெயிறு
முருவநுசுப்புமென்றேளு—மருவினிய
கொங்கையும்வாண்முகமுமாக்கொண்டாள்கோலஞ்சேர்
பங்கயப்போதனையசேவடியா—ளொண்கேழல்
வாழைத்தண்டன்னகுறங்கினுள்வாய்ந்தசீ
ராழித்தேர்த்தட்டனையவல்குலா—ளூழித்
திருமதியமற்றென்றுமென்றுமுகத்தை
புருவுடையநாண்மீன்சூழ்ந்தாற்போ—லுருவுடைய
முத்தாரங்கண்டத்தணிந்தாளணிகலன்கள்
மொய்த்தாரவாரமிகப்பெருகி—வித்தகத்தாற்
கள்ளுங்கிடாமுங்கலவையுங்கைபோந்திட்
டுள்ளும்புறமுஞ்செறிவமைத்துத்—தெள்ளொளிய

* கவின் என்பதில் வினையெச்சத் தகரவிகுதி தொகுத்தல் விகாரம்.

காளிங்கஞ்சோதிகிடப்பத்தொடுத்தமைத்த
தாளிம்பத்தாமநுதல்சேர்த்தித்—தோளெங்குந்
தண்ணுறுஞ்சந்தனங்கொண்டப்பிச்சதிர்சாந்தை
வண்ணம்பெறவிளாயேமட்டித்தாங்—கொண்ணுதலா
டன்னமர்தோழியர்சூழத்தவிசேறிப்
பின்னுமோர்காமரமியாழமைத்து—மன்னும்
விடவண்ணக்கண்டத்துவேதியன்மேலிட்ட
மடல்வண்ணம்பாடும்பொழுதீண்—டடல்வல்ல
வேல்வல்லான்வில்வல்லான்மெல்லியலார்க்கெஞ்ஞான்று
மால்வல்லானூர்கின்றமால்விடையின்—கோல
மணியேறுகேட்டாங்குநோக்குவாள்சால
வணியேறுதோளானைக்கண்டாங்—கணியார்ந்த
கோட்டியொழியவெழுந்துகுழைமுகத்தைக்
காட்டிநுதல்சிவப்பவாய்துலக்கி—நாட்டார்க
ளெல்லாருங்கண்டாரொணைக்கடவுளிங்காய
நல்லாய்படுமேற்படுமென்று—மெல்லவே
செல்லலுறுஞ்சரணங்கம்பிக்குந்தன்னுறுநோய்
சொல்லலுறுஞ்சொல்லுமுடைசெறிக்கும்—நல்லாகங்
காணலுறுங்கண்கணீர்மல்குங்கண்காண்பார்முன்
னூணலுறுநெஞ்சமொட்டாது—பூணாகம்
புல்லலுறுமண்ணல்கைவாரானிவ்வகையே
யல்லலுறுமழுந்துமாழ்துயரான்—மெல்லியலாள்
தன்னுருவம்பூங்கொன்றைத்தார்கொள்ளத்தான்கொன்றைப்
பொன்னுருவங்கொண்டுபுலம்புற்றாள்—பின்னொருத்தி

## அரிவை.

செங்கேழற்றாமரைபோற்சீறடியாடீதிலா
வங்கேழரிவைப்பிராயத்தா—ளொண்கேழற்
றிங்களுந்தாரகையும்வில்லுஞ்செழும்புயலுந்
தங்கொளிசேர்செவ்வாயுமுண்மையாற்—பொங்கொளிசேர்
மின்னுவான்காட்டுமுகவொளியாண்மெய்ம்மையே
தன்னுவாரில்லாத்தகைமையா—ளெந்நாளு
மில்லாரையெல்லாருமெள்குவர்செல்வரை
யெல்லாருஞ்செய்வர்சிறப்பென்னுஞ்—சொல்லாலே
யல்குற்குமேகலையைச்சூழ்ந்தாண்முலைமேலு
மல்கியசாந்தொடுபூண்புனைந்து—நல்கூர்
இடையிடையேயுள்ளுருகக்கண்டாளெழிலார்
நடைபெடையன்னத்தைவென்று—ளடியிணைமேற்
பாடகங்கொண்டுபரிசமைத்தாள்பன்மணிசேர்
சூடகமுன்கைதொடர்வித்தாள்—கேடில்சீர்ப்
பொன்னரிமாலைதலைக்கணிந்துபூண்கொண்டு
மன்னுங்கழுத்தைமகிழ்வித்தாள்—பொன்னளியி
னின்னிசைவீணையைவாங்கியிமையவர்த
மண்ணன்மேற்றாமீட்டவோசையான்—முன்னமே
பாடவொடுங்கும்பொழுதிற்பரஞ்சோதி
கேடிலாமால்விடைமேற்றோன்றுதலுங்—கூடிய

வின்னிசையுமிற்பிறப்பும்பேணுமிருந்தமிழு
மன்னியவீணையுங்கைவிட்டுப்—பொன்னனையீர்
இன்றன்றேகாண்பதெழினலங்கொள்ளேனேல்
நன்றன்றேபெண்மைநமக்கென்று—சென்றவன்ற
ஞெண்களபமாடுமொளிவாண்முகத்திரண்டு
கண் * களபமாடுவபோற்கட்டுரைத்—தொண்கேழர்
கூந்தலவிழ்க்குமுடிக்குங்கலைதிருத்துஞ்
சாந்தந்திமிருமுலையார்க்கும்—பூந்துகிலைச்
சூழுமவிழ்க்குந்தொழுமழுஞ்சோர்துயருற்
ருழுமழுந்துமவாவுறூஉஞ்—சூழொளிய
வங்கைவளைதொழுதுகாத்தாள்கலைகாவா
ணங்கையிவளுநலந்தோற்ருள்—அங்கொருத்தி
யாராவமுதினவயவம்பெற்றனைய

## தெரிவை.

சீரார்தெரிவைப்பிராயத்தா—ளோரா
மருளோசையின்மழலைவாய்ச்சொலாளென்று
மிருடீர்புலரியேயொப்பா—ளருளாலே
வெப்பமிளையவர்கட்காக்குதலானுச்சியோ
டொப்பமையக்கொள்ளுமுருவத்தாள்—வெப்பந்தீர்ந்
தந்தளிர்போற்சேவடியுமங்கையுஞ்செம்மையா
லந்திவான்காட்டுமழகினு—ளந்தமில்
சீரார்முகமதியமாதலாற்சேயிழையா
ளேராரிரவினெழில்கொண்டாள்—சீராருங்
கண்ணூர்பயோதரமுநுண்ணிடையுமுண்மையாற்
றண்ணிளங்காரின்சவிகொண்டாள்—வண்ணஞ்சேர்
மாந்தளிர்மேனிமுருக்கிதழ்வாயாதலால்
வாய்ந்தவிளவேனில்வண்மையாள்—மாந்த
ரறிவுடையீர்நின்மின்களல்லார்போமென்று
பறையறைவபோலுஞ்சிலம்பு—முறைமையாற்
சீரார்திருந்தடிமேற்சேர்த்தினுள்தேரல்கு
லோராதகலலுருதென்று—சீராலே
யந்துகிலுமேகலையுஞ்சூழ்ந்தாளணிமுலைகள்
மைந்தாமனங்கவருமென்பதனுன்—முந்துறவே
பூங்கச்சினுலடையப்பூட்டுறீஇபபொற்றுெடியாள்
காம்பொத்ததோளிணையைக்காப்பேவி—வாய்ந்தசீர்
நற்கழுத்தைநல்லாரத்தான்மறைத்துக்காதுக்கு
விற்பகருங்குண்டலங்கண்மேவுவித்து—மைப்பகருங்
காவியங்கண்ணிணைக்கதந்தணிப்பாள்போலத்தண்
தாவியவஞ்சனத்தைமுன்னூட்டி—யாவரையு
மாகுலமாக்குமழகினுளன்னமுங்
கோகிலமும்போலுங்குணத்தினு—ளாகிப்
பலகருதிக்கட்டிக்கரியவாய்க்கோடி
யலர்சுமந்துகூழையவாகிக்—கலைகரந்
துள்ளாதுமின்றிப்புறங்கமழ்ந்துகீழ்தாழ்ந்து
கள்ளாவிநாறுங்கருங்குழலா—டெள்ளொளிய

* களபம் - கலப்பு.

செங்கழுநீர்ப்பட்டுடுத்திச்செங்குங்குமமெழுதி
யங்கழுநீர்த்தாம நுதல்சேர்த்திப்—பொங்கெழிலார்
பொற்கவற்றின்வெள்ளிப்பலகைமணிச்சூது
நற்கமையநாட்டிப்பொரும்பொழுதில்—விற்பகருந்
தோளானிலைபேறுதோற்றங்கேடாய்நின்ற
தாளான்சடாமகுடந்தோன்றுதலுங்—கேளாய
நாணுநடக்கநலத்தார்க்கிடையில்லை
யேனோரொழிகவெழிலொழிக—பேணுங்
குலத்தாரகன்றிடுகுற்றத்தார்வம்மின்
நலத்தீர்நினைமினீரொன்று—சொலற்கரிய
தேவாதிதேவன்சிவனுயிற்றேன்கொன்றைப்
பூவாரலங்கலருளாது—போவானேற்
கண்டாலறிவனெனச்சொல்லிக்கைசேர்ந்து
வண்டார்பூங்கோதைவளந்தோற்றாள்—ஒண்டாங்கு

## பேரிளம்பெண்.

பெண்ணரசாய்த்தோன்றியபேரிளம்பெண்மையாள்
பண்ணமருமின்சொற்பணிமொழியாள்—மண்ணின்மேற்
கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியுமைம்புலனு
மொண்டொடிகண்ணேயுளவென்று—பண்டையோர்
கட்டுரையைமேம்படுத்தாள்கண்ணாடிமண்டிலம்போல்
விட்டிலங்குநல்லுகிர்சேர்மெல்விரலாள்—கட்டரவ
மஞ்சப்பரந்தகன்றவல்குலாளாய்நலத்த
வஞ்சிக்கொடிநுடங்குநுண்ணிடையா—ளெஞ்சாத
பொற்செப்பிரண்டுமுகட்டின்மணியழுத்தி
வைத்தனபோலவளர்ந்தேந்தி—யொத்துச்
சுணங்குற்றிதலையுஞ்சூழ்போந்துகண்டார்க்
கணங்குமமுதமுமாய்த்தோன்றி—யிணங்கொத்த
கொங்கையாள்கோலங்கட்கெல்லாமோர்கோலமா
நங்கையாணுகிளவேய்த்தோளினு—ளங்கையாற்
காந்தட்குலம்பழித்தாள்காமவேள்காதலாள்
சாந்தமிலங்குமகலத்தாள்—வாய்ந்துடனே
யேய்ந்துகுவிந்துதிரண்டுமறிந்திருபாற்
றேய்ந்துதுடித்தசெழும்பவளங்—காய்ந்திலங்கி
முத்தமுந்தேனும்பொதிந்துமுனிவரையுஞ்
சித்தந்திறைகொள்ளுஞ்செவ்வாயா—ளொத்து
வரிகிடந்தஞ்சனமாடிமணிக
ளுருவநடுவுடையவாகிப்—பெருகிய
தண்ணங்கயலுஞ்சலஞ்சலமுந்தோன்றுதலால்
வண்ணங்கடலனையவாட்கண்ணாள்—ஒண்ணிறத்த
குண்டலஞ்சேர்காதினுள்கோலக்குளிர்மதிய
மண்டிலமேபோலுமலர்முகத்தாள்—வண்டலம்ப
யோசனைநாறுகுழலாளொளிநுதன்மேல்
வாசிகைகொண்டுவடிவமைத்தாள்—மாசில்சீர்ப்
பாதாதிகேசம்பழிப்பிலாள்பாங்கமைந்த
* சீதாரிகொண்டுதன்மெய்புதைத்தாள்—மாதார்ந்
பண்கவருஞ்சொல்லார்பல்லாண்டேத்தப்பாயொளிசேர்

* சீதாரி - போர்வை,

வெண்கவரிவெள்ளத்திடையிருந்—தொண்கேழற்
கண்ணவனையல்லாதுகாணுசெவியவன
தெண்ணருஞ்சீரல்லதிசைகேளா—வண்ணல்
கழலடியல்லதுகைதொழாவஃதான்
றழலங்கைக்கொண்டான்மாட்டன்போர்ந்—தெழிலுடைய
வெண்பாவிரித்துரைக்கும்போழ்தில்விளங்கொளிசேர்
கண்பாவுநெற்றிக்கறைக்கண்டன்—விண்பா
* லரியரணஞ்செற்றுங்கலைபுனலும்பாம்பும்
புரிசடைமேல்வைத்தபுராணன்—எரியிரவி
லாடுமிறைவனமரர்குழாந்தற்சூழ
மாடமறுகில்வரக்கண்டு—கேடில்சீர்
வண்ணச்சிலம்படிமாதரார்தாமுண்ட
கண்ணெச்சிலெம்மையேயூட்டுவா—னண்ணலே
வந்தாய்வளைகவர்ந்தாய்மாலுமருந்துயருந்
தந்தாயிதுவோதகவென்று—நொந்தாள்போற்
கட்டுரைத்துக்கைசோர்ந்தகமுருகிமெய்விளர்த்து
மட்டிவரும்பூங்கோதைமால்கொண்டாள் * கொட்டிமைசேர்
பண்ணுருமின்சொற்பணைப்பெருந்தோட்செந்துவர்வாய்ப்
பெண்ணரவாரம்பெரிதன்றே—விண்ணேங்கி
மஞ்சடையுநீள்குடுமிவாணிலாவீற்றிருந்த
செஞ்சடையான்போந்ததெருவு
பெண்ணீர்மைகாண்மின்பெருந்தோளிணைகாண்மி
னுண்ணீர்மைமேகலையுமுள்படுமின்—றெண்ணீர்மைக்
காறேறுகொன்றையந்தார்க்காபாலிகட்டங்க
னூறேறுபோந்ததுலா

ஆகக் கண்ணி - ௧௬௬.

திரு ஆதியுலா என்கின்ற கைலாய ஞானவுலா முற்றும்.
சேரமான் பெருமாணுயனு ரருளிச்செய்த
திருப்பிரபந்தங்கள் முற்றுப் பெற்றன.
௪௮-பக்கம், ௪௨-வரியில், தனிச்சொல், தலைகரந்தெனவும் பாடமுண்டு

திருச்சிற்றம்பலம்.

மதுரைக்கடைச்சங்கத்துத்தெய்வப்புலவர்களுளொருவராகிய
நக்கீரதேவநாயனர் - அருளிச்செய்த

# கயிலைபாதிகாளத்திபாதித்
## திருவந்தாதி - நேரிசைவெண்பா.

சொல்லும்பொருளுமேதூத்திரியுநெய்யுமா
நல் * லிடிஞ்சிலென்னுடையநாவாகச்—சொல்லரிய

* அரி - அரித்தலென்னு முதனிலைத்தொழில் - உடையோனை யுணர்ந்தலால் - ஆகுபெயர்.
* கொட்டி - கொட்டப்படுவதென்னும் செயப்படுபொருளுணர்த்தும் - இகரவிகுதித்தொழிற்பெயர்- ஓர்வாச்சியத்தை யுணர்த்தி நின்றது.
* இடிஞ்சில் - அகல்.

வெண்பாவிளக்காவியன்கயிலைமேலிருந்த
பெண்பாகர்க்கேற்றினேன்பெற்று.............................................. (௧)

பெற்றபயனிதுவேயன்றேபிறந்தியான்
கற்றவர்களேத்துஞ்சீர்க்காளத்திக்—கொற்றவற்குத்
தோளாகத்தாடரவஞ்சூழ்ந்தணிந்தவம்மானுக்
காளாகப்பெற்றேனடைந்து.............................................. (௨)

அடைந்துய்மினம்மானையும்மாவிதன்னைக்
குடைந்துண்ணவெண்ணியவெங்கூற்றங்—கடைந்துநுங்
கண்ணுளேபார்க்கும்பொழுதுகயிலாயத்
தண்ணலேகண்டீரரண்.............................................. (௩)

அரணமொருமூன்றுமாரழலாய்வீழ
முரணம்புகோத்தமுதல்வன்—சரணமே
காணுமாலுற்றவன்றன்காளத்திகைதொழுது
பேணுமாலுள்ளம்பெரிது.............................................. (௪)

பெரியவர்காணீரென்னுள்ளத்தின்பெற்றி
தெரிவரியதேவாதிதேவன்—பெரிதுந்
திருத்தக்கோரோத்துந்திருக்கயிலைக்கோனை
யிருத்தத்தான்போந்ததிடம்.............................................. (௫)

இடப்பாகநீள்கோட்டிமவான்பயந்த
மடப்பாவைதன்வடிவேயானல்—விடப்பாற்
கருவடிசேர்கண்டத்தெங்காளத்தியாள்வார்க்
கொருவடிவேயன்றுருவு.............................................. (௬)

உருவுபலகொண்டுணர்வரிதாய்நிற்கு
மொருவனொருபாலிருக்கை—மருவினிய
பூக்கையிற்கொண்டெப்பொழுதும்புத்தேளிர்வந்திறைஞ்சு
மாக்கயிலையென்னுமலை.............................................. (௭)

மலைவரும்போல்வானவருந்தானவருமெல்லா
மலைகடல்வாய்நஞ்செழல்கண்டஞ்சி—நிலைதளரக்
கண்டமையாற்றண்சாரற்காளத்தியாள்வார்நஞ்
சுண்டமையாலுண்டிவ்வுலகு.............................................. (௮)

உலகமனைத்தினுக்குமொண்ணுதன்மேலிட்ட
திலகமெனப்பெறினுஞ்சீசீ—யிலகியசீ
ரீசாதிருக்கயிலையெம்பெருமானென்றென்றே
பேசாதிருப்பார்பிறப்பு.............................................. (௯)

பிறப்புடையர்கற்றோர்பெருஞ்செல்வர்மற்றுஞ்
சிறப்புடையராகுஞ்சீசீ—யிறப்பில்
கடியார்நறுஞ்சோலைக்காளத்தியாள்வா
ரடியாரைப்பேணாதவர்.............................................. (௧௦)

அவரும்பிறந்தாராய்ப்போவார்கொலாவி
யெவருந்தொழுதேத்துமெந்தை—சிவமன்னு
தேக்குவார்சோலைத்திருக்கயிலையேத்தாதே
போக்குவார்வாளாபொழுது.............................................. (௧௧)

வாளாபொழுதுகழிக்கின்றார்மானிடவர்
கேளார்கொலந்தோ * கிறிப்பட்டார்—கேளாடை
யண்ணற் * கணுக்கராய்க்காளத்தியுண்ணின்ற
கண்ணப்பராவார்கதை ................................................ (கஉ)

கதையிலேகேளீர்கயிலாயநோக்கிப்
புதையிருட்கண்மாலோடும்போழ்ச்—சிதையாச்சீர்த்
தீர்த்தன்பாற்பாசுபதம்பெற்றுச்செருக்களத்திற்
பார்த்தன்போர்வென்றிலனோபண்டு ................................................ (கங)

பண்டுதொடங்கியும்பாவித்துநின்கழற்கே
தொண்டுபடுவான்றொடர்வேனைக்—கண்டுகொண்
டாளத்தயாவுண்டோவில்லையோசொல்லாயே
காளத்தியாயுன்கருத்து ................................................ (கச)

கருத்துக்குச்சேயையாய்க்காண்டற்கோர்காண
விருத்திதிருக்கயிலையென்று—லொருத்த
ரறிவானுறுவார்க்கறியுமாறுண்டோ
நெறிவார்சடையாய்நிலை ................................................ (கரு)

நிலையில்பிறவிநெடுஞ்சுழியிற்பட்டுத்
தலைவதடுமாறுகின்றேன்—றலைவின்றிப்
போந்தேறக்கைதாராய்காளத்திப்புத்தேளிர்
வேந்தேயிப்பாசத்தைவிட்டு ................................................ (கசு)

பாசத்தைவிட்டுநின்பாதத்தின்கீழேயென்
னேசத்தைவைக்கநினைகண்டாய்—பாசத்தை
நீக்குமாவல்லகயிலாயநீயென்னைக்
காக்குமாறித்தனையேகாண் ................................................ (கஎ)

காணுதலக்கின்றார்வானோர்கள்காளத்திப்
பூணாரமார்வன்றன்பொற்பாத—நாணுதே
கண்டிடுவான்யானிருந்தேன்காணீர்கடனஞ்சை
யுண்டிடுவான்றன்னையொருங்கு ................................................ (கஅ)

ஒருங்காதுடனேநின்றேனாவொம்மை
நெருங்காமனித்தமொருகா—னெருங்கிக்
கருங்கலோங் * கும்பற்கயிலாயமேயான்
வருங்கொலோநம்பான்மதித்து ................................................ (கக)

நம்பான்மதித்துறையுங்காளத்திநண்ணுதே
வம்பார்மலர்தூய்வணங்காதே—நம்பாநின்
சீலங்களேத்தாதேதீவினையேன்யானிருந்தேன்
காலங்கள்போனகழிந்து ................................................ (உ0)

* கழிந்தகழிகிலாய்நெஞ்சேகழியா
தொழிந்தநாண்மேற்பட்டுயர்ந்தோர்—மொழிந்தசீர்க்

---

* கிறி - பொய்.
* அணுக்கர்- அணுகு- என்னு முதனிலை யடியாகப்பிறந்த வினைமுற்று,
* உம்பல் - யானை.
* கழிந்த - கழிந்தநாளையுணர்த்தலின் வினைமுற்றுப்பெயர்.

கண்ணுதலானெந்தைகயிலாயமால்வரையை
நண்ணுதலாநன்மைநமக்கு.................... (உக)

நமக்கிசைந்தவாநாமுமேத்தினனம்பர்
தமக்கழகுதாமேயறிவ—ரமைப்பொதும்பிற்
கல்லவாநீடருவிக்காளத்தியாள்வாரை
வல்லவாநெஞ்சமேவாழ்த்து.................... (உஉ)

வாழ்த்துவாய்வாழ்த்தாதொழிவாய்மறுசுழியிட்
டாழ்த்துவாயஃதறிவாய்நீயன்றே—யாழ்த்தகைய
வண்டார்பொழிற்கயிலைவாழ்கென்றிருப்பதே
கண்டாயடியேன்கடன்.................... (உந)

கடநாகமூடாடுங்காளத்திக்கோனைக்
கடனாகக்கைதொழுவார்க்கில்லை—யிடநாடி
யிந்நாட்டிற்கேவந்திங்கீண்டிட்டிக்கொண்டுபோ
யந்நாட்டிலுண்டுழலுமாறு.................... (உச)

மாறிப்பிறந்துவழியிடையாற்றிடை
யேறியிழியுமிதுவல்லாற்—றேறித்
திருக்கயிலையேத்தீரேல்சேமத்தாயார்க்கு
மிருக்கயிலைக்கண்டீரினிது.................... (உரு)

இனிதேபிறவியினமரங்களேறிக்
கனிதேர்கடுவன்கடம்மின்—முனிவாய்ப்
பிணங்கிவருந்தண்சாரற்காளத்திபேணி
வணங்கவல்லராயின்மகிழ்ந்து.................... (உசு)

மகிழ்ந்தலரும்வண்கொன்றைமேலேமனமாய்
நெகிழ்ந்துநெகிழ்ந்துள்ளேநெக்குத்—திகழ்ந்திலங்கும்
* விண்ணுறங்காவோங்கும்வியன்கயிலைமேயாயென்
பெண்ணுறங்காளென்செய்கேன்பேசு.................... (உஎ)

பேசும்பரிசறியாள்பேதைபிறர்க்கெல்லா
மேசும்பரிசானளேபாவ—மாசுனைநீர்க்
* காம்பசலையாலிக்குங்காளத்தியென்றென்று
பூம்பசலைமெய்ம்முழுதும்போர்த்து.................... (உஅ)

போர்த்தகளிற்றுரியும்பூண்டபொறியரவுந்
தீர்த்தமகளிருந்தசெஞ்சடையு—மூர்த்தி
குயிலாயமென்மொழியாள்கூறுயவாறுங்
கயிலாயயான்காணக்காட்டு.................... (உகூ)

காட்டினடமாடிக்கங்காளராகிப்போய்
நாட்டிற்பலிபுகுந்துநாடோறு—மோட்டுண்பா
ராணுமென்கொலோகாளத்தியாள்வாரை
வானோர்வணங்குமாவந்து.................... (நo)

---

* விண்ணுறங்கா - விண்ணுற - அங்கா - எனப்பிரித்து- இறுதியகரம்- தொகுத்தல் விகாரமாகக்கொள்க.

* காம்பசலை - காம்பு- அசலை- எனப்பிரிக்க- காம்பு - மூங்கில்- அசலை- பூமி.

வந்தமரரோத்துமடைக்கூழும்வார்சடைமேற்
கொந்தவிழுமாலைகொடுத்தார்கொல்—வந்தித்து
வாலுகுத்தவண்கயிலைக்கோமான்மணிமுடிமேற்
பாலுகுத்த * மாணிக்குப்பண்டு ........................................ (௩௧)

பண்டிதுவேயன்றுகிற்கேளிர்கொல்பல்சருகு
கொண்டிலிங்கத்தும்பினூற்கூட்டிழைப்பக்—கண்டு
நலந்திக்கெலாமேத்துங்காளத்திநாதர்
சிலந்திக்குச்செய்தசிறப்பு........................................ (௩௨)

செய்தசிறப்பெண்ணிலெங்குலக்குஞ்சென்றடைந்து
கைதொழுவார்க்கெந்தைகயிலாயர்—நொய்தளவிற்
காலற்காய்ந்தாரன்றேகாணீர்கழறொழுத
பாலற்காயன்றுபரிந்து ........................................ (௩௩)

பரிந்துரைப்பார்சொற்கேளாளென்பெருமான்பாதம்
பிரிந்திருக்ககில்லாமைபேசும்—புரிந்தமரர்
நாதாவாகாளத்திநம்பாவாவென்றென்று
மாதாவாவுற்றமயல் ........................................ (௩௪)

மயலைத்தவிர்க்கநீவாராயொருமூன்
றெயிலைப்பொடியாகவெய்தாய்—கயிலைப்
பருப்பதவாநின்னுடையபாதத்தின்கீழே
யிருப்பதவாவுற்றாளிவள் ........................................ (௩௫)

இவளுக்குநல்லவாறெண்ணுதிரேலின்றே
தவளப்பொடியிவண்மேற்சாத்தி—யிவளுக்குக்
காட்டுமின்கள்காளத்திகாட்டிக்கமழ்கொன்றை
சூட்டுமின்கடீருந்துயர் ........................................ (௩௬)

துயர்க்கெலாங்கூடாயதோற்குரம்பைப்புக்கு
மயக்கில்வழிகாணமாட்டேன்—வியற்கொடும்போ
ரேற்றானேவண்கயிலையெம்மானேயென்கொலோ
மேற்றானிதற்குவிளைவு ........................................ (௩௭)

விளையும்வினையரவின்வெய்யவிடத்தைக்
களைமினோகாளத்தியாள்வார்—வளைவி
றிருந்தியசீர்சன்றிருநாமமென்னு
மருந்தினைநீர்வாயிலேவைத்து ........................................ (௩௮)

வாயிலேவைக்குமளவின்மருந்தாகித்
தீயபிறவிநோய்தீர்க்குமே—தூயவே
கம்பெருமாதேவியொடுமென்னுகயிலாயத்
தெம்பெருமானைஞ்செழுத்து ........................................ (௩௯)

அஞ்செழுத்துங்கண்டீரருமறைகளாவனவு
மஞ்செழுத்துங்கற்கவணித்தாகு—நஞ்சவித்த
காளத்தியார்யார்க்குங்காண்டற்கரிதாய்ப்போய்
நீளத்தேநின்றநெறி ........................................ (௪௦)

---

* மாணி - பிரமசாரி.

நெறிவார்சடையார்நிலையின்மையீதென்
றறியார்கொல்ந்தோவயர்ந்தார்—நெறியிற்
கனைத்தருவிதூங்குங்கயிலாயமெய்யர்
நினைத்தருவிகண்சோரநின்று ................................................ (சக)

நின்றுமிருந்துங்கிடந்துநடந்தும்யா
மென்றுநினைந்தாலுமென்கொலோ—சென்றுதன்
றுள்வானவரிறைஞ்சுந்தண்சாரற்காளத்தி
யாள்வாரருளாதவாறு ................................................ (சஉ)

அருளாதவாறுண்டேயார்க்கேனுமாக
விருளார்கறைமிடற்றெம்மீசன்—பொருளாய்ந்த
மெய்ம்மெய்யேயுன்னில்வியன்கயிலைமேயான்வந்
திமமையேதீர்க்குமிடர் ................................................ (சங)

இடரீருமக்கோரிடநாடிக்கொண்டு
நடவீரோகாலத்தானுங்கள்—கடல்வாய்க்
கருப்பட்டோங்கொண்முகில்சேர்காளத்திகாண
வொருப்பட்டோங்கண்டீருணர்ந்து ................................................ (சச)

உணருங்காலொன்றையுருத்தெரியக்காட்டாய்
புணருங்காலாரமுதேபோலு—மிணரிற்
கனியவாஞ்சோலைக்கயிலாயமேயா
யினியவாங்காணின்னியல்பு ................................................ (சரு)

நின்னியல்பையாரேயறிவார்நினையுங்கான்
மன்னியசீர்க்காளத்திமன்னவனே—நின்னில்
வெளிப்படுவதேழுலகுமீண்டேயொருகா
லொளிப்பதுவுமானுனுரை ................................................ (சசு)

உரையும்பொருளுமுடலுமுயிரும்
விரையுமலரும்போல்விம்மிப்—புரையின்றிச்
சென்றவாறுங்குந்திருக்கயிலையெம்பெருமா
னின்றவாறெங்குநிறைந்து ................................................ (சஎ)

நிறைந்தெங்குநீயேயாய்நின்றாலுமொன்றின்
மறைந்தைம்புலன்காணவாராய்—சிறந்த
கணியாருந்தண்சாரற்காளத்தியாள்வாய்
பணியாயாலென்முன்பரிசு ................................................ (சஅ)

பரிசறியேன்பற்றிலேன்கற்றிலேன்முற்றுங்
கரியுரியாய்பாதமேகண்டாய்—திரியும்
புரமாளச்செற்றவனேபொற்கயிலைமன்னும்
பரமாவடியேற்குப்பற்று ................................................ (சகூ)

பற்றுவானெவ்வுயிர்க்குமெந்தைபசுபதியே
முற்றுவெண்டிங்கண்முளைசூடி—வற்றுவாங்
கங்கைசேர்செஞ்சடையான்காளத்தியுண்ணின்ற
மங்கைசேர்பாகத்துமன் ................................................ (ருo)

மன்னுகயிலாயமாமுத்தமாணிக்கம்
பொன்னாரமாய்க்கொண்டுபூணுதே—யெந்நாளு

மின்செய்வார்செஞ்சடையாய்வெள்ளெலும்புபூண்கின்ற
தென்செய்வானெந்தாயியம்பு.................................................... (௫௧)

இயம்பாய்மடநெஞ்சேயேனோர்பாலென்ன
பயம்பார்த்துப்பற்றுவானுற்றாய்—புயம்பாம்பா
லார்த்தானேகாளத்தியம்மானேயென்றென்றே
யேத்தாதேவாளாவிருந்து.................................................... (௫௨)

இருந்தவாகாணீரிதுவென்னமாய
மருந்தண்கயிலாயத்தண்ணல்—வருந்திப்போய்த்
தானாளும்பிச்சைபுகும்போலுந்தன்னடியார்
வானாளமண்ணாளவைத்து.................................................... (௫௩)

வைத்தவிருநிதியேயென்னுடையவாழ்முதலே
நித்திலமேகாளத்திநீள்சுடரே—மொய்த்தொளிசே
ரக்காலத்தாசையடிநாயேன்காணுங்கா
லெக்காலத்தெப்பிறவியான்.................................................... (௫௪)

யானென்றுந்தானென்றிரண்டில்லையென்பதனை
யானென்றுங்கொண்டிருப்பனானாலுந்—தேனுண்
டளிகடாம்பாடுமகன்கயிலைமேயான்
றெளிகொடான்மாயங்கள்செய்து.................................................... (௫௫)

மாயங்கள்செய்தைவர்சொன்னவழிநின்று
காயங்கொண்டாடல்கணக்கன்று—காயமே
நிற்பதன்றாதலாற்காளத்திநின்மலன்சீர்
கற்பதேகண்டீர்கணக்கு.................................................... (௫௬)

கணக்கிட்டுக்கொண்டிருந்துகாலனார்நம்மை
வணக்கிலலைப்படாமுன்னம்—பிணக்கின்றிக்
காலத்தானெஞ்சேகயிலாயமேவியநற்
சூலத்தான்பாதந்தொழு.................................................... (௫௭)

தொழுவாள்பெறாளேதன்றோள்வளையுந்தோற்றாண்
மழுவாளன்காளத்திவாழ்த்தி—யெழுவா
ணறுமாமலர்க்கொன்றைநம்முன்னேநாளைப்
பெறுமாறுகாணீரொன்பெண்.................................................... (௫௮)

பெண்ணின்றயலார்முன்பேதைபிறைசூடி
கண்ணின்றநெற்றிக்கயிலைக்கோ—னுண்ணின்ற
காமந்தான்மீதூரநைவாட்குன்கார்க்கொன்றைத்
தாமந்தாமற்றிவளைச்சார்ந்து.................................................... (௫௯)

சார்ந்தாரையெவ்விடத்துங்காப்பனவுஞ்சார்ந்தன்பு
கூர்ந்தார்க்குமுத்திகொடுப்பனவுங்—கூர்ந்துள்ளே
மூளத்தியானிப்பார்முன்வந்துநிற்பனவுங்
காளத்தியார்தங்கழல்.................................................... (௬௰)

தங்கழல்களார்ப்பவிளக்குச்சலன்சலனென்
றங்கழல்களார்ப்பவனலேந்திப்—பொங்ககலத்
தார்த்தாடரவமகன்கயிலைமேயாய்நீ
கூத்தாடன்மேவியவாகூறு.................................................... (௬௧)

கூறுய்நின்பொன்வாயாற்கோலச்சிறுகிளியே
வேறுகவந்திருந்துமெல்லெனவே * நீறுவு
மஞ்சடையுநீள்குடுமிவாளருவிக்காளத்திச்
செஞ்சடையெம்மீசன்றிறம் ........................................ (௬௨)

ஈசன்றிறமேநினைந்துருகுமெம்மைப்போன்
மாசினிறத்தமடக்குருகே—கூசி
யிருத்தியாய்நீயுமிருங்கயிலைமேயாற்
கருத்தியாய்க்காமுற்றுயாம் ........................................ (௬௩)

காமுற்றுயாமன்றேகாளத்தியான்கழற்கே
யாமுற்றதுற்றுயிருங்கடலே—யாமத்து
ஞாலத்துயிரெல்லாங்கண்டுஞ்சநள்ளிருள்கூர்
காலத்துந்துஞ்சாதுன்கண் ........................................ (௬௪)

கண்ணுங்கருத்துங்கயிலாயரோயெமக்கென்
றெண்ணியிருப்பன்யானெப்பொழுது—நண்ணும்
பொறியாடரவசைத்தபூதப்படையா
ரறியார்கொனெஞ்சேயவர் ........................................ (௬௫)

நெஞ்சேயவர்கண்டாய்நேரேநினைவாரை
யஞ்சேலென்றுட்கொண்டருள்செய்வார்—நஞ்சேயுங்
கண்டத்தார்காளத்தியாள்வார்கழல்கண்டீ
ரண்டத்தார்சூடுமலர் ........................................ (௬௬)

அலரோனெடுமாலமரர்கோன்மற்றும்
பலராய்ப்படைத்துக்காத்தாண்டு—புலர்காலத்
தொன்றுகிமீண்டுபலவாகிநிற்கின்றுன்
குன்றுதசீர்க்கயிலைக்கோ ........................................ (௬௭)

கோத்தமலர்வாளிகொண்டனங்கன்காளத்திக்
கூத்தன்மேலன்றுகுறித்தெய்யப்—பார்த்தலுமே
பண்பொழியாக்கோபத்தீச்சுற்றுதலும்பற்றற்று
வெண்பொடியாவீழ்ந்திலனேவெந்து ........................................ (௬௮)

வெந்திறல்வேற்பார்த்தற்கருள்செய்வான்வேண்டியோர்
செந்தறுகட்கேழற்றிறம்புரிந்து—வந்தருளுங்
கானவனுங்கோலமியான்காணக்கயிலாய
வானவர்தங்கோமானேவா ........................................ (௬௯)

வாமான்றேர்வல்லவயப்போர்விசையனைப்போற்
றுமாருலகிற்றவமுடையார்—தாமியார்க்குங்
காண்டற்கரியராய்க்காளத்தியாள்வாரைத்
தீண்டத்தாம்பெற்றமையாற்சென்று ........................................ (௭0)

சென்றிறைஞ்சும்வானோர்தஞ்சிந்தைக்குச்சேயரா
யென்றுமடியார்க்குமுன்னிற்பர்—நன்று
கனியவாஞ்சோலைக்கயிலாயமேயா
ரினியவர்பத்தர்க்கிவர் ........................................ (௭௧)

---

* நீறுவு - நீல் - தாவு - எனப்பிரிக்க - நீலமென்பது - நீலெனநின்றது கடைக்குறை.

இவரேமுதற்றேவரெல்லார்க்குமிக்கா
ரிவரல்லரென்றிருக்கவேண்டாங் — கவராதே
காதலித்தின்றேத்துதிரேற்காளத்தியாள்வார்நீ
ராதரித்ததெய்வமேயாம் ............................................ (எ௨)

ஆமென்றுநாளையுளவென்றும்வாழ்விலே
தாமின்றுவீழ்கைதவமன்று — யாமென்று
மிம்மாயவாழ்வினையேபேணாதிருங்கயிலை
யம்மானைச்சேர்வதறிவு ............................................ (எ௩)

அறியாமலேனுமறிந்தேனுஞ்செய்து
செறிகின்றதீவினைகளெல்லா — நெறிநின்று
நன்முகில்சேர்காளத்திநாதனடிபணிந்து
பொன்முகரியாடுதலும்போம் ............................................ (எ௪)

போகின்றமாமுகிலேபொற்கயிலைவெற்பளவு
* மேகின்றெமக்காகவெம்பெருமா — னேகினா
னுண்ணப்படாநஞ்சமுண்டாற்கென்னுள்ளுறுநோய்
விண்ணப்பஞ்செய்கண்டாய்வேறு ............................................ (எ௫)

வேறேயுங்காக்கத்தகுவேனைமெல்லியலாள்
கூறேயுங்காளத்திக்கொற்றவனே — யேறேறு
மன்பாவடியேற்கருளாதொழிகின்ற
தென்பாவமேயன்றோவின்று ............................................ (எ௬)

இன்றுதொடங்கிப்பணிசெய்வேன்யானுனக்
கென்றுமிளமதியேயெம்பெருமா — னென்றுமென்
னுட்காதலுண்மையுயர்கயிலைமேயாற்குத்
திட்காதேவிண்ணப்பஞ்செய் ............................................ (எஎ)

செய்யசடைமுடியென்செல்வனையான்கண்டெனது
கையறவுமுண்மெலிவும்யான்காட்டப் — பையவே
காரேறுபூஞ்சோலைக்காளத்தியாள்வார்தம்
போரேறேயித்தெருவேபோது ............................................ (எஅ)

போதுநெறியெனவேபேசிநின்பொன்வாயா
லூதத்தருவனொளிவண்டே — காதலாற்
கண்டார்வணங்குங்கயிலாயத்தெம்பெருமான்
வண்டார்மோந்தென்குழற்கேவா ............................................ (எ௯)

வாவாமணிவாயான்மாவின்றளிர்கோதிக்
கூவாதிருந்தகுயிற்பிள்ளா — யோவாதே
பூமாம்பொழிலுடுத்தபொன்மதில்சூழ்காளத்திக்
கோமான்வரவொருகாற்கூவு ............................................ (அ0)

கூவுதலும்பாற்கடலேசென்றவனைக்கூடுகவென்
றேவினான்பொற்கயிலையெம்பெருமான் — மேவியசீ
ரன்பாற்புலிக்காலன்பாலன்பாலாசையினாற்
றன்பாற்பால்வேண்டுதலுந்தான் ............................................ (அக)

---

* ஏகின்றெமக்கு - ஏகின்ற எமக்கெனப்பிரிக்க — பெயரெச்சத்திறுதி அகரம் - தொகுத்தல் விகாரம்.

தானேயுலகாள்வான்றான்கண்டவாவழக்க
மானான்மற்றாரிதனையன்றென்பார்—வானோர்
களைகண்டானாய்நின்றகாளத்தியாள்வார்
வளைகொண்டார்மாறந்தார்வந்து.............................................. (௮௨)

வந்தோரரக்கனார்வண்கயிலைமால்வரையைத்
தந்தோள்வலியினையேதாங்கருதி—யந்தோ
விடந்தாரிடந்திட்டிடாற்கீழெலிபோற்
கிடந்தார்வலியெலாங்கெட்டு.............................................. (௮௩)

கெட்டவரக்கரோவேதியரோகேளீர்கொல்
பட்டதுவுமோராதுபண்டொருநா—ளொட்டக்
கலந்தரனார்காளத்தியாள்வார்மேற்சென்று
சலந்தரனார்பட்டதுவுந்தாம்.............................................. (௮௪)

தாம்பட்டதொன்றுமறியார்கொல்சார்வரோ
காம்புற்றசெந்நெற்கயிலைக்கோன்—பாம்புற்ற
வாரத்தார்பத்தர்க்கருகணையார்காலனார்
தூரத்தேபோவார்தொழுது.............................................. (௮௫)

தொழுதுநமனுந்தன்றூதுவர்க்குச்சொல்லும்
வழுவில்சீர்க்காளத்திமன்னன்—பழுதிலாப்
பத்தர்களைக்கண்டாற்பணிந்தகலப்போமின்க
ளத்தனையுஞ்சேய்த்தாகவென்று.............................................. (௮௬)

வென்றைந்துங்காமாதிவேரறுத்துமெல்லவே
யொன்றநினைதிரேலொன்றலாஞ்—சென்றங்கை
மானுடையானென்னையுடையான்வடகயிலை
தானுடையான்றன்னுடையதாள்.............................................. (௮௭)

தாளொன்றாற்பாதாளமூடுருவத்தண்விசும்பிற்
றோளொன்றாலண்டங்கடந்துருவித்—தோளொன்றாற்
றிக்கனைத்தும்போக்குந்திறற்காளிகாளத்தி
நக்கனைத்தான்கண்டநட்டம்.............................................. (௮௮)

நட்டமாடுஞ்சங்கரன்றானான்முகனுங்காணான்
படமாடுபாம்பணையான்காணான்—விடமேவுங்
காரோறுகண்டன்கயிலாயன்றன்னுருவை
யாரேயறிவாரிசைந்து.............................................. (௮௯)

இசையுந்தன்கோலத்தையான்காணவேண்டி
வசையில்சீர்க்காளத்திமன்ன—னசைவின்றிக்
காட்டுமேற்காட்டிக்கலந்தென்னைத்தன்னோடுங்
கூட்டுமேற்கூடலேகூடு.............................................. (௯0)

கூடியிருந்துபிறர்செய்யுங்குற்றங்க
ணாடித்தங்குற்றங்கணாடாதே—வாடி
வடகயிலையேத்தாதேவாழ்ந்திடுவான்வேண்டி
லடகயிலலாரமுதைவிட்டு.............................................. (௯௧)

விட்டாவிபோகவுடல்கிடந்துவெந்தீயிற்
பட்டாங்குவேமாறுபார்த்திருந்து—மொட்டாவாங்
கள்ளிருக்கும்பூஞ்சோலைக்காளத்தியுண்ணின்ற
வள்ளலைச்சென்றேத்தமனம்.......................................... (கூஉ)

மனமுற்றுமையலாய்மாதரார்தங்கள்
கனமுற்றுங்காமத்தேவீழ்வர்—புனமுற்
றினக்குறவரோத்துமிருங்கயிலைமேயான்
றனக்குறவுசெய்கலார்தாழ்ந்து.......................................... (கூ௩)

தாழ்ந்தசடையுந்தவளத்திருநீறுஞ்
சூழ்ந்தபுலியதளுஞ்சூழரவுஞ்—சேர்ந்து
நெருக்கிவாஞேரிறைஞ்சுங்காளத்தியாள்வார்க்
கிருக்குமாகோலங்களேற்று.......................................... (கூச)

ஏற்றின்மணியேயமையாதோவீர்ஞ்சடைமேல்
வீற்றிருந்தவெண்மதியும்வேண்டுமோ—வாற்றருவி
கன்மேற்பட்டார்க்குங்கயிலாயத்தெம்பெருமா
னென்மேற்படைவிடுப்பாற்கீங்கு.......................................... (கூரு)

ஈங்கேவாவென்றருளியென்மனத்திலெப்பொழுது
நீங்காமனீவந்துநின்றலுங்—தீங்கை
யடுகின்றகாளத்தியாள்வாய்நாணல்ல
பணிகின்றவண்ணம்பணி.......................................... (கூசா)

பணியாதுமுன்னிவனைப்பாவியேன்வாளா
கணியாதுகாலங்கழித்தே—னணியுங்
கருமாமிடற்றெங்கயிலாயத்தெங்கள்
பெருமானதில்லைபிழை.......................................... (கூஎ)

பிழைப்புவாய்ப்பொன்றறியேன்பித்தேறினற்போ
லழைப்பதேகண்டாயடியே—னழைத்தாலு
மென்னுதரவேகொண்டின்பொழில்சூழ்காளத்தி
மன்னுதருவாய்வரம்.......................................... (கூஅ)

வரமாவதெல்லாம்வடகயிலைமன்னும்
பரமாவுன்பாதாரவிந்தஞ்—சிரமார
வேத்திடும்போதாகவந்தென்மனத்திலெப்பொழுதும்
வைத்திடுநீவேண்டேனியான்மற்று.......................................... (கூகூ)

மற்றும்பலபிதற்றவேண்டாமட நெஞ்சே
கற்றைச்சடையண்ணல்காளத்தி—நெற்றிக்கண்
ணூராவமுதின்றிருநாமமஞ்செழுத்துஞ்
சோராமலெப்பொழுதுஞ்சொல்.......................................... (௱)

கயிலைபாதி காளத்திபாதித்திருவந்தாதி

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

———o———

# திருவீங்கோய்மலையெழுபது.

அடியுமுடியுமரியுமயனும்
படியும்விசும்பும்பாய்ந்தேறி—நொடியுங்கா
லின்னதெனவறியாவீங்கோயேயோங்கார
மன்னதெனநின்றான் மலை......... ... ...... ... ...... (க)

அந்தவிளமாக்குழவியாயம்பிரிந்ததற்குக்
கொந்தவிழ்தேன்றோய்த்துக்குறமகளிர்—சந்தி
னிலைவளைக்கையாற்கொடுக்குமீங்கோயேமேரு
மலைவளைக்கைவில்லி மலை ... ...... ......... ...... (உ)

அம்பவளவாய்மகளிரம்மனைக்குந்தம்மனையைச்
செம்பவளந்தாவென்னச்சேர்க்குறத்தி—கொம்பி
னிறுதலையினுற்கிளைக்குமீங்கோயேநம்மேன்
மறுதலைநோய்தீர்ப்பான் மலை...... ...... ... ...... ... (ங)

அரிகரியைக்கண்டவிடத்தச்சலிப்பாயோடப்
பிரிவரியதன்பிடியைப்பேணிக்—கரிபெரிதுங்
கையெடுத்துநீட்டிக்கதஞ்சிறக்குமீங்கோயே
மையெடுத்தகண்டன் மலை ............ ............ ...... (ச)

அரியுமுழுவையுமாளியுமேயீண்டிப்
பரியிட்டுப்பன்மலர்கொண்டேறிச்—சொரிய
வெரியாடிகண்டுவக்குமீங்கோயேகூற்றந்
திரியாமற்செற்றான் சிலம்பு... ...... ...... ... ... (ரு)

ஆளிதொடரவரிதொடரவாங்குடனே
வாளிகொடுதொடருமாக்குறவர்—கோளி
னிடுசிலையினுற்புடைக்குமீங்கோயேநம்மேற்
கொடுவினைகள்வீட்டுவிப்பான்குன்று........... ...... ... (சு)

இடுதினைதின்வேழங்கடியக்குறவர்
வெடிபடுவெங்கவண்கலூன்ற—நெடுநெடென்ன
நீண்டகழைமுத்துதிர்க்குமீங்கோயேயெங்குமணி
பூண்ட*களையேறிபொருப்பு ...... ... ... ... ... (எ)

ஈன்றகுறமகளிர்க்கேனழுதகுறத்தி
நான்றகறிக்கேறசலை†நற்கிழங்—கூன்றுவைத்
தென்னன்னையுண்ணென்றெடுத்துரைக்குமீங்கோயே
மின்னன்னசெஞ்சடையான்வெற்பு ...... ......... ...... (அ)

* களை - குறுக்கும்வழிக்குறுக்கல்,

† அசலை - பூமி.

ஈன்றகுழவிக்குமந்தியிருவரைமேல்
நான்றநறவத்தைத்தானணுகித்—தோன்ற
விரலாற்றேன்றேய்த்தூட்டுமீங்கோயேநம்மேல்
வரலாநோய்தீர்ப்பான்மலை ...... ......... ...... ...... (௯)

உண்டிருந்ததேனையறுபதங்களூடிப்போய்ப்
பண்டிருந்தயாழ்முரலப்பைம்பொழில்வாய்க்—கண்டிருந்த
மாமயில்களாடிமருங்குவருமீங்கோயே
பூமயிலை‡தாதைபொருப்பு...... ...... ...... ...... ... (௧0)

ஊடிப்பிடியுறங்கவொண்கதலிவண்கனிக்
கூடிக்களிறுநயந்தெடுத்துக்—கூடிக்
குணமருட்டிக்கொண்டாடுமீங்கோயேவானோர்
குணமருட்டுங்கோளரவன்குன்று... ...... ...... ...... (௧௧)

எய்யத்தொடுத்தோன்குறத்திநோக்கேற்றதெனக்
கையிற்கணைகளைந்துகன்னிமான்—பையப்போ
வென்றென்றுபாவனைசெயீங்கோயேதூங்கெயில்கள்
சென்றன்றுவென்றான்சிலம்பு... ... ...... ...... ... (௧௨)

ஏழையிளமாதேயென்னொடுநீபோதென்று
கூழைமுதுவேடன்கொண்டுபோய்—வேழ
விளைக்குவால்வீட்டுவிக்குமீங்கோயேநந்தம்
வினைக்குவால்வீட்டுவிப்பான்வெற்பு... ...... ... ... ... (௧௩)

ஏனமுழுதபுழுதியினமணியைக்
கானவர்தம்மக்கள்கனலென்னக்—கூன
லிறுக்கங்கதிர்வெதுப்புமீங்கோயேநம்மேல்
மறுக்கங்கடீர்ப்பான்மலை... ... ... ... ... ... (௧௪)

ஏனங்கிளைத்தவினப்பவளமாமணிகள்
கானலெரிபரப்பக்கண்டஞ்சி—யானை
யினமிரியமுல்லைநகுமீங்கோயேநம்மேல்
வினையிரியச்செற்றுகந்தான்வெற்பு... ... ... ... (௧௫)

ஒருகணையுங்கேழலுயிர்செகுத்துக்கையி
லிருகணையுமானைமேலெய்ய—வருகணையு
மாளரிதானோடவரிவெருவுமீங்கோயே
கோளரிக்குங்காண்பரியான்குன்று ... ... ... ... (௧௬)

ஓங்கிப்பரந்தெழுந்தவொள்ளிலவத்தண்போதைத்
தூங்குவதோர்கொள்ளியெனக்கடுவன்—மூங்கிற்
றுளையிறுத்துக்கொண்டோச்சுமீங்கோயேசங்கக்
குழையிறுத்தகாதுடையான்குன்று... ... ... ... ... (௧௭)

ஓடுமுகிலையுகிராலிறவூன்றி
மாடுபுகவான்கைமிகமடுத்து—நீடருவி
மாச்சீயமுண்டுபுனங்களிக்குமீங்கோயே
கோச்சீயங்காண்பரியான் குன்று ... ... ... ... (௧௮)

† மயிலை - மயிலை மயிலூர்தியையுடைய கடவுள்.

கண்டகளிறுகர்ந்தமந்திகருஞ்சுனைநீ
ருண்டுகுளிர்ந்திலவென்றூடிப்போய்க்—கொண்ட
லிறைக்கிறிவாய்மடுக்குமீங்கோயேநான்கு
மறைக்கிறுகண்டான்மலை... ... ... ... ... ... (கக)

கருங்களிற்றின்வெண்கொம்பாற்கல்லுரல்வாய்நல்லார்
பெருந்தினைவெண்பிண்டியிடிப்ப—வருங்குறவன்
கைக்கொணருஞ்செந்தேன்கலந்துண்ணுமீங்கோயே
மைக்கொணருங்கண்டன்மலை... ... ... ... ... (உ௦)

கனையபலாங்கனிகள்கல்லிளையர்தொக்க
நனையகலத்துரத்திலேந்தி—மனைகள்
வரவிரும்பியாய்ப்பார்க்குமீங்கோயேபாங்கார்
குரவரும்புசெஞ்சடையான்குன்று ...... ... ... ... (உக)

கடக்களிறுகண்வளரக்கார்நிறவண்டார்ப்பச்
சுடர்க்குழையார்பாட்டெழவுகேட்டு—மடக்கிளிகள்
கீதந்தெரிந்துரைக்குமீங்கோயேயாற்கீழ்நால்
வேதந்தெரிந்துரைப்பான்வெற்பு... ... ... ... ... (உஉ)

கறுத்தமுலைச்சூற்பிடிக்குக்காரியானைசந்த
மிறுத்துக்கைநீட்டுமீங்கோயே—செறுத்த
கடதடத்ததோலுரிவைகற்பணமயப்போர்த்த
விடமிடற்றினன்மருவும்வெற்பு ... ... ... ... (உ௩)

கங்குலிரைதேரும் * காகோதரங்கேழற்
கொம்பினிடைக்கிடந்தகூர்மணியைப்—பொங்கி
யுருமென்றுபுற்றடையுமீங்கோயேகாமன்
வெருவொன்றக்கண்சிவந்தான்வெற்பு ... ... ... ... (உச)

கலவிக்களிறசைந்தகாற்றெங்குங்காணு
திலைகைக்கொண்டேந்திக்கால்வீச—வுலவிச்சென்
றெண்பிடிகாற்றேற்றுகக்குமீங்கோயேபாங்காய
வெண்பொடிநீற்றான்மருவும்வெற்பு.. ... ... ... ... (உ௫)

கனணிப்பிடிமுதுகிற்கப்பருவமுட்பருகி
யன்னைக்குடிவரலாறஞ்சிப்—பின்னரே
யேன்றருக்கிமாதவஞ்செயீங்கோயேநீங்காத
மான்றரித்தகையான்மலை ... ... ...... ... ... (உ௬)

கள்ளமுதுமறவர்காட்டகத்துமாவேட்டை
கொள்ளென்றழைத்தகுரல்கேட்டுத்—துள்ளி
யினக்கவலைபாய்ந்தோடுமீங்கோயேநந்த
மனக்கவலைதீர்ப்பான்மலை ...... ... ... ... ... (உஎ)

கல்லைப்புனன்மேய்ந்துகார்க்கொன்றைத்தார்போர்த்துக்
கொல்லையெழுந்தகொழும்புறவில்—முல்லையங்கட்
பல்லரும்புமொய்த்தீனுமீங்கோயேமூவெயிலுங்
கொல்லரும்பக்கோல்கோத்தான்குன்று... ... ... .. (உஅ)

---

* காகோதரம் - பாம்பு.

கல்லாக்குரங்குபளிங்கிற்கனிகாட்ட
வெல்லாக்குரங்குமுடனீண்டி—வல்லே
யிருந்துகிராற்கற்கிளைக்குமீங்கோயேமேனி
பொருந்தவராப்பூண்டான்பொருப்பு ...... ...... ...... (உகூ)

கண்கொண்டவிர்மணியினுப்பட்கருங்கேழல்
வெண்கோடுவீழ்ந்தவியன்சரரற்—றண்கோ
டிளம்பிறைசேர்வான்கடுக்குமீங்கோயேவேத
விளம்பிறைசேர்வான்கடுக்கும்வெற்பு... ... ...... ... (௩0)

காந்தளங்கைத்தலங்கள்காட்டக்களிமஞ்ஞை
கூந்தல்விரித்துடனேகூத்தாடச்—சாய்ந்திரங்கி
யேர்க்கொன்றைபொன்கொடுக்குமீங்கோயேசெஞ்சடைமேற்
கார்க்கொன்றையேன்றான்கடறு...... ... ... ... ... (௩க)

குறமகளிர்கூடிக்கொழுந்தினைகள்குற்றி
நறவமாக்†கஞ்சகங்கணுடிச்—சிறுகுறவர்
கைந்நீட்டியுண்ணக்களித்துவக்குமீங்கோயே
மைந்நீட்டுங்கண்டன்மலை...... ......... ... ... ... (௩உ)

கூழைமுதுமந்திகோல்கொண்டுதேன்பாய
வேழையிளமந்திசென்றிருந்து—வாழை
யிலையாற்றேனுண்டுலவுமீங்கோயேயிஞ்சி
சிலையாற்றான்செற்றான்சிலம்பு... ... ... ... ... (௩௩)

கொல்லையிளவேங்கைக்கொத்திறுத்துக்கொண்டுசுனை
மல்லைநீர்மஞ்சனமாநாடிக்கொண்—டொல்லை
யிருங்கைக்களிறேறுமீங்கோயேமேனோய்
‡ வருங்கைகளைவான்மலை ... ... ... ... ... (௩ச)

கொவ்வைக்கனிவாய்க்குறமகளிர்கூந்தல்சேர்
சவ்வைக்கடிபிடிக்குங்காதன்மையாற்—செவ்வை
யெறித்தமலர்கொண்டுவிடுமீங்கோயேயன்பர்
குறித்தவரந்தான்கொடுப்பான்குன்று...... ... ... ... (௩ரு)

கொடுவிற்சிலைவேடர்கொல்லைபுகாமற்
படுகுழிகள்கல்லுதல்பார்த்தஞ்சி—நெடுநாகந்
தண்டேன்றிச்செல்லுஞ்சீரீங்கோயேதாழ்சடைமேல்
வண்டேன்றுந்தாரான்மலை. ... ... ... ... (௩சு)

கோங்கினரும்பழித்தகொங்கைக்குறமகளிர்
வேங்கைமணிநீழல்விளையாடி—வேங்கை
வரவதனைக்கண்டிரியுமீங்கோயேதீங்கு
வரவதனைக்காப்பான்மலை ...... ... ...... ... (௩எ)

சந்தனப்பூம்பைந்தழையைச்செந்தேனிற்றோய்த்தியானை
மந்தண்மடப்பிடியின்வாய்க்கொடுப்ப—வந்ததன்
கண்களிப்பத்தான்களிக்குமீங்கோயேதேங்காதே
விண்களிப்பநஞ்சுண்டான்வெற்பு ... ... ... ... (௩அ)

---

† கஞ்சகம் - கஞ்சம் - கருவியாகுபெயர் - க - பிரத்தியம்.
‡ வருங்கை - விரிக்கும்வழிவிரித்தல்.

சந்தினிலையதனுட்டண்பிண்டிதேன்கலந்து
கொந்தியினிதுண்ணக்குறமகளீர்—மந்தி
யினமகளீர்வாய்க்கொடுத்துண்ணீங்கோயேவெற்பின்
மனை*மகளீர்பாகன்மலை ... ... ... ... ... (ஙகூ)

சாரற்குறத்தியர்கடண்மருப்பால்வெண்பிண்டி
சேரத்தருக்கிமதுக்கலந்து—வீரத்
தமரினிதாவுண்ணுஞ்சீரீங்கோயேயின்பக்
குமரன்முதுதாதையார்குன்று ... ... ... ... (சய)

தாயோங்கித்தாமடருந்தண்சாரலொண்கான
வேயோங்கிமுத்தமெதிர்பிதுங்கித்—தீயோங்கிக்
கண்கன்றித்தீவிளைக்குமீங்கோயேசெஞ்சடைமேல்
வண்கொன்றைத்தாரான்வரை. ...... ... (சக)

செடிமுட்டச்சிங்கத்தின்சீற்றத்தீக்கஞ்சிப்
பிடியட்டமாக்களிறுபேர்ந்து—கடிமுட்டி
யென்னேசீயென்னுஞ்சீரீங்கோயேயேந்தழலிற்
பொன்னேரனையான்பொருப்பு ......... ......... ... (சஉ)

சுனைநீடுதாமரையின்றாதளைந்துசோதிப்
புனைநீடுபொன்னிறத்தவண்டு—மனைநீடி
மன்னிமணம்புணருமீங்கோயேமாமதியஞ்
சென்னியணிந்தான்சிலம்பு ... ...... ...... (சங)

செந்தினையின்வெண்பிண்டிபச்சைத்தேனூற்குழைத்து
வந்தவிருந்தூட்டுமணிக்குறத்தி—பந்தியாத்
தேக்கிலைகளிட்டுச்சிறப்புரைக்குமீங்கோயே
மாக்கலைகள்வைத்தான்மலை ... ... ... ... (சச)

தடங்குடைந்தகொங்கைக்குறமகளீர்தங்க
ளிடம்புகுந்தங்கின்னறவமாந்தி—யுடன்கலந்து
மாக்குரவையாடிமகிழ்ந்துவருமீங்கோயே
கோக்குரவையாடிகொழுங்குன்று ... ... ... (சரு)

தாமரையின்றாடகைத்ததாமரைகடாடகையத்
தாமரையிற்பாய்ந்துகளுந்தண்புறவிற்—றாமரையி
னீட்டம்புலிசிதறுமீங்கோயேயெவ்வுயிர்க்கும்
வாட்டங்கடீர்ப்பான்மலை ... ... ... ... (சசா)

தெள்ளகட்டபூஞ்சுனையதாமரையின்றேமலர்வாய்
வள்ளவட்டப்பாழிமடலேறி—வெள்ளகட்ட
காராமைகண்படுக்குமீங்கோயேவெங்கூற்றைச்
சேராமற்செற்றான்சிலம்பு ......... ...... ...... ... (சஎ)

தேமருவுபூஞ்சுனைக்கட்புக்குச்செழு ............ ...... (சஅ)

(சகூ) (ருo) (ருக) (ருஉ) (ருங) (ருச) (ருரு) (ருசா) (ருஎ) (ருஅ) (ருகூ) (சாo)
(சாக.)

---

* வெற்பின்மனை - வெற்பின் மன் ஐ எனப்பிரித்து, வெற்பரசன் எனப்பொருள் கொண்டு, ஐகாரத்தை இடைச்சொல்லாகக்கொள்க. [illegible]

கலைகள்வருவனகள்கண்டு—சிலையை
யிருந்தெடுத்துக்கோறெரியுமீங்கோயேமானைப்
புரிந்திடத்துக்கொண்டான்பொருப்பு ...... ... ... (௬௨)

மத்தக்கரிமுகத்தைவாளரிகள்பீறவொளிர்
முத்தம்பனிசிகர்க்குமொய்ம்பிற்றா—லத்தகைய
வேனற்புனநீடுமீங்கோயேதேங்குபுனல்
கூனற்பிறையணிந்தான்குன்று ... ... ... ... (௬௩)

மந்தியினங்கண்மணிவரையினுச்சிமேன்
முந்தியிருந்துமுறைமுறையே—நந்தி
யளைந்தாடியாலிக்குமீங்கோயேகூற்றம்
வளைந்தோடச்செற்றான்மலை ......... ...... ...... (௬௪)

மந்திமகவினங்கள்வண்பலவினொண்சுளைகண்
முந்திப்பறித்தமுறியதனுட்—சிந்திப்போய்த்
தேனாறுபாயுஞ்சீரீங்கோயேசெஞ்சடைமேல்
வானாறுவைத்தான்மலை ... ... (௬௫)

முள்ளார்ந்தவெள்ளிலவமேறிவெறியாது
கள்ளார்ந்தபூப்படியுங்கார்மயிரு—னொள்ளா
ொரிநடுவுட்பெண்கொடியாரோய்க்குமீங்கோயே.
புரிநெடுநூன்மார்பன்பொருப்பு ... ......(௬௬)

வளர்ந்தவிளங்கன்னிமாங்கொம்பின்கொங்கை
யளைந்துவடுப்படுப்பான்வேண்டி—யிளந்தென்ற
லெல்லிப்புகநுழையுமீங்கோயேதீங்கருப்பு
வில்லிக்குக்கூற்றானான்வெற்பு. ... ... ... ... ... (௬௭)

வானமதிதடவலுற்றவிளமந்தி
கானமுதுவேயின்கண்ணேறித்—தானங்
கிருந்துயரக்கைநீட்டுமீங்கோயேநம்மேல்
வருந்துயரநீர்ப்பான்மலை... ... ... ...... ... (௬௮)

வேய்வனத்துளியானைதினைகவரவேறிருந்து
காய்வனத்தேவேடன்கணைவிசைப்ப—வேயனைத்து
மாப்பிடிமுன்னோட்டுமீங்கோயேமறைகலிக்கும்
பூப்பிடிபொற்றாளான்பொருப்பு...... ... ... ......... (௬௯)

வழகிதழ்க்காந்தண்மேல்வண்டிருப்பவொண்டீ
முழுகியதென்றஞ்சிமுதுமந்தி—பழகி
எழுந்தெழுந்துகைநெரிக்குமீங்கோயேதிங்கட்
கொழுந்தெழுந்தசெஞ்சடையான்குன்று... ... ... ... (௭௦)

திருச்சிற்றம்பலம்.

ஈங்கோய்மலையெழுபது முற்றும்.

திருச்சிற்றம்பலம்.

நக்கீரதேவநாயனாரருளிச்செய்த

# திருவலஞ்சுழிமும்மணிக்கோவை.

## அகவல்.

வணங்குதும்வாழிநெஞ்சேபுணர்ந்துடன்
பொருகடன்முகந்துகருமுகிற்கணநற்
படவரவொடுங்கமின்னிக்குடவரை†
பொழிந்துகொழித்திழியருவிகுணகடன்
மடுக்குங்காவிரிமடந்தைவார்புன
லுடுத்தமணிநீர்வலஞ்சுழி
யணிநீர்க்கொன்றையண்ணலதடியே ... ... (௧)

## வெண்பா.

அடிப்போதுதந்தலைவைத்தவ்வடிகளுன்னிக்
கடிப்போதுகைக்கொண்டார்கண்டார்—முடிப்போதா
வாறுகஞ்சூடும்வலஞ்சுழியான் வானோருங்
காணாதசெம்பொற்கழல் ... ... ... ...... ... (௨)

## கலித்துறை.

கழல்வண்ணமுஞ்சடைக்கற்றையுமற்றவர்காணகில்லாத்
தழல்வண்ணங்கண்டேதளர்ந்தாரிருவரந்தாமரையி
னிழல்வண்ணம்பொன்வண்ணநீனிறவண்ணநெடியவண்ண
மழல்வண்ணமுந்நீர்வலஞ்சுழியாள்கின்றவண்ணலையே ... ... (௩)

## அகவல்.

அண்ணலதுபெருமைகண்டனங்கண்ணுதற்
கடவுண்மன்னியதடமல்குவலஞ்சுழிப்
பனிப்பொருட்பயந்துபல்லவம்பழிக்குந்
திகழொளிமுறுவற்றேமொழிச்செவ்வாய்த்
திருந்திருங்குழலியைக்கண்டு
வருந்தியென்னுள்ளம்வந்தவப்போதே ... ... (௪)

## வெண்பா.

போதெலாம்பூங்கொன்றைகொண்டிருந்தபூங்கொன்றைத்
தாதெலாந்தன்மேனிதைவருமாற்—றீதின்
மறைக்கண்டன்வானோன்வலஞ்சுழியான்சென்னிப்
பிறைக்கண்டங்கண்டணைந்தபெண் ...... ......... ... (௫)

---

† குடவரை - மேற்றிசையினுள்ளமலை அதுசையமலை,

கலித்துறை.

பெண்கொண்டிருந்துவருந்துஞ்சொலாம்பெருமான்றிருமால்
வண்கொண்டசோலைவலஞ்சுழியான்மதிசூடிநெற்றிக்
கண்கொண்டகோபங்கலந்தனபோன்மின்னிக்கார்ப்புனத்துப்
பண்கொண்டுவண்டினம்பாடநின்றூர்த்தனபன்முகிலே ... ... (௬)

அகவல்.

முகிற்கணமுழங்கமுனிந்தவேழ
மெயிற்றிடையடக்கியவெகுளியாற்ற
வணிநடைமடப்பிடியருகுவந்தளைதருஞ்
சாரற்றண்பொழிலணைந்துசோருந்
தடமாசுதழீஇயதகலிடந்துடைத்த
தேனுகுதண்டலைத்தெய்வநாறு
†காரிவாரலெம்பெருமநீர்மல்கு
சடைமுடியொருவன்மருவியவலஞ்சுழி
யணிதிகழ்தோற்றத்தங்கயத்தெழுந்த
மணிநீர்க்குவளையன்ன
வணிநீர்க்கருங்கணுயிழைபொருட்டே ... ... (௭)

வெண்பா.

பொருட்டக்கீர்சில்பலிக்கென்றில்புகுந்திரோனு
மருட்டக்கிரியாதுமூொன்றே—மருட்டக்க
மாமறையமென்றூர்வலஞ்சுழிநம்வாழ்வென்றூர்
தாமறைந்தார்காணேன்கைச்சங்கு ...... ... ... ... (௮)

கலித்துறை.

சங்கம்புரளத்திரைசுமந்தேறுங்கழியருகே
வங்கமலியுந்துறையிடைக்காண்டிர்வலஞ்சுழியா
றங்கம்புலனைந்துமாகியநான்மறைமுக்கணக்கன்
பங்கன்றிருவர்க்கொருவடிவாகியபாவையையே ...... ... (௯)

அகவல்.

பாவையாடியதுறையும்பாவை
மருவொடுவளர்ந்தவன்னமுமருவித்
திருவடியடியேன்றீண்டியதிறனுங்கொடியே
னுள்ளங்கொண்ட‡சூழலுங்கள்ளக்
கருங்கண்போன்றகாவியுநெருங்கி
யவளைபோன்றதன்றேதவளச்
சாம்பலம்பொடிச்சாந்தெனத்தைவந்து
தேம்பலம்பிறைச்சென்னிமிசைவைத்த
வெள்ளேற்றுழவன்வீங்குபுனல்வலஞ்சுழி
வண்டினம்பாடுஞ்சோலைக்
கண்டவம்மவக்கடிபொழிருனே ...... ...... (௰)

† காரி - என்னும்பண்புஆகுபெயராயிருளை யுணர்த்திநின்றது.
‡ சூழல் - இடம்,

### வெண்பா.

தானேறுமானேறுகைதொழேன்றண்சடைமேற்
றேனேறுகொன்றைத்திறம்பேசேன்—வானேறு
மையாருஞ்சோலைவலஞ்சுழியானென்கொலென்
கையார்வளைகவர்ந்தவாறு ...... ...... ...... ... (கக)

### கலித்துறை.

ஆறுகற்றைச்சடைக்கொண்டொரொற்றைப்பிறைசூடிமற்றைக்
கூறுபெண்ணுயவன்கண்ணூர்வலஞ்சுழிக்கொங்குதங்கு
நாறுதண்கொம்பரன்னீர்களின்னேநடந்தேகடந்தார்
சீறுவென்றிச்சிலைக்கானவர்வாழ்கின்றசேணெறியே ... ...... (கஉ)

### அகவல்.

நெறிதருகுழலிவிறலியொடுபுணர்ந்த
செறிதருதமிழ்நூற்சீரியாழ்ப்பாண
பொய்கையூரன்புதுமணம்புணர்தர
மூவோமூன்றுபயன்பெற்றனமேநீயவன்
புனைதார்மாலைபொருந்தப்பாடி
யில்லதுமுள்ளதுஞ்சொல்லிக்கள்ள—வாசகம்
வழாமறபேசவண்மையில்
வானரமகளிர்வான்பொருட்பெற்றனையவரோ
லெங்கையர்கொங்கைக்குங்குமந்தழீஇ
விழையாவின்பம்பெற்றனர்யானே
அரனமர்ந்துறையுமணிநீர்வலஞ்சுழிச்
சுரும்பிவர்நறவயற்சூழ்ந்தெழுகரும்பில்
*தீநீரன்னவாய்நீர்சோருஞ்
சிலம்புகுரற்சிறுபறைபூண்ட
வலம்புகுரற்கிண்கிணிக்களிறுபெற்றனனே ... (கங)

### வெண்பா.

தனமேறிப்பீர்பொங்கித்தன்னங்கம்வேருய்
மனம்வேறுபட்டொழிந்தாண்மாதோ—வினமேறிப்
†பாடாலம்வண்டலம்பும்பாய்நீர்வலஞ்சுழியான்
‡கோடாலங்கண்டணைந்தகொம்பு ...... .... ... ... (கச)
கொம்பார்குளிர்மறைக்காடனைவானவர்கூடிநின்று
நம்பாவெனவணங்கப்படுவானைநகரொரிய
வம்பாய்ந்தவனைவலஞ்சுழியானையண்ணுமலைமேல்
வம்பார்நறுங்கொன்றைத்தாருடையானைவணங்குதுமே ......... (கரு)

திருச்சிற்றம்பலம்.

திருவலஞ்சுழிமும்மணிக்கோவைமுற்றிற்று.

---

* தீ - இனிமை.

† பாடலம் - பாதிரிமரம். பாடாலம் நீட்டும்வழிநீட்டல்,

‡ கோடாலம் - கோள்தாலமெனப்பிரித்து வன்மையையுடைய யானைச்செவியெனப்பொருள்கொள்க. கோடாலம் தொகுக்கும்வழித் தொகுத்தல்.

திருச்சிற்றம்பலம்.

நக்கீரதேவரருளிச்செய்த

# திருவெழுகூற்றிருக்கை



அகவற்பா.

ஒருடம்பிருருவாயினையொன்றுபுரிந்
தொன்றிநீரிதழ்க்கொன்றைசூடினை
மூவிலைச்சூலமேந்தினை
சுடருஞ்சென்னிமீமிசை
யிருகோட்டொருமதியெழில்
பெறமிலைச்சினை
யொருகணையிருதோள்செவியுறவாங்கி
மூவெயினூற்றிசைமுரணரண்செகுத்தனை
யாற்றமுன்னெறிபயந்தனைசெறிய
விரண்டுநீக்கி
யொன்றுநினைவோர்க்குறுதியாயினை
யந்நெறியொன்று
மனம்வைத்திரண்டுநினைவிலோர்க்கு
முன்னெறியுலகங்காட்டினையந்நெறி
நான்கெனவூழிதோறினைவறச்
சொல்லுமைந்தலையரவசைத்தசைந்தனை
நான்முகன்மேன்முகங்கபாலமேந்தினை
நான்முகமுப்புரிமார்பி
லிருவரங்கமொருங்குடனேந்திய
வொருவநின்றுதிகாணுதிருவர்
மூவுலகுழன்றுநாற்றிசையுழிதர
வைம்பெருங்குன்றத்தழலாய்த்தோன்றினை
யாறுநின்சடையதைந்துநின்னிலையது
நான்குநின்வாய்மொழிமூன்றுநின்கண்ணே
யிரண்டுநின்குழையேயொன்றுநின்னேறே
யொன்றியகாட்சியுமையவணடுங்க
விருங்களிற்றுரிவைபோர்த்தனைநெருங்கி
முத்தீநான்மறையைம்புலனடக்கிய
வறுதொழிலாளர்க்குறுதிபயந்தனை
யேழிசையின்னரம்பிசைத்தனை
யாறிலமுதம்பயந்தனையைந்தில்
விறலியர்கொட்டுமழுத்தவேந்தினை
யாலநீழலன்றிருந்தறநெறி
நால்வர்கேட்கநன்கினிதுரைத்தனை
நன்றியில்லாமுந்நீர்ச்சூர்மாக்
கொன்றங்கிருவனாயெறிந்தவொருவன்
றுதையொருமிடற்றிருவடிவாயினை
தருமமூவகையுலகமுணரக்

கூறுவைநால்வகை
யிலக்கணவிலக்கியநலத்தகமொழிந்தனை
யைங்கணையவனொடுகாலனையடர்த்தனை
யறுவகைச்சமையமும்நெறிமையில்வகுத்தனை
யேழினோசையிராவணன்பாடத்
தாழ்வாய்க்கேட்டவன்றலையளிபொருத்தினை
யாறியசிந்தையாகியங்கதிர்த்
தேரொருதிசைசெலவிடுத்தோ
னாற்றோணலனேநந்திபிங்கிருடியென்
றேற்றபூதமூன்றுடன்பாட
விருகண்மொந்தையொருகணங்கொட்ட
மட்டுவிரியலங்கன்மலைமகள்காண
நட்டமாடியநம்பவதனாற்
சிறியேன்சொன்னவறிவில்வாசகம்
வறிதெனக்கொள்ளாயாகவேண்டும்
வெறிகமழ்கொன்றையொடுவெண்ணிலவணிந்து
கீதம்பாடியவண்ணல்
பாதஞ்சென்னியுட்பரவுவன்பணிந்தே.

வெண்பா.

பணிந்தேனின்பாதம்பரமேட்டிபானீ
றணிந்தாலவாயிலமர்ந்தாய்—தணிந்தென்மேன்
மெய்யெரிவுதீரப்பணித்தருளுவேதியனே
யையுறவொன்றின்றியமர்ந்து

திருச்சிற்றம்பலம்.

திருவெழுகூற்றிருக்கைமுற்றும்.

திருச்சிற்றம்பலம்.

நக்கீரதேவரருளிச்செய்த

# பெருந்தேவபாணி



சூலபாணியைசுடர்தருவடிவனை
நீலகண்டனைநெற்றியோர்கண்ணனை
பாலவெண்ணீற்றனைபரமயோகியை
காலனைக்காய்ந்தகறைமிடற்றண்ணலை
நூலணிமார்பனைநுண்ணியகேள்வியை
கோலமேனியைகொக்கரைப்பாடலை
வேலுடைக்கையனைவிண்டோய்முடியனை
ஞாலத்தியினைநாதனைகாய்ந்தனை
தேவதேவனைதிருமறுமார்பனை
காலமாகியகடிகமழ்தாரனை
வேதகீதனைவெண்டலையேந்தியை
பாவநாசனைபரமேச்சுவரனை

கீதம்பாடியைகிளர்பொறியரவனை
போதணிகொன்றையெம்புண்ணியவொருவனை
யாதிமூர்த்தியையமரர்கடலைவனை
சாதிவானவர்தம்பெருமான்றனை
வேதவிச்சையைவிடையுடையண்ணலை
யோதவண்ணனையுலகத்தொருவனை
நாதனுகியநன்னெறிப்பொருளினை
மாலைதானெரிமயானத்தாடியை
வேலைநஞ்சினைமிகவமுதாக்கியை
வேதவேள்வியைவிண்ணவர்தலைவனை
யாதிமூர்த்தியையருந்தவமுதல்வனை
யாயிரநூறுக்கறிவரியானை
பேயுருவுதந்தபிறையணிசடையனை
மாசறுசோதியைமலைமகள்கொழுநனை
கூரியமழுவனைகொலற்கருங்காலனை
சீரியவடியாற்செற்றருள்சிவனை
பூதிப்பையனைபுண்ணியமூர்த்தியை
பீடுடையாற்றைப்பிராணிதலைவனை
நீடியநிமலனைநிறைமறைப்பொருளினை
யீசனையிறையனையீறில்பெருமையை
நேசனைநினைப்பவர்நெஞ்சத்துள்ளனை
தாதணிமலரனைதருமனைபிரமனை
காதணிகுழையனைகளிற்றினுரியனை
சூழ்சடைப்புனலனைசுந்தரவிடங்கனை
தார்மலர்க்கொன்றைதயங்குமார்பனை
வித்தகவிதியனை
தீதமர்செய்கைத்திரிபுரமெரித்தனை
பிரமன்பெருந்தலைநிறைய்தாகக்
கருமன்செந்நீர்கபாலநிறைத்தனை
நிறைத்தகபாலச்செந்நீர்நின்று
முறைத்தவுருவாயனைத்தோற்றினை
தேவருமசுரருந்திரம்படக்கடைந்த
வராவமுணஞ்சமமுதமாக்கினை
யீரமினெஞ்சத்திராவணன்றன்னை
வீரமழித்துவிறல்வாள்கொடுத்தனை
திக்கமர்தேவருந்திருந்தாச்செய்கைத்
தக்கன்வேள்வியைத்தளரச்சாடினை
வேதமுநீயேவேள்வியுநீயே
நீதியுநீயேநிமலனீயே
புண்ணியனீயேபுனிதனீயே
பண்ணியனீயேபழம்பொருணீயே
யூழியுநீயேயுலகமுநீயே
வாழியுநீயேவரதனுநீயே
தேவருநீயேதீர்த்தமுநீயே
மூவருநீயேமுன்னெறிநீயே
மால்வரைநீயேமறிகடனீயே
யின்பமுநீயேதுன்பமுநீயே

தாயுநீயே தந்தையுநீயே
விண்முதற்பூதமைந்தவைநீயே
பத்தியுநீயேமுத்தியுநீயே
சொலற்கருந்தன்மைத்தொல்லோய்நீயேயதனாற்
கூடலாலவாய்க்குழகனுவ
தறியாதருந்தமிழ்ப்பழித்தனனடியே
னீண்டியசிறப்பினிணையடிக்கீழ்நின்று
வேண்டுமதுவினிவேண்டுவன்விரைந்தே.

வெண்பா.

விரைந்தேன்மற்றெம்பெருமானேன்வேண்டியதுவேண்டா
திகழ்ந்தேன்பிழைத்தேனடியேன்—விரைந்தென்மேற்
சீற்றத்தைத்தீர்த்தருளுந்தேவாதிதேவனே
யாற்றவுநீசெய்யுமருள் ...... ... ... ... ... ... ... ... ...(க)

திருச்சிற்றம்பலம்.
பெருந்தேவபாணிமுற்றும்.

திருச்சிற்றம்பலம்.

நக்கீரதேவரருளிச்செய்த

# கோபப்பிரசாதம்

அகவற்பா.

தவறுபெரிதுடைத்தேதவறுபெரிதுடைத்தே
வெண்டிங்காக்கருங்கடன்மேற்றுயில்கொள்ளு
மண்டவாணனுக்காழியன்றருளியு
முலகமூன்றுமொருங்குடன்படைத்த
மலரோன்றன்னைவான்சிரமரிந்துங்
கானவேடுவன்கண்பரிந்தப்ப
வானநாடுமற்றவற்கருளியுங்
கடிபடுபூங்கணைக்காமனுருடலம்
பொடிபடவிழித்தும்பூதலத்திசைந்த
மாணிடனாகியதண்டியை
வானவனாக்கியும்
மறிகடலுலகின்மன்னுயிர்கவருங்
கூற்றுவன்றனக்கோர்கூற்றுவனாகியுங்
கடல்படுநஞ்சங்கண்டத்தடக்கியும்
பருவரைசிலையாப்பாந்தணாணாத்
திரிபுரமெரியவொருகணைதுரந்துங்
கற்கொண்டெறிந்தசாக்கியனன்பு
தற்கொண்டின்னருளான்மிகவளித்துங்

கூற்றெனத்தோன்றியுங்கோளரிபோன்றுந்
தோற்றியவாரணத்தீருரிபோர்த்தும்
நெற்றிக்கண்ணுநீள்புயநான்கு
நற்றாநந்தீச்சுவரற்கருளியு
மறிவிலையோராவரக்கனுருடல்
நெறநெறவிறுதரவொருவிரலூன்றியுந்
திருவுருவத்தொடுசெங்கணேறு
மரியனதிண்டிறலசுரனுக்கருளியும்
பல்கதிருரவோன்பற்கெடப்பாய்ந்தும்
மல்குபிங்கிருடிக்குமாவரமீந்துந்
தக்கன்வேள்விதலைகெடச்சிதைத்து
மிக்கவரநந்திமாகாளர்க்கருளியுஞ்
செந்தீக்கடவுடன்கரதலஞ்செத்தியும் *
பைந்தார்நெடும்படைபார்த்தற்கருளியுங்
கதிர்மதிதனையோர்காற்பயன்கெடுத்து
நிதிபயில்குபேரற்குநீணகரீந்துஞ்
சலந்தரனுடலந்தாண்மிகத்தடிந்து
மறைபயின்மாற்கண்டேயனுக்கருளியுந்
தாருகற்கொல்லமுன்காளியைப்படைத்துஞ்
சீர்மலிசிலந்திக்கின்னரசளித்துங்
கார்மலியுருவக்கருடனைக்காய்ந்து
மாலின்கீழிருந்தறநெறியருளியு
மின்னவைபிறவுமெங்களீசன்
கோபப்பிரசாதங்கூறுங்காலைக்
கடிமலரிருந்தோன்கார்க்கடற்கிடந்தோன்
புடமுறுசோலைப்பொன்னகர்காப்போன்
உரைப்போராகிலுமொண்கடன்மாநீ
ரங்கைகொண்டிறைக்குமாதர்போன்றுள
ரொடுங்காப்பெருமையும்பர்கோனை
யடங்காவைம்புலத்தறிவில்சிந்தைக்
கிருமிநாவாற்கிளத்தும்பரமேயஃதான்று
ஒருவகைத்தேவருமிருவகைத்திறமு
மூவகைக்குணமும்நால்வகைவேதமு
மைவகைப்பூதமுமறுவகையிரதமு
மெழுவகையோசையுமெண்வகைஞானமு
மொன்பதின்வகையுமொண்மலர்சிறப்பும்
பத்தின்வகையுமாகியபரமனை
யின்பனைநினைவோர்க்கென்னிடையமுதினைச்
செம்பொனைமணியினைத்தேனினைப்பாலினைத்
தஞ்சமென்றெழுகுந்தன்னடியார்தந்
நெஞ்சம்பிரியாவிமலனைநீடியர் ,
செந்தழற்பவளச்சேணுறுவனையனை
முக்கட்செல்வனைமுதல்வனைமூர்த்தியைக்
கள்ளங்கைவிட்டுள்ளமதுருகிக்
கலந்துகசிந்துதன்கழலிணையவையே

* செத்தல் - ~~வருத்தல்~~ ஒதுக்கல்

நினைந்திடவாங்கேதோன்றுநிமலனைத்
தேவதேவனைத்திகழ்சிவலோகனைப்
பாவநாசனைப்படரொளியுருவனை
வேயார்தோளிமெல்லியல்கூறனைத்
தாயாய்மன்னுயிர்தாங்குந்தந்தையைச்
சொல்லும்பொருளுமாகியசோதியைக்
கல்லுங்கடலுமாகியகண்டனைத்
தோற்றநிலையீறாகியதொன்மையை
நீற்றிடைத்திகழுநித்தனைமுத்தனை
வாக்குமனமுமிறந்தமறையனைப்
பூக்கமழ்சடையனைப்புண்ணியநாதனை
யினையதன்மையனென்றறிவரியவன்
றனைமுன்விட்டுத்தாமற்றுநினைப்போர்
மாமுயல்விட்டுக்காக்கைப்பின்போங்—கலவர்போலவும்
விளக்கங்கிருப்பமின்மினிகவரு
மளப்பருஞ்சிறப்பிலாதர்போலவுங்
* கச்சங்கொண்டுகடுந்தொழின்முடியாக்
கொச்சைத்தேவரைத்தேவரென்றெண்ணிப்
பிச்சரைப்போலவோ
ராரியப்புத்தகப்பேய்கொண்டுபுலம்புற்று
வட்டணைபேசுவர்மானிடம்போன்று
பெட்டினையுரைப்போர்பேதையர்நிலத்துன்
றலைமீன்றலையெண்பலமென்றுலதனை
யறுத்துநிறுப்போரொருத்தரின்மையில்
மத்திரமாகுவர்மாநெறிகிடப்பவோர்
சித்திரம்பேசுவர்தேவராகி
லின்றோர்க்காய்ந்தனரின்றோர்க்கருளின
ரென்றறியவுலகின்முன்னேயுரைப்ப
தில்லையாகிலு
மாடுபோலக்கூடிநின்றழைத்து
மாக்கள்போலவேட்கையீடுண்டு
மிப்படிஞானமப்படியமைத்து
மின்னதன்மையரென்றிருநிலத்து
முன்னேயறியாமூர்க்கமாக்களை
யின்னேகொண்டேகாகூற்றந்
தவறுபெரிதுடைத்தேதவறுபெரிதுடைத்தே

திருச்சிற்றம்பலம்.

கோபப்பிரசாதமுற்றும்.

---

* - கச்சம் துணிவு.

திருச்சிற்றம்பலம்.

நக்கீரதேவநாயனாரருளிச்செய்த

# காரெட்டு



அரவமரைக்கசைத்தவண்ணல்சடைபோல
விரவியெழுந்தெங்கும்மின்னி—யரவினங்க
ளச்சங்கொண்டோடியணையவடைவுற்றே
கைச்சங்கம்போன்முழங்குங்கார் ...... ...... ...... ...... ...... ...... (க)

மையார்மணிமிடறுபோற்கருகிமற்றவன்றன்
கையார்சிலைவிலகிக்காட்டிற்றே—யைவா
யழலரவம்பூண்டானவிர்சடைபோன்மின்னிக்
கழலரவங்காண்புற்றகார் ...... ...... ...... ...... ...... ..... (உ)

ஆலமர்கண்டத்தரன்றன்மணிமிடறுங்
கோலக்குழற்சடையுங்கொல்லேறும்—போல
விருண்டொன்றுமின்றோன்றியம்பொனவ்வானங்
கருண்டொன்றுகூறுதலிற்கார் ...... ...... ...... ...... ...... ...... ...(ங)

இருள்கொண்டகண்டத்திறைவன்றன்சென்னிக்
குருள்கொண்டசெஞ்சடைபோன்மின்னிச்—சுருள்கொண்டு
பாம்பினங்களஞ்சிப்படமொடுங்கவார்த்ததே
காம்பினங்கடோளீஇயக்கார் ...... ...... ...... ...... ...... ... ... ... ...(ச)

கோடரவுங்கோடலரும்பக்குருமணிகான்
றோடரவமெல்லாமளையடைய—நீடரவம்
பொற்பகலம்பூண்டான்புரிசடைபோன்மின்னிற்றே
கற்பகலங்காண்புற்றகார் ............ ...... ...... ............ ...... ......(ரு)

பாரும்பனிவிசும்புபாசுபதன்பல்சடையு
மாருமிருள்கீண்டுமின்விலகி—யூரு
மரவஞ்செலவஞ்சுமஞ்சொலார்காண்பார்
கரவிந்தமென்பாரக்கார் ...... ...... ...... ...... ...... ...... ...... ......(சு)

செழுந்தழல்வண்ணன்செழுஞ்சடைபோன்மின்னி
யழுந்தியலர்போலுயர—வெழுந்தெங்கு
மாவிசோர்நெஞ்சினரையன்பளக்கவுற்றதே
காவிசேர்கண்ணுயக்கார் ...... ...... ...... ...... ...... ...... ...... ...... (எ)

கார்தண்மலரக்கமழ்கொன்றைபொன்சொரியப்
பூந்தளவமாரப்புகுந்தின்றே—யேந்தொளிசே
ரண்டம்போன்மீதிருண்டவாதியானுய்மணிசேர்
கண்டம்போன்மீதிருண்டகார் ...... ...... ...... ... ... ...... ...... ......(அ)

திருச்சிற்றம்பலம்.

காரெட்டுமுற்றும்.



திருச்சிற்றம்பலம்.

நக்கீரதேவரருளிச்செய்த

# போற்றிக்கலிவெண்பா.

திருத்தங்குமார்பிற்றிருமால்வரைபோ
லெருத்தத்திலங்கியவெண்கோட்டுப்—பருத்த
குறுத்தாணெடுமூக்கிற்குன்றிக்கணீல
நிறத்தாற்பொலிந்துநிலமே—முறத்தாழ்ந்து
பன்றித்திருவுருவாய்க்காணாதபாதங்க
ணின்றவாநின்றநிலைபோற்றி—யன்றியும்
புண்டரிகத்துள்ளிருந்தபுத்தேள்கழுகுருவா
வண்டரண்டமூடுருவவாங்கோடிப்—பண்டொருநாட்
காணாணிழியக்கனகமுடிகவித்துக்
கோணாதுநின்றகுறிபோற்றி—நாணாளும்
பேணிக்காலங்கள்பிரியாமைப்பூசித்த
* மாணிக்காவன்றுமதிட்கடவூர்—காண
வரத்திற்பெரியவலிதொலைத்தகால
னுரத்திலுதைத்தவுதைபோற்றி—கரத்தாமே
வெற்பன்மடப்பாவைகொங்கைமேற்குங்குமத்தின்
கற்பழியும்வண்ணங்கசிவிப்பான்—பொற்புடைய
வாமன்மகனாய்மலர்க்கணையொன்றேட்டியவக்
காமனழகழித்தகண்போற்றி—தூமப்
படமெடுத்தவாளரவம்பார்த்தடரப்பற்றி
விடமெடுத்தவேகத்தான்மிக்குச்—சடல
முடங்கவலிக்குமுயலகன்றன்மொய்ம்பை
யடங்கமிதித்தவடிபோற்றி—நடுங்கத்
திருமான்முதலாயதேவரசுரர்
கருமால்கடனுகம்பற்றிக்—குருமாற
நீலமுண்டநீண்முகில்போனெஞ்சழலவந்தெழுந்த
வாலமுண்டகண்டமதுபோற்றி—சாலமண்டிப்
போருகந்தவானவர்கள்புக்கொடுங்கமிக்கடர்க்குந்
தாருகன்றன்மார்பிற்றனிச்சூலம்—வீரங்
கொடுத்தெறியுமாகாளிகோபந்தவிர
வெடுத்தநடத்தியல்புபோற்றி—தடுத்து
வரையெடுத்தவாளரக்கன்வாயாறுதிர
நிரையெடுத்துநெக்குடலமிற்றுப்—புரையெடுத்த
பத்தனையபொன்முடியுந்தோளிருபதும்நெரிய
மெத்தெனவேவைத்தவிரல்போற்றி—யத்தகைத்த
வானவர்கடாங்கூடிமந்திரித்தமந்திரத்தை
மேனவிலவோடிவிதுவிதிர்த்துத்—தானவருக்

* மாணி பிரமசாரி.

கொட்டுக்குறளையுரைத்தவயன்சிரத்தை
வெட்டிச்சிரித்தவிறல்போற்றி—மட்டித்து
* வாலுகத்தானல்லிலிங்கமாவகுத்துமற்றதன்மேற்
பாலுகுப்பக்கண்டுபதைத்தோடி—மேலுகைத்தங்
கோட்டியவன்றாதையிருதாளெறிந்துயிரை
வீட்டியதண்டிக்குவேறாக—நாட்டின்கட்
பொற்கோயிலுள்ளிருத்திப்பூமாலைபோனகமு
நற்கோலமீந்தநலம்போற்றி—நிற்க
வலந்தருமானான்முகனும்வானவருங்கூடி
யலந்தருமால்கொள்ளவடர்க்குஞ்—சலந்தரனைச்
சக்கரத்தாலீர்ந்தரிதன்றாமரைக்கண்சாத்துதலு
மிக்கவஃதன்றீந்தவிறல்போற்றி—யக்கணமே
நக்கிருந்தநாமகளைமூக்கரிந்துநால்வேதந்
தொக்கிருந்தவண்ணந்துதிசெய்ய—மிக்கிருந்த
வங்கைத்தலத்தேயணிமானையாங்கணிந்த
செங்கைத்திறத்ததிறல்போற்றி—திங்களைத்
தேய்த்ததுவேசெம்பொற்செழுஞ்சடைமேற்சேர்வித்து
வாய்த்திமையோர்தம்மையெலாம்வன்சிறையிற்—பாய்த்திப்
பிரமன்குறையிரப்பப்பின்னுமவற்கு
வரமன்றளித்தவலிபோற்றி—புரமெரித்த
வன்றுய்ந்தமூவர்க்கமர்ந்துவரமளித்து
நின்றுய்ந்தவண்ணநிகழ்வித்து—நன்று
நடைகாவன்மிக்கவருள்கொடுத்துக்கோயிற்
கடைகாவல்கொண்டவாபோற்றி—விடைகாவற்
றானவர்கட்காற்றாதன்னடைந்தநன்மைவிறல்
வானவர்கள்வேண்டமயிலூருங்—கோனவனைச்
சேனாபதியாகச்செம்பொன்முடிகவித்து
வானாளவைத்தவரம்போற்றி—மேனா
ளெதிர்த்தெழுந்தவந்தகனையண்டரண்டமுய்யக்
கொதித்தெழுந்தசூலத்தாற்கோத்துத்—துதித்தங்
கவனிருக்கும்வண்ணமருள்கொடுத்தங்கேழேழ்
பவமறுத்தபாவனைகள்போற்றி—கவைமுகத்த
பொற்பாகரைப்பிளந்துகூறிரண்டாப்போகட்டு
மெற்பாசறைப்போகமேல்விலகி—நிற்பால
மும்மதத்துவெண்கோட்டுக்கார்நிறத்தபைந்தறுகண்
வெம்மதத்துவேகத்தான்மிக்கோடி—விம்மி
யடுத்திரைத்துப்பாயுமடுகளிற்றைப்போக
வெடுத்துரித்துப்போர்த்தவிறைபோற்றி—தொடுத்தமைத்த
நாண்மாலைகொண்டணிந்தநால்வர்க்கன்றாணிழற்கீழ்
வாண்மாலையாகும்வகையருளித்—தோண்மாலை
விட்டிலங்கத்தெக்கணமேநோக்கிவியந்தகுண
மெட்டிலங்கவைத்தவிறைபோற்றி—யொட்டி
விசையன்விசையளப்பான்வேடுருவமாகி
யசையவுடறிரியாநின்று—வசையினாற்
பேசுபதப்பானபிழைபொறுத்துமற்றவற்குப்
பாசுபதமீந்தபதம்போற்றி—நேசத்தால்

---

* வாலுகம் - வெண்மணல்.

வாயினீர்கொண்டுமகுடத்துமிழ்ந்திறைச்சி
யாயசீர்ப்போனகமாவங்கமைத்துத்—தூய்சீர்க்
கண்ணிடந்தகண்ணப்பர்தம்மைமிகக்காதலித்து
விண்ணுலகமீந்தவிறல்போற்றி—மண்ணின்மேற்
காளத்திபோற்றிகயிலைமலைபோற்றியென
நீளத்தினுனினைந்துநிற்பார்கள்—தாளத்தோ
டெத்திசையும்பன்முரசமார்த்திமையோர்போற்றிசைப்ப
வத்தனடிசேர்வார்களாங்கு

திருச்சிற்றம்பலம்.

போற்றிக்கலிவெண்பா முற்றும்.

---

திருச்சிற்றம்பலம்.

நக்கீரதேவநாயனாருளிச்செய்த

# திருமுருகாற்றுப்படை.

---

ஒருமுருகாவென்றென்னுள்ளங்குளிரவுவந்துடனே
வருமுருகாவென்றுவாய்வெருவாநிற்பக்கையிங்ஙனே
தருமுருகாவென்றுதான்புலம்பாநிற்பத்தையன்முன்னே
திருமுருகாற்றுப்படையுடனேவருஞ்சேவகனே.

முதலாவது,

## திருப்பரங்குன்றம்.

இணைக்குறளாசிரியப்பா.

உலகமுவப்பவலனேர்புதிரிதரு
பலர்புகழ்ஞாயிறுகடற்கண்டாஅங்
கோவறவிமைக்குஞ்சேண்விளங்கவிரொளி
யுறுநர்த்தாங்கியமதனுடைநோன்றாட்
செறுநர்த்தேய்த்தசெல்லுறழ்தடக்கை
மறுவில்கற்பின்வாணுதல்கணவன்
கார்கோண்முகந்தகமஞ்சூன்மாமழை
வாள்போழ்விசும்பின்வள்ளுறைசிதறித்
தலைப்பெயறலைஇயதண்ணறுங்கானத்
திருள்படப்பொதுளியபராரைமராஅத்
துருள்பூந்தண்டார்புரளுமார்பினன்
மால்வரைநிவந்தசேணுயர்வெற்பிற்
கிண்கிணிகவைஇயவொண்செஞ்சீறடிக்
கணைக்கால்வாங்கியநுசுப்பிற்பணைத்தோட்
கோபத்தன்னதோயாப்பூந்துகிற்
பல்காசுநிரைத்தசில்காழல்குற்
கைபுனைந்தியற்றாக்கவின்பெறுவனப்பி
னாவலொடுபெயரியபொலம்புனையவிரிழைச்
சேணிகந்துவிளங்குஞ்செயிர்தீர்மேனித்
துணையோராய்ந்தவிணையீரோதிச்

செங்கால்வெட்சிச்சீறிதழிடையிடுபு
பைந்தாட்குவளைத்தூவிதழ்கிள்ளித்
தெய்வவுத்தியொடுவலம்புரிவயின்வைத்துத்
திலகந்தைஇயதேங்கமழ்திருநுதன்
மகரப்பகுவாய்தாழமண்ணுறுத்துத்
துவரமுடித்ததுகளறுமுச்சிப்
பெருந்தண்சண்பகஞ்செரீஇக்கருந்தகட்
டுளைப்பூமருதினொள்ளிணரட்டிக்
கிளைக்கவின்றெழுதருகீழ்நீர்ச்செவ்வரும்
பிணைப்புறுபிணையல்வளைஇத்துணைத்தக
வண்காதுநிறைந்தபிண்டியொண்டளிர்
நுண்பூணாகத்திளைப்பத்திண்காழ்
நறுங்குறடுரிஞ்சியபூங்கேழ்த்தேய்வை
தேங்கமழ்மருதிணர்கடுப்பக்கோங்கின்
குவிமுகிழிளமுலைக்கொட்டிவிரிமலர்
வேங்கைநுண்டாதப்பிக்காண்வர
வெள்ளிற்குறுமுறிகிள்ளுபுதெறியாக்
கோழியோங்கியவென்றடுவிறற்கொடி
வாழியபெரிதென்றேத்திப்பலருடன்
சீர்திகழ்சிலம்பகஞ்சிலம்பப்பாடிச்
சூரரமகளிராடுஞ்சோலை
மந்தியுமறியாமரன்பயிலடுக்கத்துச்
சுரும்புமூசாச்சுடர்ப்பூங்காந்தட்
பெருந்தண்கண்ணிமிலைந்தசென்னியன்
பார்முதிர்பனிக்கடல்கலங்கவுள்புக்குச்
சூர்முதறடிந்தசுடரிலைநெடுவே
லுலறியகதுப்பிற்பிறழ்பற்பேழ்வாய்ச்
சுழல்விழிப்பசுங்கட்சூர்த்தநோக்கிற்
கழல்கட்கூகையொடுகடும்பாம்புதூங்கப்
பெருமுலையலைக்குங்காதிற்பிணர்மோட்
டுருகெழுசெலவினஞ்சுவருபேய்மகள்
குருதியாடியகூருகிர்க்கொடுவிரற்
கண்டொட்டுண்டகழிமுடைக்கருந்தலை
யொண்டொடித்தடக்கையினேந்திவெருவர
வென்றடுவிறற்களம்பாடித்தோள்பெயரா
நிணந்தின்வாயடுணங்கைதூங்க
விருபேருருவினொருபேரியாக்கை
யறுவேறுவகையினஞ்சுவரமண்டி
யவுணர்நல்வலமடங்கக்கவிழிணர்
மாமுதறடிந்தமறுவில்கொற்றத்
தெய்யாநல்லிசைச்செவ்வேற்சேஎய்
சேவடிபடருஞ்செம்மலுள்ளமொடு
நலம்புரிகொள்கைப்புலம்பிரிந்துறையுஞ்
செலவுநீநயந்தனையாயிற்பலவுட
னன்னர்நெஞ்சத்தின்னிசைவாய்ப்ப
வின்னேபெறுதிநீமுன்னியவினையே
செருப்புகன்றெடுத்தசேணுயர்நெடுங்கொடி

வரிப்புனைபந்தொடுபாவைதூங்கப்
பொருநர்த்தேய்த்தபோரருவாயிற்
றிருவீற்றிருந்ததீதுதீர்நியமத்து
மாடமலிமறுகிற்கூடற்குடவயி
னிருஞ்சேற்றகல்வயல்விரிந்துவாயவிழ்ந்த
முட்டாட்டாமரைத்துஞ்சிவைகறைக்
கட்கமழ்நெய்தலூதியெற்படக்
கண்போன்மலர்ந்தகாமர்சுனைமல
ரஞ்சிறைவண்டினரிக்கணமொலிக்குங்
குன்றமர்ந்துறைதலுமுரியனதாஅன்று.

இரண்டாவது,

திருச்சீரலைவாய்.

வைந்நுதிபொருதவடுவாழ்வரிநுதல்
வாடாமாலையோடையொடுதுயல்வரப்
படுமணியிரட்டுமருங்கிற்கடுநடைக்
கூற்றத்தன்னமாற்றருமொய்ம்பிற்
கால்கிளர்ந்தன்னவேழமேல்கொண்
டைவேறுருவிற்செய்வினைமுற்றிய
முடியொடுவிளங்கியமுரண்மிகுதிருமணி
மின்னுறழிமைப்பிற்சென்னிப்பொற்ப
நகைதாழ்புதுயல்வரூஉம்வகையமைபொலங்குழை
சேண்விளங்கியற்கைவாண்மதிகவைஇ
யகலாமீனினவிர்வனவிமைப்பத்
தாவில்கொள்கைத்தந்தொழின்முடிமார்
மனனேர்பெழுதருவாணிறமுகனே
மாயிருண்ஞாலமறுவின்றிவிளங்கப்
பல்கதிர்விரிந்தன்றொருமுகமொருமுக
மார்வலரேத்தவமர்ந்தினிதொழுகிக்
காதலினுவந்துவரங்கொடுத்தன்றே
யொருமுக
மந்திரவிதியின்மரபுளிவழாஅ
வந்தணர்வேள்வியோர்க்கும்மேயொருமுக
மெஞ்சியபொருள்களையேமுறநாடித்
திங்கள்போலத்திசைவிளக்கும்மே
யொருமுகஞ்
செறுநர்த்தேய்த்துச்செல்சமமுருக்கிக்
கறுவுகொணெஞ்சமொடுகளம்வேட்டன்றே
யொருமுகங்
குறவர்மடமகள்கொடிபோனுசுப்பின்
மடவரல்வள்ளியொடுநகையமர்ந்தன்றே
யாங்கம்
மூவிருமுகனுமுறைநவின்றொழுகலி
னாரந்தாழ்ந்தவம்பகட்டுமார்பிற்
செம்பொறிவாங்கியமொய்ம்பிற்சுடர்விடுபு
வண்புகழ்நிறைந்துவசிந்துவாங்குநிமிர்தோள்
விண்செலன்மரபினையர்க்கேந்தியதொருகை

யுக்கஞ்சேர்த்தியதொருகை
நலம்பெறுகலிங்கத்துக்குறங்கின்மிசை
யசைஇயதொருகை
யங்குசங்கடாவவொருகையிருகை
யையிருவட்டமோடெஃகுவலந்திரிப்ப
வொருகை
மார்பொடுவிளங்கவொருகை
தாரொடுபொலியவொருகை
கீழ்வீழ்தொடியொடுமீமிசைக்கொட்ப
வொருகை
பாடின்படுமணியிரட்டவொருகை
நீனிறவிசும்பின்மலிதுளிபொழியவொருகை
வானரமகளிர்க்குவதுவைசூட்டவாங்கப்
பன்னிருகையும்பாற்படவியற்றி
யந்தரப்பல்லியங்கறங்கத்திண்காழ்
வயிரெழுந்திசைப்பவால்வளைநரல
வுரந்தலைக்கொண்ட்வுருமிடிமுரசமொடு
பல்பொறிமஞ்ஞைவெல்கொடியகவ
விசும்பாருகவிரைசெலன்முன்னி
யுலகம்புகழ்ந்தவோங்குயர்விழுச்சீ
ரலைவாய்ச்சேறலுநிலைஇயபண்பே
யதாஅன்று.

மூன்றாவது,

திருவாவினன்குடி.

சீரைதைஇயவுடுக்கையர்சீரொடு
வலம்புரிபுரையும்வானரைமுடியினர்
மாசறவிமைக்குமுருவினர்மானி
னுரிவைதைஇயவூன்கெடுமார்பி
னென்பெழுந்தியங்குமியாக்கையர்நன்பகற்
பலவுடன்கழிந்தவுண்டியரிகலொடு
செற்றநீக்கியமனத்தினரியாவதுங்
கற்றோரறியாவறிவினர்கற்றோர்க்குத்
தாம்வரம்பாகியதலைமையர்காமமொடு
கடுஞ்சினங்கடிந்தகாட்சியரிடும்பை
யாவதுமறியாவியல்பினர்மேவரத்
துனியில்காட்சிமுனிவர்முற்புகப்
புகைமுகந்தன்னமாசிறூவுடை
முகைவாயவிழ்ந்ததகைசூழாகத்துச்
செவிநேர்புவைத்தசெய்வுறுதிவவி
னல்லியாழ்நவின்றநயனுடைநெஞ்சின்
மென்மொழிமேவலரின்னரம்புளர
நோயின்றியன்றயாக்கையர்மாவி
னவிர்தளிர்புரையுமேனியரவிர்தொறும்
பொன்னுரைகடுக்குந்திதலையரின்னகைப்
பருமந்தாங்கியபணிந்தேந்தல்குன்
மாசின்மகளிரொடுமறுவின்றிவிளங்கக்

கடுவோடொடுங்கியதூம்புடைவாலெயிற்
றழலெனவுயிர்க்குமஞ்சுவருகடுந்திறற்
பாம்புபடப்புடைக்கும்பல்வரிக்கொடுஞ்சிறைப்
புள்ளணிநீள்கொடிச்செல்வனும்வெள்ளேறு
வலவயினுயரியபலர்புகழ்திணிதோ
ளுமையமர்ந்துவிளங்குமிமையாமுக்கண்
மூவெயின்முருக்கியமுரண்மிகுசெல்வனு
நூற்றுப்பத்தடுக்கியநாட்டத்துநூறுபல்
வேள்விமுற்றியவென்றடுகொற்றத்
தீரிரண்டேந்தியமருப்பினெழினடைத்
தாழ்பெருந்தடக்கையுயர்த்தயானை
யெருத்தமேறியதிருக்கிளர்செல்வனு
நாற்பெருந்தெய்வத்துநன்னகர்நிலைஇய
வுலகங்காக்குமொன்றுபுரிகொள்கைப்
பலர்புகழ்மூவருந்தலைவராக
ஏமுறுஞாலந்தன்னிற்றோன்றித்
தாமரைபயந்ததாவிலூழி
நான்முகவொருவற்சுட்டிக்காண்வரப்
பகலிற்றோன்றுமிகலில்காட்சி
நால்வேறியற்கைப்பதினொருமூவரோ
டொன்பதிற்றிரட்டியுயர்நிலைபெறீஇயர்
மீன்பூத்தன்னதோன்றலர்மீன்சேர்பு
வளிகிளர்ந்தன்னசெலவினர்வளியிடைத்
தீயெழுந்தன்னதிறலினர்தீப்பட
வுருமிடித்தன்னகுரலினர்விழுமிய
வுறுகுறைமருங்கிற்றம்பெறுமுறை
கொண்மா
ந்தரக்கொட்பினர்வந்துடன்காணத்
தாவில்கொள்கைமடந்தையொடுசின்னா
ளாவினன்குடியசைதலுமுரியனதாஅன்று.

நான்காவது,

## திருவேரகம்.

இருமூன்றெய்தியவியல்பினின்வழாஅ
திருவர்ச்சுட்டியபல்வேறுதொல்குடி
யறுநான்கிரட்டியிளமைநல்லியாண்
டாறினிற்கழிப்பியவறனவில்கொள்கை
மூன்றுவகைக்குறித்தமுத்தீச்செல்வத்
திருபிறப்பாளர்பொழுதறிந்துநுவல
வொன்பதுகொண்டமூன்றுபுரிநுண்ஞாண்
புலராக்காழகம்புலரவுடீஇ
யுச்சிக்கூப்பியகையினர்தற்புகழ்ந்
தாறெழுத்தடக்கியவருமறைக்கேள்வி
நாவியன்மருங்கினவிலப்பாடி
விரையுறுநறுமலரேந்திப்பெரிதுவந்
தேரகத்துறைதலுமுரியனதாஅன்று;

ஐந்தாவது,

## குன்றுதோறாடல்.

பைங்கொடிநறைக்காயிடையிடுபுவேல
னம்பொதிப்புட்டில்விரைஇக்குளவியொடு
வெண்கூதாளந்தொடுத்தகண்ணிய
னறுஞ்சாந்தணிந்தகேழ்கிளர்மார்பிற்
கொடுந்தொழில்வல்விற்கொலைஇயகானவர்
நீடமைவிளைந்ததேக்கட்டேறற்
குன்றகச்சிறுகுடிக்கிளையுடன்மகிழ்ந்து
தொண்டகச்சிறுபறைக்குரவையயர
விரலுளர்ப்பவிழ்ந்தவேறுபடுநறுங்காற்
குண்டுசுனைபூத்தவண்டுபடுகண்ணி
யிணைத்தகோதையணைத்தகூந்தன்
முடித்தகுல்லையிலையுடைநறும்பூச்
செங்கான்மராஅத்தவாலிணரிடையிடு
சுரும்புணத்தொடுத்தபெருந்தண்மாத்தழை
திருந்துகாழல்குறிளைப்பவுடீஇ
மயில்கண்டன்னமடநடைமகளிரொடு
செய்யன்சிவந்தவாடையன்செவ்வரைச்
செயலைத்தண்டளிர்துயல்வருங்காதினன்
கச்சினன்கழலினன்செச்சைக்கண்ணியன்
குழலன்கோட்டன்குறும்பல்லியத்தன்
றகரன்மஞ்ஞையன்புகரில்சேவலங்
கொடியனெடியன்றொடியணிதோள
னரம்பார்த்தன்னவின்குரற்றொகுதியொடு
குறும்பொறிக்கொண்டநறுந்தண்சாயன்
மருங்கிற்கட்டியநிலனேர்புதுகிலினன்
முழவுறழ்தடக்கையினியலவேந்தி
மென்றோட்பல்பிணைதழீஇத்தலைதந்து
குன்றுதோறாடலுநின்றதன்பண்பே
யதாஅன்று.

ஆறாவது,

## பழமுதிர்சோலை.

சிறுதினைமலரொடுவிரைஇமறியறுத்து
வாரணக்கொடியொடுவயிற்படநிறீஇ
யூரூர்கொண்டசீர்கெழுவிழவினு
மார்வலரேத்தமேவருநிலையினும்
வேலன்றைஇயவெறியயர்களனுங்
காடுங்காவுங்கவின்பெறுதுருத்தியும்
யாறுங்குளனும்வேறுபல்வைப்புஞ்
சதுக்கமுஞ்சந்தியும்புதுப்பூங்கடம்பு
மன்றமும்பொதியினுங்கந்துடைநிலையினு
மாண்டலைக்கொடியொடுமண்ணியமைவர
நெய்யோடையவியப்பியைதுளைத்துக்
குடந்தம்பட்டுக்கொழுமலர்சிதறி

முரண்கொளுருவினிரண்டுடையுடீஇச்
செந்நூல்யாத்துவெண்பொரிசிதறி
மதவலிநிலைஇயமாத்தாட்கொழுவிடைக்
குருதியொடுவிரைஇயதூவெள்ளரிசி
சில்பலிச்செய்துபல்பிரப்பிரீஇச்
சிறுபசுமஞ்சளொடுநறுவிரைதெளித்துப்
பெருந்தண்கணவீரநறுந்தண்மாலை
துணையுறவறுத்துத்தூங்கநாற்றி
நளிமலைச்சிலம்பினன்னகர்வாழ்த்தி
நறும்புகையெடுத்துக்குறிஞ்சிபாடி
யிமிழிசையருவியோடின்னியங்கறங்க
வுருவப்பல்பூத்தூஉய்வெருவரக்
குருதிச்செந்தினைபரப்பிக்குறமகண்
முருகியநிறுத்துமுரணினருட்க
முருகாற்றுப்படுத்தவுருகெழுவியனக
ராடுகளஞ்சிலம்பப்பாடிப்பலவுடன்
கோடுவாய்வைத்துக்கொடுமணியியக்கி
யோடாப்பூட்கைப்பிணிமுகம்வாழ்த்தி
வேண்டுநர்வேண்டியாங்கெய்தினர்வழிபட
வாண்டாண்டுறைதலுமறிந்தவாறே
யாண்டாண்டாயினுமாகக்காண்ட
முந்துநீகண்டுழிமுகனமர்ந்தேத்திக்
கைதொழூஉப்பரவிக்காலுறவணங்கி
நெடும்பெருஞ்சிமயத்துநீலப்பைஞ்சுனை
யைவருளொருவனங்கையேற்ப
வறுவர்பயந்தவாறமர்செல்வ
வால்கெழுகடவுட்புதல்வமால்வரை
மலைமகண்மகனேமாற்றோர்கூற்றே
வெற்றிவெல்போர்க்கொற்றவைசிறுவ
விழையணிசிறப்பிற்பழையோள்குழவி
வானோர்வணங்குவிற்றானைத்தலைவ
மாலைமார்பநூலறிபுலவ
செருவிலொருவபொருவிறன்மள்ள
வந்தணர்வெறுக்கையறிந்தோர்சொன்மலை
மங்கையர்கணவமைந்தரேறே
வேல்கெழுதடக்கைச்சால்பெருஞ்செல்வ
குன்றங்கொன்றகுன்றாக்கொற்றத்து
விண்பொருநெடுவரைக்குறிஞ்சிக்கிழவ
பலர்புகழ்நன்மொழிப்புலவரேறே
யரும்பெறன்மரபிற்பெரும்பெயர்முருக
நசையுநர்க்கார்த்துமிசைபேராள
வலந்தோர்க்களிக்கும்பொலம்பூட்சேஎய்
மண்டமர்கடந்தநின்வென்றாடகலத்துப்
பரிசிலர்த்தாங்குமுருகெழுநெடுவேள்
பெரியோரேத்தும்பெரும்பெயரியவுள்
சூர்மருங்கறுத்தமொய்ம்பின்மதவலி
போர்மிகுபொருநகுரிசிலுமெனப்பல

யானறியளவையினேத்தியானாது
நின்னளந்தறிதன்மன்னுயிர்க்கருமையி
னின்னடியுள்ளிவந்தனனின்னொடு
புரைகுநரில்லாப்புலமையோயெனக்
குறித்ததுமொழியாவளவையிற்குறித்துடன்
வேறுபல்லுருவிற்குறும்பல்கூளியர்
சாறயர்களத்துவீறுபெறத்தோன்றி
யளியன்றானேமுதுவாயிரவலன்
வந்தோன்பெருமநின்வண்புகழ்நயந்தென
வினியவுநல்லவுநனிபலவேத்தித்
தெய்வஞ்சான்றதிறல்விளங்குருவின்
வான்றோய்நிவப்பிற்றான்வந்தெய்தி
யணங்குசாலுயர்நிலைதழீஇப்பண்டைத்தன்
மணங்கமழ்தெய்வத்திளநலங்காட்டி
யஞ்சலோம்புமதியறிவனின்வரவென
வன்புடைநன்மொழியளைஇவிளிவின்
றிருணிறமுந்நீர்வளைஇயவுலகத்
தொருநீயாகத்தோன்றவிழுமிய
பெறலரும்பரிசினல்குமதிபலவுடன்
வேறுபஃறுகிலினுடங்கியகில்சுமந்
தாரமுழுமுதலுருட்டிவேரற்
பூவுடையலங்குசினைபுலம்பவேர்கீண்டு
விண்பொருநெடுவரைபரிதியிற்றொடுத்த
தண்கமழ்மலரிறால்சிதையநன்பல
வாசினிமுதுசுளைகலாவமீமிசை
நாகநறுமலருதிரயூகமொடு
மாமுகமுசுக்கலைபனிப்பப்பூநுத
லிரும்பிடிகுளிர்ப்பவீசிப்பெருங்களிற்று
முத்துடைவான்கோடுதழீஇத்தத்துற்று
நன்பொன்மணிநிறங்கிளரப்பொன்கொழியா
வாழைமுழுமுதறுமியத்தாழை
யிளநீர்விழுக்குலையுதிரத்தாக்கிக்
கறிக்கொடிக்கருந்துணர்சாயப்பொறிப்புற
மடநடைமஞ்ஞைபலவுடன்வெரீஇக்
கோழிவயப்பெடையிரியக்கேழலோ
டிரும்பனைவெளிற்றின்புன்சாயன்ன
குரூஉமயிரியாக்கைக்குடாவடியுளியம்
பெருங்கல்விடரளைச்செறியக்கருங்கோட்
டாமாநல்லேறுசிலைப்பச்சேணின்
றிழுமெனவிழிதருமருவிப்
பழமுதிர்சோலைமலைகிழவோனே.

நேரிசைவெண்பா.

குன்றமெறிந்தாய்குரைகடலிற்சூர்தடிந்தாய்
புன்றலையபூதப்பொருபடையாய்—என்று
மிளையாயழகியாயேறூர்ந்தானேறே
யுளையாயென்னுள்ளத்துளை ... ... ... ... ... (க)

குன்றமெறிந்தமையுங்குன்றப்போர்செய்தமையு
மன்றங்கமரர்பதிகாத்தமையு—மின்றெம்மைக்
கைவிடாநின்றமையுங்கற்பொதும்பின் மீட்டமையும்
மெய்விடாவீரன்கைவேல். ...... ...... ...... ...... (உ)

திருச்சிற்றம்பலம்.

திருமுருகாற்றுப்படை முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

நக்கீரதேவநாயனாரருளிச்செய்த

# திருக்கண்ணப்பதேவர் திருமறம்

## அகவற்பா.

திருக்கண்ணப்பன்செய்தவத்திறத்து
விருப்புடைத்தம்பிவிரிகடலுலகேபிறந்தது
தேனழித்தூனுண்கானவர்குலத்தேதிரிவது
யொருபுலிகுழுறும்பொருப்பிடைக்காடேவளர்ப்பது
செங்கணுயொடுதீவகம்பலவேபயில்வது
வெந்திறற்சிலையொடுவேல்வாண்முதலிய
வந்தமில்படைக்கலமவையேயுறைவது
குறைதசைபயின்றுகுடம்பலநிறைத்துக்
கறைமலிபடைக்கலங்கலந்தபுல்லோடு
பீலிமேய்ந்தவைபிரிந்தவெள்ளிடை
வாலியபுலித்தோன்மறைப்பவெள்வா
ரிராவும்பகலுமிகழாமுயற்றியொடு
மடைத்ததேனும்வன்றுய்விட்டுஞ்
சிலைவிடுகணையிலுந்திண்சுரிகையிலும்
பலகிளையவையொடும்பதைப்பப்படுத்துத்
தொல்லுயிர்கொல்லுந்தொழிலேவடிவே
மறப்புலிகடித்தவன்றிறன்முன்கைத்
திறற்படைகிழித்ததிண்வளையகல
மெயிற்றெண்குகவர்ந்தவிருந்தணெற்றி
யயிற்கோட்டென்னபெடுத்தெழுகுறங்கு
செடித்தெழுகுஞ்சிசெந்நிறத்துறுகண்
கடுத்தெழும்வெவ்வுளையவ்வாய்க்கருநிறத்
தடுபடைபிரியாக்கொடுவிறலதுவேமனனே—மிகக்
கொலைபுரியும்வேட்டையிலுயிர்க—ளகப்படுதுயருக்
ககனமர்ந்ததுவேயிதுவக்—கானத்தலைவன்றன்மைகண்ணுதல்
வானத்தலைவன்மலைமகள்பங்க
னெண்ணரும்பெருமையிமையவரிறைஞ்சு
புண்ணியபாதப்பொற்பாமலரிணை
தாய்க்கட்கன்றெனச்சென்றுகண்டல்லது
வாய்க்கிடுமுண்டிவழக்கறியானேயதான்று

கட்டறவிரித்தகனற்கதிருச்சியிற்
சுட்டடியிடுந்தொறுஞ்சுறுக்கொளுஞ்சுரத்து
முழுமரனிரந்தமுட்பலவளாகத்
தெதிரினங்கடவியவேட்டையில்விரும்பி
யெழுப்பியவிருகத்தினங்களைமறுக்குறத்
தன்னாய்கடித்திரித்திடவடிக்கணைதொடுத்
தெய்துதுணித்திடுந்துணித்தவிடக்கினை
விறகினிற்கடைந்தவெங்கனற்காய்ச்சி
நறுவியவிறைச்சிநல்லதுசுவைகண்
டுண்ணற்கமிர்தென்றதுவேறமைத்துத்
தண்ணறுஞ்சுனைநீர்தன்வாய்க்குடத்தான்
மஞ்சனமாகமுகந்துமலரெனக்
குஞ்சியிற்றுவர்க்குலைசொருகிக்குனிசிலைக்
கடுங்கணையதனொடுமேந்திக்கனல்விழிக்
கருங்குராய்பின்றொடரயாவரும்
வெருக்கோளுற்றவெங்கடும்பகலிற்
றிருக்காளத்தியெய்தியசிவற்கு
வழிபடக்கடவமறையோன்முன்னந்
துகிலிடைச்சுற்றித்தூநீராட்டி
நல்லனவிரைமலர்நறும்புகைவிளக்கவி
சொல்லினபரிசிற்சுருங்கலன்பூவும்
பட்டமாலையுந்தூக்கமுமலங்கரித்
தர்ச்சனைசெய்தாங்கவனடியிறைஞ்சித்
திருந்தமுத்திரைசிறப்பொடுங்காட்டி
மந்திரமெண்ணிவலமிடம்வந்து
விடைகொண்டேகினபிற்றொழிற்பூசனை
தன்னைப்புக்கொருகாலிற்
றொடுசெருப்படியானீக்கிவாயி
னின்புனன்மேனியிலாட்டித்தன்றலை
தங்கியதுவர்ப்பூவேற்றியிறைச்சியிற்
பெரிதும்போனகம்படைத்துப்பிரானைக்
கண்டுகண்டுள்ளங்கசிந்துகாதலிற்
கொண்டதோர்கூத்துமுனாடிக்குரைகழ
லன்பொடுமிறுகவிறைஞ்சியாரு
வன்பொடுகானகமடையு.
மடைந்தவற்றையயலினிற்கழித்தாங்
கிரவியுமுதித்தபொழ்தத்தண்ணீர்
மூழ்கியாதரிக்குமந்தணன்வந்து
சீரார்சிவற்குத்தான்முன்செய்வதோர்
பொற்புடைப்பூசனைகாணான்முடிமிசை
யேற்றியதுவர்க்கண்டொழியான்மறித்து
மிவ்வாறருச்சனைசெய்பவரியாவர்கொலென்று
கரந்திருந்தம்பர்க்கானவன்வரவினைப்
பரந்தகாட்டிடைப்பார்த்துநடுக்குற்று
வந்தவன்செய்துபோயினவண்ணஞ்
சிந்தையிற்பொருதுசேர்விடம்புக்கு
மற்றைநாளுமவ்வழிப்பட்டிறைவ

வுற்றதுகேட்டருளுன்றனக்கழகா
நாடொறுநான்செய்பூசனைதன்னை
யீங்கொருவேடுவனுயொடும்புகுந்து
மிதித்துழக்கித்
தொடுசெருப்படியானீக்கிவாயி
லிடுபுனன்மேனியிலாட்டித்தன்றலை
தங்கியசருகிலையுதிர்த்தோரிறைச்சியை
நின்றிருக்கோயிலிலிட்டுப்போமது
வென்றுமுன்றனக்கினிதேயெனையுருக்
காணிற்கொன்றிடும்யாவராலும்
விலக்குறுங்குணத்தனல்லனென்னுந்
திருக்குறிப்பென்றவன்சென்றவல்லிடைக்
கனவிலாதரிக்குமந்தணன்றனக்குச்
சீரார்திருக்காளத்தியுளப்பன்
பிறையணியிலங்குபின்னுபுன்சடைமுடிக்
கறையணிமிடற்றுக்கனன்மழுத்தடக்கை
நெற்றிநாட்டத்துநிறைநீற்றுருக
வொற்றைமால்விடையுமையொடுமருங்கிற்
றிருவுருக்காட்டியருளிப்புரிவொடு
பூசனைசெய்யுங்குனிசிலைவேடன்
குணமவையாவனவுரிமையிற்சிறந்த
நன்மாதவனென்றுணரவனுகந்
தியங்கியவிடமுனிவனமதுவேயவன்
செருப்படியாவனவிருப்புறுதுவலே
யெழிலவன்வாயதுதூயபொற்குடமே
யதனிற்றங்குநீர்கங்கையின்புனலே
புனற்கிடுமாமணியவனிளைப்பல்லே
யதற்கிடுதூமலரவனதுநாவே
யுப்புனல்விடும்பொழுதுரிஞ்சியமீசைப்
புன்மயிர்குசையினுநம்மடிக்கினிதே
யவன்றலைதங்கியசருகிலைதருப்பையிற்
பொதிந்தவங்குலிகற்பகத்தலரோ
யவனுகந்திட்டவிறைச்சியெனக்குநன்
மாதவரிட்டநெய்பாலவியே
யிதுவெனக்குனக்கவன்
கலந்ததோரன்புகாட்டுவனாளை
நலந்திகழருச்சனைசெய்தாங்கிருவென்
றிறையவனெழுந்தருளின
னருளாலுமறையவனறிவுற்றெழுந்து
மனமிகக்கூசிவைகறைக்குளித்துத்
தான்முன்செய்வதோர்
பொற்புடைப்பூசனைபுகழ்தரச்செய்து
தோன்றுவண்ணமிருந்தனனாக
விரவியும்வான்றனிமுகட்டில்
வந்தழல்சிந்தக்
கடும்பகல்வேட்டையிற்காதலித்தடிந்த
வுடும்பொடுசிலைகணையுடைத்தோல்செருப்புத்

தொடர்ந்தநாயொடுதோன்றினன்றோன்றலுஞ்
செல்வன்றிருக்காளத்தியுளப்பன்
றிருமேனியின்மூன்றுகண்ணு
யாங்கொருகண்ணிலுமுதிர
மொழியாதொழுகவிருந்தனனுகப்
பார்த்துநடுக்குற்றுப்பதைத்துமனஞ்சுழன்று
வாய்ப்புனல்சிந்தக்கண்ணீரருவக்
கரம்பயில்சிலைகணைகவசத்தழிந்து
நிலம்படப்புரண்டுநெடிதினிற்றேறிச்
சிலைக்கொடும்படைகடிதெடுத்துப்படுத்தவ
ரடுத்தவிவ்வனத்துளரொனத்திரிந்தாங்
கின்மைகண்டுநன்மையிற்
றக்கனமருந்துகள்பிழியவும்பிழிதொறும்
நெக்குநெக்கிழிகுருதியைக்கண்டு
நிலைதளர்ந்தெனத்தனுக்கடுத்ததெனத்தனுக்
கடுத்ததென்றன்பொடுங்கனற்றி
யித்தனைதரிக்கிலனிதுதனைக்கண்டவென்
கண்டனையிடந்துகடவுடன்கண்ணுறும்
புண்ணிலப்பியுங்காண்பனென்றொரு
கண்ணிடைக்கணையதுமடுத்துக்
கையில்வாங்கியணைதரவப்பின
னப்பலுங்குருதிநிற்பதொத்துருப்பெறக்
கண்டுநெஞ்சுகந்துகந்துமற்றைக்
கண்ணிலும்வடிக்கணைமடுத்தனன்மடுத்தலு
நில்லுகண்ணப்பநில்லுகண்ணப்பவென்
னன்புடைத்தோன்றனில்லுகண்ணப்பவென்
றின்னுரையதனொடுமெழிற்சிவலிங்கந்
தன்னிடைப்பிறந்ததடமலர்க்கையா
லன்னவன்றன்கையம்பொடுமகப்படப்
பிடித்தருளினனருளலும்
விண்மிசைவானவர்மலர்மழைபொழிந்தனர்
வளையொடுபடகந்துந்துமிகறங்கின
தொல்சீர்முனிவருமேத்தினர்வல்லே
சிவகதிபெற்றனன்றிருக்கண்ணப்பனே.

வெண்பா.

தத்தைதாயாந்தந்தைநாகனுந்தன்பிறப்புப்
பொத்தப்பிநாட்டுடுப்பூர்வேடுவனுந்—தித்திக்குந்
திண்ணப்பனுஞ்சிறுபேர்செய்தவத்தாற்காளத்திக்
கண்ணப்பனுய்நின்முன்காண்.

திருச்சிற்றம்பலம்.

திருக்கண்ணப்பதேவர்திருமறம்.

நக்கீரதேவநாயனுர்அருளிச்செய்ததிருப்பிரபந்தங்கள்முற்றும்.

---

திருச்சிற்றம்பலம்.

கல்லாடதேவநாயனார்அருளிச்செய்த

# திருக்கண்ணப்பதேவர் திருமறம்



அகவற்பா.

பரிவின்றன்மையுருவுகொண்டனையவன்
போழ்வார்போர்த்ததாழகச்செருப்பினன்
குருதிபுலராச்சுரிகையெஃக
மறையிற்கட்டியவுடைதோற்கச்சையன்
னோனெடும்பையிற்குறுமயிர்திணித்து
வாரில்வீக்கியவரிக்கைக்கட்டிய
னுழுவைக்கூனுகிர்கேழல்வெண்மருப்பு
மாறுபடத்தொடுத்தமாலையுத்தரீயன்
நீலப்பீலிநெற்றிசூழ்ந்த
கானக்குஞ்சிக்கவடிபுல்லினன்
முடுகுநாறுகுடிலையாக்கையன்
வேங்கைவென்றுவாகைசூடிய
சங்கரன்றன்னினத்தலைவனோங்கிய
வில்லுமம்பும்நல்லனதாங்கி
யேற்றுக்கல்வனங்காற்றினியங்கிக்
கணையில்வீழ்த்துக்கருமாவறுத்துக்
கோலினேற்றிக்கொழுந்தீக்காய்ச்சி
நாவில்வைத்தநாட்போனகமுந்
தன்றலைச்செருகியதண்பளித்தாமமும்
வாய்க்கலசத்துமஞ்சனநீருங்
கொண்டுகானப்பேருறைகண்ணுதன்
முடியிற்பூசையடியானீக்கி
நீங்காக்குணத்துக்
கோசரிக்கன்றவன்னேசங்காட்ட
முக்கணப்பனுக்கொருகணிலுதிரந்
தெக்கண்த்திடையிழிதரவக்கண
மழுதுவிழுந்துதொழுதெழுந்தரற்றிப்
புனமருந்தாற்றப்போகாதென்று
தன்னைமருந்தென்றுமலர்க்கணப்ப
வொழிந்ததுமற்றையொண்டிருநயனம்
பொழிந்தகண்ணீர்க்கலுழிபொங்க
வற்றதென்றுமற்றைக்கண்ணையும்
பகழித்தலையாலகழவாண்டகை
யொருகையாலுமிருகைபிடித்து
வொல்லைநம்புண்ணொழிந்ததுபாராய்
நல்லைநல்லையெனப்பெறுந்
திருவேட்டுவர்தந்திருவடிகைதொழக்
கருவேட்டுழல்வினைக்காரியங்கெடுமே.

திருச்சிற்றம்பலம்.

திருக்கண்ணப்பதேவர்திருமறம் முற்றும்.

திருச்சிற்றம்பலம்.

கபிலதேவநாயனார் அருளிச்செய்த

# மூத்தநாயனார் இரட்டைமணிமாலை



திருவாக்குஞ்செய்கருமங்கைகூட்டுஞ்செஞ்சொற்
பெருவாக்கும்பீடும்பெருக்கு—முருவாக்கு
மாதலால்வானோருமானைமுகத்தானைக்
காதலாற்கூப்புவர்தங்கை ...... ...... ...... ...... (௧)

கைக்கும்பிணியொடுகாலன்றலைப்படுமேல்வையினி
லெய்க்குங்கவலைக்கிடைந்தடைந்தேன்வெம்மைநாவலைக்கும்
பைக்குமரவரையான்றந்தபாய்மதயானைபத்துத்
திக்கும்பணிநுதற்கட்டிருவாளன்றிருவடியே ...... ...... (௨)

அடியமர்ந்துசெய்வாயேநெஞ்சமேயப்ப
மிடியவலோடெள்ளுண்டைகன்னல்—வடிசுவையிற்
றாழ்வானையாழ்வானைத்தன்னடியாருள்ளத்தே
வாழ்வானைவாழ்த்தியேவாழ் ...... ...... ...... ... (௩)

வாழைக்கனிபலவின்கனிமாங்கனிதாஞ்சிறந்த
கூழைச்சுருள்குழையப்பமெள்ளுண்டையெல்லாந்துறுத்தும்
பேழைப்பெருவயிற்றோடும்புகுந்தென்னுளம்பிரியான்
வேழத்திருமுகத்துச்செக்கர்மேனிவிநாயகனே ...... ...... (௪)

விநாயகனேவெவ்வினையைவேரறுக்கவல்லான்
விநாயகனேவேட்கைதணிவிப்பான்—விநாயகனே
விண்ணிற்குமண்ணிற்குநாதனுமாந்தன்மையினாற்
கண்ணிற்பணிமின்கனிந்து ...... ...... ...... ... (௫)

கனியநினைவொடுநாடொறுங்காதற்படுமடியார்க்
கினியனினியொருவின்னுங்கிலமெவருமவணங்கும்
பனிவெண்பிறைநறுங்கொன்றைச்சடைப்பலிதேரியற்கை
முனிவன்சிறுவன்பெருவெங்கொல்யானைமுகத்தவனே ...... ... (௬)

யானைமுகத்தான்பொருவிடையான்சேயழகார்
மானமணிவண்ணன்மாமருகன்—மேனிகழும்
வெள்ளக்குமிழிமதத்துவிநாயகனென்
னுள்ளக்கருத்தினுளன் ......... ...... ...... ... (௭)

உளதளவில்லதோர்காதலென்னெஞ்சில்வன்னஞ்சமுண்ட
வளரிளமாமணிகண்டன்வண்டாடுவண்கோதைபங்கத்
திளவளர்மாமதிக்கண்ணியெம்மான்மகன்கைம்முகத்துக்
களகளமாமதஞ்சேர்களியானைக்கணபதியே ...... ...... (௮)

கணங்கொண்டவல்வினைகள்கண்கொண்டநெற்றிப்
பணங்கொண்டபாந்தட்சடைமேன்—மணங்கொண்ட
தாதகத்ததேன்முரலுங்கொன்றையான்றந்தளித்த
போதகத்தின்றாள்பரவப்போம் ......... ...... ... ... (௯)

போகபந்தத்தந்தமின்றிநிற்பீர்புனைதார்முடிமே
னாகபந்தத்தந்தநாளம்பிறையிறையான்பயந்த
மாகபந்தத்தந்தமாமழைபோன்மதத்துக்கதப்போ
ரேகதந்தத்தெந்தைசெந்தாளிணைபணிந்தேத்துமினே ...... ... (௧௦)

ஏத்தியெனதுள்ளநிற்குமாலெப்பொழுது
மாத்தனிவெண்கோட்டுமதமுகத்துத்—தூத்தழல்போற்
செக்கர்த்திருமேனிச்செம்பொற்கழலங்கை
முக்கட்கடாயானைமுன் ......... ...... ...... (௧௧)

முன்னிளங்காலத்திலேபற்றினேன்வெற்றிமீனுயர்த்த
மன்னிளங்காமன்றன்மைத்துனனேமணிநீலகண்டத்
தென்னிளங்காய்களிறேயிமையோர்சிங்கமேயுமையா
டன்னிளங்காதலனேசரணுமுன்சரணங்களே ...... ...... (௧௨)

சரணுடையேனென்றுதலைதொட்டிருக்க
முரணுடையேனல்லேனுன்முன்னந்—திரணெடுங்கோட்
டண்டத்தானப்புறத்தானானைமுகத்தானமரர்
பண்டத்தான்றாள்பணியாப்பண்டு ...... ...... ...... (௧௩)

பண்டந்தமாதரத்தாலென்றினியனவேபலவுங்
கொண்டந்தநாள்குறுகாமைக்குறுகுவர்கூருணர்விற்
கண்டந்தநீண்முடிக்கார்மதவார்சடைக்கற்றையொற்றை
வெண்டந்தவேழமுகத்தெம்பிரானடிவேட்கையரோ ...... ... (௧௪)

வேட்கைவினைமுடித்துமெய்யடியார்க்கின்பஞ்செய்
தாட்கொண்டருளுமரன்சேயை—வாட்கதிர்கொள்
காந்தாரமார்பிற்கமழ்தார்க்கணபதியை
வேந்தாவுடைத்தமரர்விண் ...... ...... ...... ... (௧௫)

விண்முகினுங்கியவிண்ணுமண்ணுஞ்செய்வினைப்பயனுங்
கண்ணுதனுங்கடனென்பர்மெய்யன்பர்கமமமர்ந்த
கண்ணுதனுங்கியநஞ்சமுண்டார்கருமாமிடற்றுப்
பெண்ணுதனுட்பிரியாவொருபாகன்பெருமகனே ...... ... (௧௬)

பெருங்காதலென்னோடுபொன்னோடைநெற்றி
மருங்காரவார்செவிகள்வீசி—யொருங்கே
திருவார்ந்தசெம்முகத்துக்கார்மதங்கள்சோர
வருவான்றனுமம்வரும் ......... ...... ...... (௧௭)

வருகோட்டருபெருந்தீமையுங்காலன்றமரவர்க
ளருகோட்டருமவராண்மையுங்காய்பவன்கூர்ந்தவன்பு
தருகோட்டருமரபிற்பத்தர்சித்தத்தறியணையு
மொருகோட்டிருசெவிமுக்கட்செம்மேனியவொண்களிறே...... ... (௧௮)

களியானைக்கன்றைக்கணபதியைச்செம்பொ
னொளியானைப்பாரோர்க்குதவு—மளியானைக்
கண்ணுவதுங்கைத்தலங்கள்கூப்புவதுமற்றவன்றா
ணண்ணுவதுநல்லார்கடன் ............ ...... ...... (௧௯)

நல்லார்பழிப்பிலெழிற்செம்பவளத்தைநாணநின்ற
பொல்லாமுகத்தெங்கள்போதகமேபுரமூன்றெரித்த
வில்லானளித்தவிநாயகனேயென்றுமெய்மகிழ
வல்லாரகத்தன்றிமாட்டாளிருக்கமலர்த்திருவே ...... ... (உ0)

திருச்சிற்றம்பலம்.

மூத்தநாயனார்திருவிரட்டைமணிமாலைமுற்றிற்று.



திருச்சிற்றம்பலம்.

கபிலதேவநாயனாரருளிச்செய்த

# சிவபெருமான்றிருவிரட்டைமணிமாலை

அந்திமதிமுகிழானந்தியஞ்செந்நிறத்தா
னந்தியேபோலுமவிர்சடையா—னந்தியிற்
றூங்கிருள்சேரியாமமேபோலுஞ்சுடுநீற்றான்
வீங்கிருள்சேர்நீலமிடறு ...... ...... ...... ... (க)

மிடற்றாழ்கடனஞ்சம்வைக்கின்றஞான்றுமெல்லோதிநல்லாள்
மடற்றாமரைக்கைகள்காத்திலவெம்மழுவாளதனு
லடற்றாதையையன்றுதாளெறிந்தாற்கருள்செய்தகொள்கைக்
கடற்றாழ்வயற்செந்நெலேறும்வெண்காட்டெங்கரும்பினையே ...... (உ)

கருப்புச்சிலையனங்கன்கட்டழகுசுட்ட
நெருப்புத்திருநெற்றிநாட்டந்—திருச்சடையிற்
றிங்கள்புனையுந்திரள்பொற்றிருமேனி
யெங்களிமையோரிறைக்கு ... ...... ... ... (௩)

இறைக்கோகுறைவில்லையுண்டிறையேயெழிலாரொருக்கு
நறைக்கோமளக்கொன்றைதுன்றுஞ்சடைமுடிநக்கர்சென்னிப்
பிறைக்கோர்பிளவும்பெறுவிளிக்கொண்டெம்பிரானுடுக்குங்
குறைக்கோவணமொழிந்தாற்பின்னையேதுங்குறைவில்லையே ... (ச)

இல்லைபிறவிக்கடலேறவின்புறவின்
முல்லைகமழுமுதுகுன்றிற்—கொல்லை
விடையானைவேதியனைவெண்மதிசேர்செம்பொற்
சடையானைச்சாராதார்தாம் ...... ... ... ... ... (ரு)

தாமரைக்கோவுநன்மாலும்வணங்கத்தலையிடத்துத்
தாமரைக்கோவணத்தோடிரந்துண்ணினுஞ்சார்ந்தவர்க்குத்
தாமரைக்கோமளத்தோடுலகாளத்தருவர்கண்டீர்
தாமரைக்கோமளக்கைத்தவளப்பொடிச்சங்கரனே ... ... ... (சூ)

சங்குகோளெண்ணுவரோபாவையராத்தம்மங்கம்
பங்குபோய்நின்றாலும்பாய்கலுழிக்—கங்கை
வரியராப்போதும்வளர்சடையாய்நின்போற்
பெரியராவாரோபிறர் ...... ...... ...... ... (எ)

பிறப்பாழ்குழியிடைவீழ்ந்துநைவேற்குநின்பேரருளின்
சிறப்பார்திருக்கைதரக்கிற்றியேதிரியும்புரமூன்
றறப்பாயெரிபாவரவரைவில்வளைத்தாயிரவாய்
மறப்பாவரியரநாணிடைக்கோத்தகைவானவனே ... ... (அ)

வானமணிமுகடாமால்வரையேதூணாக
வானபெரும்பாரரங்காகக்—கானகத்தி
லம்மாமுழவதிரவாடும்பொழுதாரூ
ரெம்மானுக்கெய்தாதிடம் ... ...... ... ... ... (௯)

இடப்பாகமுமுடையாளுமைய்யாளிளவஞ்சியன்ன
மடப்பான்மொழியென்பர்நின்வலப்பாகத்துமான்மழுவும்
விடப்பாசனக்கச்சுமிச்சைப்படநீறணிந்துமிகக்
கடப்பாய்களிற்றுரிகொண்டெங்குமூடுமெங்கண்ணுதலே ... ... (௧0)

கண்ணியிளம்பிறையுங்காய்சினத்தமாசுணமு
நண்ணியிருந்தானலமில்லை—தண்ணலங்கற்
பூங்கொன்றையின்றேன்பொழியுஞ்சடைப்புனிதா
வாங்கொன்றையின்றேமதித்து ...... ...... ... ... (௧௧)

மதிமயங்கப்பொங்குகோழிருட்கண்டவவிண்டவர்தம்
பதிமயங்கச்செற்றகொற்றவில்வானவநற்றவர்சூ
ழதிகைமங்கைத்திருவீரட்டவாரிட்டதேனுமுண்டு
கதிமயங்கச்செல்வதேசெல்வமாகக்கருதுவதே ... ...... ...... (௧௨)

கருதுங்கருத்துடையேன்கையுடையேன்கூப்பப்
பெரிதும்பிறதிறத்துப்பேசே—னரிதன்றே
யாகப்பிறையானினியென்னகம்புகுந்து
போகப்பெறுமோபுறம் ... ... ... .... ... ... (௧௩)

புறமறையப்புரிபுன்சடைவிட்டெரிபொன்றிகழு
நிறமறையத்திருநீறுதுதைந்ததுநீள்கடனஞ்
சுறமறையக்கொண்டகண்டமுஞ்சாலவுறைப்புடைத்தா
லறமறையச்சொல்லிவைத்தையம்வேண்டுமடிகளுக்கே ... ... (௧௪)

அடியோமைத்தாங்கியோவாடையுடுத்தோ
குடியோம்பமாநிதியங்கொண்டோ—பொடியாடு
நெற்றியூர்வாளரவநீள்சடையாய்நின்னூரை
யொற்றியூராக்கிற்றுரை ...... ...... ...... ... ... (௧௫)

உரைவந்துறும்பதத்தேயுரைமின்களன்றுயிலிப்பா
னரைவந்துறும்பின்னைவந்துறுங்காலனன்முத்திடறித்
திரைவந்துறுங்கரைக்கேகலம்வந்துறத்திண்கைவன்றுள்
வரைவந்துறுங்கடன்மாமறைக்காட்டெம்மணியிணையே ... ... (௧௬)

மணியமருமாமாடவாய்மூரான்றன்னை
யணியமரரோடயனுமாலுந்—துணிசினத்த
செஞ்சூட்டசேவற்கொடியானுமாய்நின்று
நஞ்சூட்டவெண்ணியவாநன்று ...... ...... ... ... (௧௭)

நன்றைக்குறுமிருமற்பெருமூச்சுநண்ணுதமுன்னங்
குன்றைக்குறுவதுகொண்டழியாதறிவீர்செறிமின்
கொன்றைக்குறுநறுங்கண்ணியினுன்றன்கொய்பூங்கயிலைக்
குன்றைக்குறுகரிதேனுமுள்ளத்திடைக்கொண்மின்களே ... ... (கஅ)

கொண்டபலிநுமக்குங்கொய்தார்க்குமரர்க்கும்
புண்டரிகமாதினுக்கும்போதுமே—மண்டி
யுயிரிழந்தார்சேர்புறங்காட்டோரிவாயீர்ப்ப
மயிரிழந்தவெண்டலைவாய்வந்து ... ... ... ... ... (கக)

வந்தாறலைக்கும்வலஞ்சுழிவானவவானவர்த
மந்தார்மகுடத்தடுத்தபைம்போதிலந்தேனுழக்கிச்
செந்தாமரைச்செவ்விகாட்டுந்திருவடிக்குஞ்செல்லுமே
யெந்தாயடித்தொண்டரோடிப்பிடித்திட்டவின்மலரே ... ... (உ0)

மலர்ந்தமலர்தூவிமாமனத்தைக்கூப்பிப்
புலர்ந்தும்புலராதபோதுங்—கலந்திருந்து
கண்ணீரரும்பக்கசிவார்க்குக்காண்பெளியன்
றெண்ணீர்ச்சடைக்கரந்ததே ... ... ... ...... ... (உக)

தேவனைப்பூதப்படையனைக்கோதைத்திருவிதழிப்
பூவனைக்காய்சினப்போர்விடைதன்னெடும்போற்றநின்ற
மூவனையீருருவாயமுக்கண்ணனைநான்மறைசொல்
நாவனைநான்மறவேன்மறவேன்வல்லஞானங்களே ... ... ... (உஉ)

நானுமென்னல்குரவுநல்காதார்பல்கடையிற்
கானிமிர்த்துநின்றிரப்பக்கண்டிருக்கும்—வானவர்க
டம்பெருமான்மூவெயிலும்வேவச்சரந்துரற்ற
வெம்பெருமானென்னுவியல்பு ...... ...... ...... ...(உ௩)

இயலிசைநாடகமாயெழுவேலைகளாய்வழுவாப்
புயலியல்விண்ணொடுமண்முழுதாய்ப்பொழுதாகிநின்ற
மயிலியன்மாமறைக்காடர்வெண்காடர்வண்டில்லைமல்கு
கயிலைட்கண்ணிபங்காரன்பர்சித்தத்தடங்குவரோ ... ... ... (உச)

அடங்காதாராரொருவரங்கொன்றைதுன்று
மடங்காதலென்வலைகொள்வார்த்தை—நுடங்கிடையீ
ரூரூரன்சென்றக்காலுண்பலிக்கென்றங்ஙனே
யாரூரன்செல்லுமாறங்கு ... ... ... ... ... (உ௫)

அங்கைமறித்தவராலவியுண்ணுமவ்வானவர்க
டங்கைமறித்தறியார்தொழுதேநிற்பர்தாழ்சடையின்
கங்கைமறித்தணவப்பணமாசுணக்கங்கணத்தின்
செங்கைமறித்திரவிற்சிவனுடுந்திருநட்டமே ... ... ... (உசு)

நட்டநீயாடும்பொழுதத்துநல்லிலையங்
கொட்டக்குழித்தொழிந்தவாகொல்லோ—வட்டுக்
கடுங்குன்றமால்யானைக்காருரிவைபோர்த்த
கொடுங்குன்றபேயின்கொடிறு ...... ...... ...... ... (உஎ)

கொடிறுமுரித்தனன்கூறுனலவன்குருகினஞ்சென்
றிடறுங்கழனிப்பழனத்தரசையெழிலிமையோர்
படிறுமொழிந்துபருகக்கொடுத்துப்பரவைநஞ்ச
மிடறுதடுத்ததுவும்மடியோங்கள்விதிவசமே. ...... ...... (உ௮)

விதிகரந்தசெய்வினையேன்மென்குழற்கேவாளா
மதுகரமேயெத்துக்குவந்தாய்—நதிகரந்த
கொட்டுக்காட்டான்சடைமேற்கொன்றைக்குறுந்தெரியல்
தொட்டுக்காட்டாய்சுழல்வாய்தொக்கு. ...... ...... (உகூ)

தொக்குவருங்கண்டிபாடத்தொன்னீறணிந்தேர்நிலவு
நக்குவருங்கண்ணிசூடிவந்தார்நறும்புன்னைமுன்ன
மக்குவருங்கழிக்கானலையாறனைக்காணவன்பு
மிக்குவருமரும்போதனைக்காண்டலும்வெள்குவனே. ...... ... (௩0)

வெள்காதேயுண்பலிக்குவெண்டலைகொண்டேர்திரிந்தா
னெள்காரோவானவர்களெம்பெருமான்—வள்கூர்
வடதிருவீரட்டானத்தென்னதிகைமங்கைக்
குடதிருவீரட்டானங்கூறு. ...... ...... ...... (௩க)

கூறுபெறுங்கண்ணிநண்ணியகோதைசுண்ணந்துதைந்து
நீறுபெறுந்திருமேனிநெருப்புப்புரைபொருப்பொத்
தாறுபெறுஞ்சடையங்கொன்றையந்தேன்றுவலைசிந்த
வீறுபெறுஞ்சென்றுசென்றெம்பிரானுக்குவெண்ணிறமே. ... (௩உ)

நிறம்பிறிதாயுண்மெலிந்துநெஞ்சுருகிவாளா
புறம்புறமேநாள்போக்குவாளோ—நறுந்தேன்
படுமுடியாப்பாய்நீர்பரந்தொழுகுபாண்டிக்
கொடுமுடியாயென்றன்கொடி. ........ ...... ... (௩௩)

கொடிக்குலவும்மதிட்கோவலூர்வீரட்டகோளரவம்
பிடிக்கிலவான்முடிப்பூணலையத்தொடுமால்விடையி
னிடிக்குரல்கேட்டிடியென்றிறுகக்கடிவாளெயிற்றுற்
கடிக்கலுறுமஞ்சுநஞ்சமிருந்தநின்கண்டத்தையே. ...... ... (௩௪)

கண்டநிறங்கறுப்பக்கவ்வைக்கருங்கடனஞ்
சுண்டல்புரிந்துகந்தவுத்தமற்குத்—தொண்டடைந்தார்
கூசுவரோகூற்றைக்குறுகுவரோதீக்கொடுமை
பேசுவரோமற்றொருவர்பேச்சு. ...... ...... ...... ... (௩௫)

பேய்ச்சுற்றம்வந்திசைபாடப்பிணமிடுகாட்டயலே
தீச்சுற்றவந்துநின்றாடலென்னாஞ்செப்புமுப்பொழுதுங்
கோச்சுற்றமாக்குடைவானவர்கோனயன்மான்முதலா
மாச்சுற்றம்வந்திறைஞ்சுந்திருப்பொற்சடைமன்னவனே. ...... (௩௬)

மன்னும்பிறப்பறுக்குமாமருந்துவாளரக்கன்
றுன்னுஞ்சுடர்முடிகடோணெரியத்—தன்னைத்
திருச்சத்திமுற்றத்தான்சித்தத்துள்வைத்தான்
றிருச்சத்திமுற்றத்தான்றேசு. ... ... ... ... ...(௩௭)

திருச்சிற்றம்பலம்.

சிவபெருமான்றிருவிரட்டைமணிமாலைமுற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

கபிலதேவநாயனார் அருளிச்செய்த

# சிவபெருமான்றிருவந்தாதி

ஒன்றுமுதலாகநூறளவுமாண்டுகள்வாழ்ந்
தொன்றுமனிதருயிரையுண்—டொன்று
மதியாதகூற்றுதைத்தசேவடியான்வாய்ந்த
மதியானிடப்பக்கமால். .......... ...... ...... ...... (௧)

மாலையொருபான்மகிழ்ந்தானைவண்கொன்றை
மாலையொருபான்முடியானை—மாலை
யொளியானையுத்தமனையுண்ணாநஞ்சுண்டற்
கொளியானையேற்றியுளம். ...... ...... ... ... (௨)

உளமால்கொண்டோடிவொழியாதியாமு
முளமாகிலேத்தாவாறுண்டே—யுளமாசற்
றங்கமலமில்லாவடல்வெள்ளேறூர்ந்துழலு
மங்கமலவண்ணனடி. ...... ...... ...... (௩)

அடியார்தம்மாருயிரையட்டழிக்குங்கூற்றை
யடியாலருவாகச்செற்றா—னடியார்த
மந்திரத்தாலேத்தியகங்குழைந்துமெய்யரும்பி
யந்தரத்தார்சூடுமலர். .......... ...... ... ... (௪)

அலராளுங்கொன்றையணியலாரூற்
கலராகியானுமணிவ—னலராகி
யோதத்தானோட்டினேனோதுவன்யானேங்கொலிநீ
ரோதத்தானஞ்சுண்டானூர். ...... ...... ...... (௫)

ஊருமதொற்றியூருண்கலனும்வெண்டலையே
யூரும்விடையொன்றுடைதோலே—யூரும்
படநாகமட்டார்பணமாலையீதோ
படநாகமட்டார்பரிசு. ...... ...... ...... ... (௬)

பரியானையூராதுபைங்கணேறூரும்
பரியானைப்பாவிக்கலாகா—பரியானைக்
கட்டங்கமேந்தியாக்கண்டுவாழ்நன்னெஞ்சே
கட்டங்கமேந்தியாக்கண்டு. ...... ...... ...... (௭)

கண்டங்கரியனுமைபாலுந்தன்பாலுங்
கண்டங்கரியன்கரிகாடன்—கண்டங்கள்
பாடியாட்டாடும்பரஞ்சோதிக்கென்னுள்ளம்
பாடியாக்கொண்டபதி. ............ ......... ...... (௮)

பதியார்பழிதீராப்பைங்கொன்றைதாவென்
பதியான்பலநாளிரக்கப்—பதியாய
வம்மானார்கையார்வளைகவர்ந்தாரஃதேகொ
லம்மானார்கையாரறம். ......... ...... ...... ...... (௯)

அறமானநோக்காதனங்கனையுஞ்செற்றங்
கறமாநஞ்சுண்டவமுத—னறலான
வோதியாள்பாகமமர்ந்தானுயர்புகழே
யோதியான்ருேற்றேனொளி ...... ...... ...... (௧0)

ஒளியார்சுடர்மூன்றுங்கண்மூன்ருக்கோடற்
கொளியானுலகெல்லாமேத்தற்—கொளியாய
கள்ளேற்ருன்கொன்றையான்காப்பிகந்தானன்னெஞ்சே
கள்ளேற்ருன்கொன்றைகடிது. ...... ...... ...... (௧௧)

கடியரவரக்கரினிதாடுகோயில்
கடியரவர்கையதுமோர்சூலங்—கடியரவ
ரானேற்ருர்க்காட்பட்டநெஞ்சமேயஞ்சனீ
யானேற்ருர்க்காட்பட்டோமியாம். ...... ...... ... ... (௧௨)

யாமானநோக்காதலர்கொன்றைத்தார்வேண்ட
யாமானங்கொண்டங்கலர்தந்தார்—யாமாவா
வாலூராலூருமழகாவனலாடி
யாலூரார்க்கென்னுளைக்கோம்யாம். ...... ...... (௧௩)

யானென்றங்கண்ணுமலையானகம்புகுந்து
யானென்றங்கையறிவுங்குன்றுவித்து—யானென்றங்
கார்த்தானேயாயிடினுமைம்பான்மேலங்கொன்றை
யார்த்தானேவுய்வதரிது. ... ... ... ... (௧௪)

அரியாரும்பூம்பொழில்சூழாமாத்தூரம்மா
னரியாரும்பாகத்தமுத—னரியாரும்
வேங்கடத்துமேயானைமேவாவுயிரெல்லாம்
வேங்கடத்துநோயால்வியந்து. ...... ... ... ... (௧௫)

வியந்தாழிநன்னெஞ்சேமெல்லியலார்க்காளாய்
வியந்தாசையுண்மெலியவேண்டா—வியந்தாய
கண்ணுதலானெந்தைகாவாலிகழலடிப்பூ
கண்ணுதலார்நம்பார்கடன், ... ... ... ... (௧௬)

கடனாகமூராதகாரணமுங்கங்கை
கடனாகநீகவர்ந்தவாறுங்—கடனாகப்
பாரிடந்தான்மேவிப்பயிலும்பரஞ்சோதி
பாரிடந்தான்மேயாய்பணி, ...... ......... ...... (௧௭)

பணியாய்மடநெஞ்சேபல்சடையான்பாதம்
பணியாதபத்தர்க்குஞ்சேயன்—பணியாய
வாகத்தான்செய்துமேனம்மையமரர்கோ
னாகத்தான்செய்யுமரன். ...... ...... ...... ...... (௧௮)

அரன்காயனைவேற்கனங்கவேளம்பு
மரன்காயுமந்தியுமற்றந்தோ—வரங்காய
வெள்ளில்சேர்காட்டாடிவேண்டான்களிறுண்ட
வெள்ளில்போன்றுள்ளம்வெறிது. ...... ...... ...... (௧௯)

வெறியானையூர்வேந்தர்பின்செல்லும்வேட்கை
வெறியார்பூந்தாரான்விமலன்—வெறியார்த
மல்லனோய்தீர்க்குமருமருந்தாமாரூர்க்கோ
னல்லனோநெஞ்சேயயன். ...... ...... ...... ...... (௨௦)

அயமாலூணுடரவநாணதளதாடை
யயமாவதானேறூராரூ—ரயமாய
வென்னக்கன்றாழ்சடையனீற்றனெரியாடி
யென்னக்கன்றாழுமிவள். ...... ...... ...... (௨௧)

ஆழுமிவளையுங்கையலவாற்றேனென்
றாழுமிவளையயராதே—யாழுஞ்
சலமுடியாய்சங்கரனேசங்கக்குழையாய்
சலமுடியாதின்றருள்வாய்தார். ...... ...... ... (௨௨)

தாராயதண்கொன்றையாணிரப்பத்தாணிதனைத்
தாராதேசங்கஞ்சரிவித்தான்—தாராவல்
லானைமேல்வைகுமணிவயலாரூர்க்கோனல்
லானையும்வானோர்க்காசு. ......... ...... ... (௨௩)

ஆசுமாயாள்விக்குமாட்பட்டார்க்கம்மா
னரசமாமங்கொன்றுமாலுக்—காசுமா
னூர்தியெரித்தானுணருஞ்செவிக்கின்பன்
னூர்தியெரித்தானுரு. ...... ...... ...... ...... (௨௪)

உருவேயென்சொற்களொளிவளைநின்னுள்ளத்
துருவேதீயுற்றனகளெல்லா—முருவேபோய்க்
காவாலிதார்நினைந்துகைசோர்ந்துமெய்மறந்தாள்
காவாலிதாநின்கலை. ...... ...... ...... (௨௫)

கலைகாமினேர்காமின்கைவளைகள்காமின்
கலைசேர்நுதலிர்நாண்காமின்—கலையாய
பான்மதியன்பண்டரங்கன்பாரோம்புநான்மறையன்
பான்மதியன்போந்தான்பலிக்கு. ...... ...... ... (௨௬)

பலிக்குத்தலையேந்திப்பாரிடங்கள்சூழப்
பலிக்குமனைப்புகுந்துபாவாய்—பலிக்குநீ
யையம்பெய்யென்றானுக்கையம்பெய்கின்றேன்மே
லையம்பெய்தானனங்கனாய்ந்து. ......... ...... ... (௨௭)

ஆயமழியவலர்கொன்றைத்தார்வேண்டி
யாயமழியவயர்வேன்மே—லாயன்வாய்த்
தீங்குழலுந்தென்றலுந்தேய்கோட்டிளம்பிறையுந்
தீங்குழலுமென்னையேதேர்ந்து. ...... ...... ...... (௨௮)

தேரோன்கதிரென்னுஞ்செந்தழலால்வெந்தெழுபேய்த்
தேரோன்கதிரென்னுஞ்செய்பொருணீ—தேராதே
கூடற்காவாலிகுழைகழற்காநன்னெஞ்சே
கூடற்காவாலிதரக்கூர். ...... ...... ...... (உகூ)

கூராலமேயாக்குருகொடுனைவேற்குக்
கூரார்வேற்கையார்க்காய்க்கொல்லாமே—கூரார்
பனிச்சங்காட்டார்சடைமேற்பான்மதியைப்பாம்பே
பனிச்சங்காட்டாய்கடிக்கப்பாய்ந்து. ... ... ... ... (௩0)

பாயும்விடையூர்திபாசுபதன்வந்தெனது
பாயில்புகுதப்பணைமுலைமேற்—பாயிலனற்
கொன்றாய்குளிர்சடையாற்கென்னிலைமைகூறுதே
கொன்றாயிதுவோகுணம். ...... ...... ...... (௩க)

குணக்கோடிகோடாக்குளிர்சடையான்வில்லின்
குணக்கோடிக்குன்றஞ்சூழ்போகி—குணக்கோடித்
தேரிரவில்வாரான்சிவற்காளாஞ்சிந்தனையே
தேரிரவில்வாழுந்திறம். ......... ...... ...... (௩உ)

திறங்காட்டுஞ்சேயாள்சிறுகிளியைத்தான்றன்
திறங்காட்டுந்திவண்ணனென்னும்—திறங்காட்டி
னூரரவமார்த்தானேடென்னையுடன்கூட்டி
னூரரவஞ்சாலவுடைத்து. ... ... ... ... ... (௩௩)

உடையோடுகோடாடியூரையமுண்ணி
யுடையாடைதோல்பொடிசந்தென்னை—யுடையானை
யுன்மத்தகமுடிமேலுய்த்தானைநன்னெஞ்சே
யுன்மத்தகமுடிமேலுய். ... ... ... ... ... ... (௩ச)

உய்யாதெனுவியொளிவளையுமேகலையு
முய்யாதுடம்பழிக்குமொண்டிரலை—யுய்யா
மிறையானேயீசனேயெம்மானேநின்னை
யிறையானுங்காண்கிடாயின்று. ... ... ... ... ... (௩ரு)

இன்றியாமுற்றவிடருமிருந்துயரு
மின்றியாந்தீர்துமெழினெஞ்சே—யின்றியாங்
காட்டாநஞ்சேற்றானற்காமருவெண்காட்டான்
காட்டானஞ்சேற்றான்கலந்து. ...... ...... ...... (௩சா)

கலம்பெரியார்க்காஞ்சிரங்காய்வின்மேருவென்னுங்
கலம்பெரியவாற்கீழிருக்கை—கலம்பிரியா
மாக்கடனஞ்சுண்டார்கழறொழாற்குண்டாமோ
மாக்கடனஞ்சேரும்வகை. ... ... ... ... ... (௩எ)

கையாறவாவெகுளியச்சங்கழிகாமங்
கையாறுசெஞ்சடையான்காப்பென்னுங்—கையாறு
மற்றிரண்டதோளானைச்சேர்நெஞ்சேசேரப்போய்
மற்றிரண்டதோளான்மனை. ...... ... ... ... (௩அ)

மனையாய்ப்பலிக்கென்றுவந்தான்வண்காமன்
மனையாசறச்செற்றவாறோன்—மனையாய
வென்பாவாயென்றேனுக்கியானல்லேனீதிருவே
யென்பாவாயென்றானிறை. ... ... ... ... ... (௩௯)

இறையாயவெண்சங்கிவைதருவேனென்னு
மிறையாகமின்றருளாயென்னு—மிறையாய்
மறைக்காட்டாய்மாதவனேநின்னுருவமிங்கே
மறைக்காட்டாயென்னுமிம்மாது. ...... ...... ...... (௪0)

மாதரங்கத்தன்னரங்கஞ்சேர்த்திவளர்சடைமேன்
மாதரங்கக்கங்கைநீர்மன்னுவித்து—மாதரங்கத்
தேரானையூரான்சிவற்காளாஞ்சிந்தனையே
தேரானையூரானைத்தேர். ...... ...... ...... (௪௧)

தெருளிலாரொன்னுவார்காவிரிவந்தேறு
மருகிற்சிராமலையெங்கோமான்—விரியுலகிற்
செல்லுமதிண்மூன்றெரித்தான்சேவடியேயாம்பரவிச்
செல்லுமெழினெஞ்சேதெளி. ...... ...... ...... (௪௨)

தெளியாய்மடநெஞ்சேசெஞ்சடையான்பாதந்
தெளியாதார்தீநெறிக்கட்செல்வர்—தெளியாய
பூவார்சடைமுடியான்பொன்னடிக்கேயேத்துவனற்
பூவாயவாசம்புனைந்து. ...... ...... ...... ...... (௪௩)

புனைகடற்குப்பொன்கொடுக்கும்பூம்புகார்மேயான்
புனைகடுக்கைமாலைப்புராணன்—புனைகடத்து
நட்டங்கமாட்டயருநம்பன்றிருநாம
நட்டங்கமாட்டினேனக்கு. ... ... ... ... ... (௪௪)

நக்கரைசாளுநடுநாளைநாரையூர்
நக்கரைவக்கரையோநாமென்ன—நக்குரையாம்
வண்டாழங்கொன்றையான்மால்பணித்தான்மற்றவர்க்காய்
வண்டாழங்கொண்டான்மதி, ............ ...... (௪௫)

மதியாவடுகின்றதென்னுமால்கூரு
மதியாதேவைதுரைப்பரொன்னு—மதியாதே
மாதெய்வமேத்துமறைக்காடாவீதேகொன்
மாதெய்வங்கொண்டவனப்பு. ... ... ... ... (௪௬)

வனப்பார்கிறமும்வரிவளையுநாணும்
வனப்பார்வளர்சடையான்கொள்ள—வனப்பாற்
கடற்றிரையுமீருமிக்கங்குல்வாயான்கட்
கடற்றிரையுமீருங்கனன்று. ............ ...... (௪௭)

கனன்றுழிநன்னெஞ்சேகண்ணுதலாற்காளாய்க்
கனன்றார்களிற்றுரிமால்காட்டக்—கனன்றே
ருடம்பட்டநாட்டத்தளென்னையுந்தன்னுளா
வுடம்பட்டநாட்டனுரு. ............ ............ (௪௮)

உருவியலுஞ்செம்பவளமொன்றுருடம்பி
லுருவியலுஞ்சூலமுடைய—னுருவியலு
மாலேற்றுனான்முகனுமண்ணொடுவிண்ணும்போய்
மாலேற்றுற்கிதோவடிவு. ............ ..... (சகூ)

வடிவாரறப்பொங்கிவண்ணக்கச்சுந்தி
வடிவார்வடம்புனைந்தும்பொல்லா—வடிவார்வேன்
முக்கூடலம்மாமுருகமருங்கொன்றையந்தார்
முற்கூடமாட்டாமுலை. ............ ... ... ...(ருo)

முலைநலஞ்சேர்கானப்பேர்முக்கணனென்னு
முலைநலஞ்சேர்மொய்சடையானென்னு—முலைநலஞ்சேர்
மாதேவாவென்றுவளர்கொன்றைவாய்சோர
மாதேவாசோரல்வளை. ...... ...... ......... (ருக)

வளையாழியோடகலமாறந்தானென்னும்
வளையாழிநன்னெஞ்சேகாணில்—வளையாழி
வன்னஞ்சைக்கண்டமரர்வாய்சோரவந்தெதிர்ந்த
வன்னஞ்சக்கண்டன்வரில். ... ... ... ... (ருஉ)

வரிநீலவண்டலம்புமாமறைக்காட்டங்கேழ்
வரிநீர்வலம்புரிகளுந்தி—வரிநீ
ரிடுமணன்மேலந்நலங்கொண்டின்றுநோய்செய்தா
னிடுமணன்மேலீசனெமக்கு. ...... ...... ... (ருங)

அக்காரமாடரவநாணறுவைதோல்பொடிசாந்
தக்காரந்தீர்ந்தேனடியேனுக்—கக்காரம்
பண்டரங்கனெந்தைபடுபிணஞ்சேர்வெண்காட்டுப்
பண்டரங்கனெங்கள்பவன். ... ... ......... (ருச)

பவனடிபார்விண்ணீர்பகலோன்மதிதீப்
பவனஞ்சேராரமுதம்பெண்ணாண்—பவனஞ்சேர்
காலங்களூழியவனேகரிகாட்டிற்
காலங்கையேந்தினான்காண். ............ ... ... (ருரு)

காணங்கையின்மைகருதிக்கவலாதே
காணங்கையாற்றொழுதுநன்னெஞ்சே—காணங்கை
பாவனையாய்நின்றுன்பயிலும்பரஞ்சோதி
பாவனையாய்நின்றபதம். ... ... ... ... (ருசு)

பதங்கவரையுயர்ந்தான்பான்மகிழ்ந்தான்பண்டு
பதங்கனெயிறுபறித்தான்—பதங்கையா
லஞ்சலிகளன்பாலுமாக்குதிகாணெஞ்சேகூர்ந்
தஞ்சலிகளென்பாலுமாக்கு. ... ... ... (ருஎ)

ஆக்கூர்பனிவாடாவாவிசோர்ந்தாழ்கின்றே
ளாக்கூரலர்தானழகிதா—வாக்கூர்
மறையோம்புமாடத்துமாமறையோநான்கு
மறையோம்புமாதவர்க்காய்வந்து. ...... ......... ...(ருஅ)

வந்தியான்சீறினுமாழிமடநெஞ்சே
வந்தியாயுள்ளத்துவைத்திராய்—வந்தியாய்
நம்பரனையாடுநளிர்புன்சடையானை
நம்பரனைநாடோறுநட்டு. ... ......... ......... (ருகூ)

நட்டமாகின்றனவொண்சங்கநானவன்பா
னட்டமாநன்னீர்மைவாடினே—னட்டமா
டியானெரியாடியெம்மானிருங்கொன்றை
யீயானேனுய்வதிலம். ... ......... ......... ...(௬0)

இலமலரஞ்சேவடியாரோகப்பெருரோ
யிலமலரோயாயினுமாக—விலமலரு
மாம்பல்சேர்செவ்வாயார்க்காடாதேயாடினே
னாம்பல்சேர்வெண்டலையார்க்காள். ...... ...... ... (௬க)

ஆளானஞ்சேர்களிறுந்தேருமடன்மாவு
மாளானாரூரத்தானே நூருந்—தாளான்பொய்
நாடகங்களாட்டயரும்நம்பன்றிருநாமம்
நாடகங்ளாடிநயந்து. ...... ......... ...... (௬உ)

நயந்தநாளியானிரப்பநற்சடையான்கொன்றை
நயந்தநாணன்னீர்மைவாட—நயந்தநா
ணம்பகலஞ்செற்றானருளானனங்கவே
ளம்பகலம்பாயுமலர்ந்து. ........... ...... ...... (௬௩)

அலங்காரமாடரவமென்புதோலாடை
யலங்காரவண்ணற்கழகா—ரலங்கார
மெய்காட்டுவார்குழலாரொன்னுவார்வெள்ளேற்றான்
மெய்காட்டும்வீடாம்விரைந்து. ...... ...... ...... (௬௪)

விரையார்புனற்கங்கைசேர்சடையான்பொன்னூர்
விரையார்பொழிலுறந்தைமேயான்—விரையாநீ
றென்பணிந்தானீசனிறையானெரியாடி
யென்பணிந்தானீசனெனக்கு. ...... ...... ... (௬ரு)

எனக்குவளைநில்லாவெழிலிழந்தேனென்னு
மெனக்குவளைநில்லாநோய்செய்தா—னினக்குவளைக்
கண்டத்தானல்வேதன்காரோணத்தெம்மானைக்
கண்டத்தானெஞ்சேகாக்கை. ... ... ... ... ... (௬௬)

காக்கைவளையென்பார்ப்பார்க்கன்பாப்பானையாதே
காக்கைவளையென்பார்ப்பானூர்குரக்குக்—காக்கைவளை
யாடானையீருரியனண்பெணவிர்சடைய
னூடானையானதமைவு. ...... ...... ...... (௬எ)

அமையாமென்றோண்மெலிவித்தம்மாமைகொண்டிங்
கமையாநோய்செய்தானணங்கே—யமையாளுஞ்
சாமத்தகண்டன்சடைசேரிளம்பிறையன்
சாமத்தினிந்நோய்செய்தான் ... ... ... ... (௬அ)

தானக்கனக்கபிறையன்பிறைக்கோட்டுத்
தானக்களிற்றுரியன்றண்பழனன்—ருனத்
தரையனரவரையனுயிழைக்குமாற்கு
மரையனுடையானருள் ... ... ... ... ... (௬௯)

அருணம்பாற்செஞ்சடையனுமாத்துரம்மா
னருணம்பானல்குமமுத—னருணம்பா
லோராழித்தேரானெயிறட்டவுத்தமனே
யேராழிநெஞ்செயுவ. ...... ...... ...... (௭௦)

உவவாநறுமலர்கொண்டுத்தமனையுள்கி
யுவவாமனமகிழும்வேட்கை—யுவவா
றெழுமதிபோல்வாண்முகத்தீசனூர்க்கென்னே
யெழுமதிபோலீசனிடம். ...... ...... ...... (௭௧)

இடமால்வலமாலேவண்ணமேதம்ப
மிடமால்வலமானஞ்சேர்த்தி—யிடமாய
மூவாமதிபுனையுமுன்னிலங்குமொய்சடையான்
மூவான்மதியான்முனி. ...... ...... ...... ...... (௭௨)

முனிவன்மால்செஞ்சடையான்முக்கணனென்னு
முனிவன்மால்செய்துமுன்னிற்கு—முனிவன்மால்
போற்றூர்புரமெரித்தபுண்ணியன்றன்பொன்னடிகள்
போற்றுநாளின்றுபுலர்ந்து. ...... ......... ... (௭௩)

புலர்ந்தாலியானுற்றேன்புறனுரையுமஃதே
புலர்ந்தானூர்புன்கூரானென்னும்—புலர்ந்தாய
மண்டளியனம்மானவர்தம்மடியார்தம்
மண்டளியன்பின்போமனம். ............ ......... (௭௪)

மனமாயநோய்செய்தான்வண்கொன்றைதாரான்
மனமாயவுள்ளாரவாரான்—மனமாயப்
பொன்மாலேசேரப்புனேந்தான்புனேதருப்பைப்
பொன்மாலேசேர்சடையான்போந்து. ... ... ... (௭௫)

போந்தார்புகவணேந்தார்பொன்னேர்ந்தார்பொன்றுமை
போந்தாரொழியார்புரமெரித்தார்—போந்தா
ரிலங்கோலவாண்முகத்தீசனற்கெல்லே
யிலங்கோலந்தோற்பதினி. ... ... ... ......... (௭௬)

இனியாருமாளாகவெண்ணுவர்கொலெண்ணு
ரினியானஞ்சூணிருக்கைக்குள்ளா—னினியானைத்
தாளங்கையாற்பாடித்தாழ்சடையான்றானுடைய
தாளங்கையாற்றெழுவார்தாம். ......... ...... ...... (௭௭)

தாமரைசேர்நான்முகற்குமாற்குமறிவரியார்
தாமரைசேர்பாம்பர்சடாமகுடர்—தாமரைசேர்
பாணியார்தீர்ந்தளிப்பர்பாரோம்புநான்மறையர்
பாணியார்தீர்ந்தளிப்பர்பார். ... ... ... ... (௭௮)

பார்கால்வானீர்தீப்பகலோன்பனிமதியன்
பார்கோலமேனிப்பரனடிக்கே—பார்கோலக்
கோகரணத்தானறியக்கூறுதியேநன்னெஞ்சே
கோகரணத்தானுயகோ. ...... ...... ...... ...... (எகூ)

கோப்பாடியோடாதேநெஞ்சமொழிகூத்தன்
கோப்பாடிக்கோகரணங்குற்றாலங்—கோப்பாடிப்
பின்னைக்காய்நின்றூற்கிடங்கொடுக்கும்பேரருளான்
பின்னைக்காமெம்பெருமான்பேர் ...... ......... ... (அO)

பேரானையீருரிவைபோர்த்தானையாயிரத்தெண்
பேரானையீருருவம்பெற்றானைப்—பேராநஞ்
சுண்டானையுத்தமனையுள்காதார்க்கெஞ்ஞான்று
முண்டாநாளல்லவுயிர். ... ... ... ... (அக)

உயிராயமூன்றொடுக்கியைந்தடக்கியுள்ளத்
துயிராயவொண்மலர்த்தாளூடே—யுயிரான்
பகர்மனத்தான்பாசுபதன்பாதம்பணியப்
பகர்மனமேயாசைக்கட்பட்டு. ...... ...... ...... ... (அஉ)

பட்டாரண்பட்டாங்கனம்மான்பரஞ்சோதி
பட்டாொலும்பணியும்பாசுபதன்—பட்டார்ந்த
கோவணத்தான்கொல்லேற்றனென்றென்றுநெஞ்சமே
கோவணத்துநம்பனையேகூறு ...... ...... ...... (அங)

கூற்றும்பொருளும்போற்காட்டியென்கோல்வளையைக்
கூற்றின்பொருண்முயன்ற குற்றாலன்—கூற்றின்
செருக்கழியச்செற்றசிவற்கடிமைநெஞ்சே
செருக்கழியாமுன்னமேசெய். ... ...... ............ (அச)

செய்யான்கருமிடற்றான்செஞ்சடையான்றேன்பொழில்சூழ்
செய்யான்பழனத்தான்மூவுலகுஞ்—செய்யாமு
னாட்டுணாய்நின்றானைநாடுதும்போய்நன்னெஞ்சே
நாட்டுணாநின்றானைநாம். ... ... ... ... (அரு)

நாவாயகத்துளதேநாமுளமேமநம்மீச
னாவாய்போனன்னெறிக்கணுய்க்குமே—நாவாயாற்
றுய்க்கப்படும்பொருளைக்கூட்டுதுமற்றவர்க்காட்
டுய்க்கப்படுவதாஞ்சூது. ... ... ... ... (அசா)

சூதொன்றுனக்கறியச்சொல்லினேனன்னெஞ்சே
சூதன்சொலற்கரியசோதியான்—சூதின்
கொழுந்தேன்கமழ்சோலைக்குற்றாலம்பாடிக்
கொழுந்தேயிழந்தேன்குருகு. ... ... ... (அஎ)

குருகிளவேய்த்தோண்மெலியக்கொங்கைமார்புல்கிக்
குருகிளையார்கோடுகொடாமே—குருகிளரும்
போதார்கழனிப்புகலூரமர்ந்துறையும்
போதாநின்பொன்முடிக்கட்போது ......... ...... (அஅ)

போதரங்கவார்குழலாரொன்றுவார்நன்னெஞ்சே
போதரங்கநீர்கரந்தபுண்ணியனைப்—போதரங்கக்
கானகஞ்சேர்சோதியேகைவிளக்காநின்றுடுங்
கானகஞ்சேர்வார்க்கடிமைகல் ...... ............ (அகூ)

கற்றானஞ்சாடுகோபாலிகளந்தைக்கோன்
கற்றானைக்கல்லாதநாளெல்லாங்—கற்றா
னமரர்க்கமரரரர்க்கடிமைபூண்டா
ரமரர்க்கமரராவார். ... ... ... (கூ0)

ஆவாமனிதரறிவிலரோயாதொன்று
மாவார்போற்காட்டியழிகின்றா—ராவா
பகனுடிப்பாடிப்படர்சடைக்குப்பல்பூப்
பகனுடியேத்தார்பகர்ந்து. ............ ... ......... (கூக)

பகனுட்டம்பாட்டயரும்பூட்டோடாட்டெல்லி
பகனுட்டம்பாழ்படுக்குமுச்சி—பகனுட்டந்
தாங்காரெழுதெழுவார்தாழ்சடையார்தம்முடைய
தாங்காரெழுதறலே. ... ... ... ...... (கூஉ)

தலையாலங்காட்டிற்பலிதிரிவரென்னுந்
தலையாலங்காடர்தாமென்னுந்—தலையாய
பாகீரதிவளரும்பல்சடையீர்வல்விடையீர்
பாகீரதிவளரும்பண்பு. ......... ...... ............ (கூங)

பண்பாயநான்மறையான்சென்னிப்பலிதேர்ந்தான்
பண்பாயபைங்கொன்றைத்தாரருளான்—பண்பாற்
றிருமாலுமங்கைச்சிவற்கடிமைசெய்வான்
றிருமாலுமங்கைச்சிவன். ...... ...... ...... (கூச)

சிவன்மாட்டுகவெழுதுநாணுநகுமென்னுஞ்
சிவன்மேயசெங்குன்றூரென்னுஞ்—சிவன்மாட்டங்
காலிங்கனநினையுமாயிழையீரங்கொன்றை
யாலிங்கனநினையுமாறு. ... ... ... (கூரு)

ஆறுவெங்கூற்றுதைத்தானைத்தோல்போர்த்துகந்தங்
காறார்சடையீர்க்கமையாதே—யாறாத
வானினத்தார்தாந்தமணியிழையினார்க்கடிமை
யானினத்தார்தாந்தவிர்ந்ததாட்டு. ...... ...... (கூசு)

ஆட்டுமரவரழிந்தாரொலும்பணிவா
ராட்டுமிடுபலிகொண்டாரமர—ராட்டுமோர்
போரோற்றான்கொன்றையான்போந்தான்பலிக்கென்று
போரோற்றான்போந்தான்புறம். ... ... ... (கூஎ)

புறந்தாழ்குழலார்புறனுரையஞ்சாதே
புறந்தாழ்புலிப்பொதுவுளாடிப்—புறந்தாழ்பொன்
மேற்றளிக்கோன்வெண்பிறையான்வெண்சுடர்போன்மேனியான்
மேற்றளிக்கோனென்றுரையான்மெய். ... ... ... (கூஅ)

மெய்யன்பகலாதவேதியன்வெண்புரிநூல்
மெய்யன்விரும்புவார்க்கெஞ்ஞான்றும்—வெய்ய
துணையகலாநோக்கலாபோற்றிகலாநெஞ்சே
துணையிகலாகூறுவானூறு. ... ... ......... (௯௯)

நூறுன்பயனுட்டிநூறுமலர்சொரிந்து
நூறுகோடிவதனின்மிக்கதே—நூறு
வுடையான்புரித்தவெரியுத்தமனைவெள்ளே
றுடையானைப்பாடலாலொன்று. ...... ......... (௧௦௦)

திருச்சிற்றம்பலம்.

சிவபெருமான் றிருவந்தாதி முற்றும்.

கபிலதேவநாயனாரருளிச்செய்த திருப்பிரபந்தங்கள் முற்றுப்பெற்றன.



திருச்சிற்றம்பலம்.

பரணதேவநாயனாரருளிச்செய்த

# சிவபெருமான்றிருவந்தாதி.

ஒன்றுரைப்பீர்போலப்பலவுரைத்திட்டோயாதே
யொன்றுரைப்பீராயினுறுதுணையா—மொன்றுரைத்துப்
பேரரவம்பூண்டுபெருந்தலையிலுண்டுழலும்
பேரரவம்பூணும்பிரான் ... ...... ...... (௧)

பிரானிடபமால்பெரியமந்தாரம்வில்லுப்
பிரானிடபம்பேரொலிநாணாகம்—பிரானிடபம்
பேணுமுமைபெரியபுன்சடையின்மேலமர்ந்து
பேணுமுமையிடவம்பெற்று ... ...... ...... (௨)

பெற்றும்பிறவிபிறந்திட்டொழியாதே
பெற்றும்பிறவிபிறந்தொழிமின்—பெற்றுங்
குழையணிந்தகோளரவக்கூற்றுதைத்தான்றன்னைக்
குழையணிந்தகோளரவ்நீ ... ... ...... (௩)

நீயேயாளாவாயும்நின்மலர்க்குநன்னெஞ்சே
நீயேயாளாவாயும்நீள்வாளில்—நீயேள
வேறூர்புனற்சடையாவெங்களிடைமருதா
வேறூர்புனற்சடையாவென்று ... ... ...... (௪)

என்றுமலர்தூவியீசன்றிருநாம
மென்றுமலர்தூற்றியேயிருந்து—மென்றும்

புகலூராபுண்ணியனேயென் ... ...... ...... (௫)

என்னேயிவளுற்றமாலென்கொலின்கொன்றை
யென்னேயிவளொற்றியூரொன்னு—மென்னே
தவளப்பொடியணிந்தசங்கரனேயென்னுந்
தவளப்பொடியானைச்சார்ந்து ... ... ... (சா)

சார்ந்துரைப்பதொன்றுண்டுசாவாமூவாப்பெருமை
சார்ந்துரைத்ததத்துவத்தினுட்பொருளைச்—சார்ந்துரைத்த
வாதியேயம்பலவாவண்டத்தையாட்கொள்ளு
மாதியென்றென்பாலருள் ... ... ... (எ)

அருள்சேராதாரூர்தீயாருமலெய்தா
யருள்சேராதாரூர்தீயாடி—யருள்சேரப்
பிச்சையேற்றுண்டுபிறர்கடையிற்கானிமிர்த்துப்
பிச்சையேற்றுண்டுழல்வாய்பேச்சு ... ... ... (அ)

பேச்சுப்பெருகுவதென்பெண்ணணலியென்று
பேச்சுக்கடந்தபெருவெளியைப்—பேச்சுக்
குரையானையூனுக்குயிரானையொன்றற்
குரியானைநன்னெஞ்சேயுற்று ... ... ... (௯)

உற்றுரையாய்நன்னெஞ்சேயோதக்கடல்வண்ண
னுற்றுரையாவண்ணமொன்றானானை—யுற்றுரையா
யானையுரித்தானையப்பனையெப்பொழுது
மானையுரித்தானையடைந்து ... ... ... (கO)

அடைந்துன்பாலன்பாயணிமணிகொண்டர்ச்சித்
தடைந்துன்பான்மேலுகுத்தமாணிக்—கடைந்துன்பா
லவ்வமுதமூட்டியணிமலருஞ்சூழ்ந்தன்
றவ்வமுதமாக்கினாய்காண் ... ... ... (கக)

காணாய்கபாலிகதிர்முடிமேற்கங்கைதனைக்
காணயக்காருருவிற்சேருமையைக்—காணா
யுடைதலைகொண்டூரூர்திரிவானைநச்சி
யுடைதலைகொண்டூரூர்திரி ... ... ... ... (கஉ)

திரியும்புரமெரித்தசேவகனார்செவ்வே
திரியும்புரமெரியச்செய்தார்—திரியு
மரியான்றிருக்கயிலையென்னுதார்மேனி
யரியான்றிருக்கயிலையாம் ... ... ... (கஈ)

ஆம்பரிசேசெய்தங்கழியாக்கை—யாம்பரிசே
யேத்தித்திரிந்தானையெம்மானையம்மானை
யேத்தித்திரிந்தானையேத்து ... ... ... ... (கச)

ஏத்துற்றுப்பார்த்தனெழில்வானடைவான்போ
லேத்துற்றுப்பார்த்தனிறைஞ்சுதலு—மேத்துற்றுப்
பாசுபதமன்றளித்தபாசூரான்பானீற்றான்
பாசுபதமின்றளியென்பால் ... ... ... (கரு)

பாலார்புனல்பாய்சடையானுக்கன்பாகிப்
பாலார்புனல்பாய்சடையானுள்—பாலாடி
யாடுவான்பைங்கணரவூர்வான்மேனிதீ
யாடுவானென்றென்றேயாங்கு ...... ...... ... (கசு)

ஆங்குழைக்கலாம்பொன்மலர்ப்பாதமஃதன்றே
யாங்குழைக்கலாம்பொனணிதில்லை—யாங்குழைத்த
வம்பரத்துமண்டத்துமப்பாலுமாய்நின்ற
வம்பரத்துமண்டத்துமாம் ... ... ... (கஎ)

மாயனையோர்பாகமமர்ந்தானைவானவரு
மாயவருமால்கடனஞ்சுண்டானை—மாய
வருவானைமாலையொளியானைவானி
னுருவானையேத்தியுணர் ... ... ... ... (கஅ)

உணராவளைகழலாவுற்றுன்பாற்சங்க
முணராவளைகழலவொட்டி—யுணரா
வளைந்தானமேனியணியாரூரேசென்
றளைந்தானையாமாறுகண்டு ... ...... ... (ககூ)

கண்டிறந்துகாயெரியின்வீழ்ந்துகடிதோடிக்
கண்டிறந்துகாமன்பொடியாக—கண்டிறந்து
கானினுகந்தாடுங்கருத்தற்குக்காட்டினன்
கானினுகந்தாடுங்கருத்து ... ... ... (உ0)

கருத்துடையவாதிகறைமிடற்றெம்மீசன்
கருத்துடையகங்காளவேடன்—கருத்துடைய
வானேற்றுனீற்றனனலாடியாமாத்தூ
ரானேற்றனேற்றனெரி ... ... ... ...... (உக)

எரியாடியேகம்பமென்னுதார்மேனி
யெரியாடியேகம்பமாகு—மெரியாடி
யீமத்திடுங்காடுதேருமிறைபணிப்ப
வீமத்திடுங்காடுதான் ... ... ... ... (உஉ)

தானயன்மாலாகிநின்றுன்றனித்துலகிற்
றனயன்மாலர்யதன்மையான்—றனக்
களைப்படுத்தானன்மறையைக்காய்புலித்தோலாடைக்
களைப்படுத்தான்றன்பாதஞ்சார் ... ... ... (உந)

சாராவார்தாமூளரோற்சங்கரன்றன்மேனிமேற்
சாராவார்கங்கையுமைநங்கை—சார்வா
யரவமதுசெஞ்சடைமேலக்கொன்றையொற்றி
யரவமதுசெஞ்சடையின்மேல் ... ... ... (உச)

மேலாயதேவர்வெருவவெழுநஞ்ச
மேலாயமின்றிவேறுண்பொழுதின்—மேலாய
மங்கையுமைவந்தடுத்திலளேவானனு
மங்கையுமைவந்தடுத்து ... ... ... ... (உரு)

அடுத்தபொன்னம்பலமேசார்வுமதனு
ளடுத்ததிருநட்டமஃதே—யடுத்ததிரு
வானைக்காவாடுவதுமேலென்புபூண்பதுவு
மானைக்காவான்றனமைவு ... ... ... ... (உசு)

அமைவும்பிறப்புமிறப்புமாமற்றுங்
கமைவும்பரமானவாதி—யமையுந்
திருவாலவாய்சென்றுசேராதமாக்கள்
திருவாலவாய்சென்றுசேர் ... ... ... ... (உஎ)

சென்றுசெருப்புக்காலாற்செல்லமலர்நீக்கிச்
சென்றுதிருமுடிவாய்நீர்வார்த்துச்—சென்றுதன்
கண்ணிடந்தன்றப்புங்கருத்தற்குக்காட்டினான்
கண்ணிடந்தன்றப்பாமைப்பார்த்து ... ... ... (உஅ)

பார்த்துப்பரியாதேபானீறுபூசாதே
பார்த்துப்பரிந்தங்கம்பூணாதே—பார்த்திட்
டுடையானஞ்சோதாதேயூணாக்கைவிட்
டுடையானஞ்சோதாதாரூண் ... ... ... ... (உகூ)

ஊணொன்றுமில்லையுறக்கில்லையுன்மாலி
னூணென்றுபேசவோர்சங்கிழந்தா—ளூணென்றும்
விட்டானேவேள்விதுரந்தானேவெள்ளநீர்
விட்டானேபுன்சடைமேல்வேறு ... ... ... (௩0)

வேறுணாப்பன்கேட்டருளும்வேதநான்காறங்கம்
வேறுணாத்தமேனிவிரிசடையான்—வேறுணாத்த
பாதத்தாய்பைங்கணரவூர்வாய்பாரூரும்
பாதத்தாயென்னுமலர் ... ... ... ... ... (௩க)

மலரணைந்துகொண்டுமகிழ்வாயுன்பாத
மலரணைந்துமானயனமாகு—மலரணைந்து
மன்சக்கரம்வேண்டவாளாவளித்தனையால்
வன்சக்கரம்பரனேவாய்த்து ... ... ... ... (௩உ)

வாய்த்தவடியார்வணங்கமலரோன்மால்
வாய்த்தவடிமுடியுங்காணார்—வாய்த்த
சலந்தரனைக்கொன்றிட்டுச்சங்கரனாரென்றோ
சலந்தரனாய்நின்றவாதாம் ... ... ... ... (௩௩)

தாமென்னநாமென்னவேறில்லைதத்துறவிற்
றாமென்னவேறாத்தனித்திருந்து—தாமென்
கழிப்பாலைசேருங்கறைமிடற்றாரொன்னே
கழிப்பாலைசேருங்கடன் ...... ... ...... ... (௩ச)

கடனாகக்கைதொழுமின்கைதொழவல்லீரேற்
கடனாகைக்காரோணமேயார்—கடனாக
மாளவுரித்தாடுவார்நம்மேலைவல்வினைநோய்
மாளவிரித்தாடுமால்வந்து ...... ... ... ... (௩ரு)

வந்தார்வளைகழல்வார்வாடித்துகில்சோர்வார்
வந்தார்முலைமெலிவார்வார்குழல்கள்—வந்தார்
சுரிதருவாரைங்கொன்றைத்தாராரைக்கண்டு
சுரிதருவாரைங்கொன்றைத்தார் ...... ...... ... (௩௬)

தாரானெனினுஞ்சடைமுடியான்சங்கரனந்
தாரான்றசமுகனைத்தோணெரித்துத்—தாராய
நாளுங்கொடுத்தந்தவானவர்கடம்முன்னே
வாளுங்கொடுத்தான்மதித்து ...... ...... ... (௩௭)

மதியாருஞ்செஞ்சடையான்வண்கொன்றைத்தாரான்
மதியாருமாலுடையபாகன்—மதியாரு
மண்ணுமலைசேராராரோடுங்கூடாகி
யண்ணுமலைசேர்வரால் ...... ...... ... (௩௮)

ஆலநீழற்கீழிருப்பதுவுமாய்வதற
மாலமமுதுசெய்வதாடுவதீ—யாலந்
துறையுடையானேயுரியுடையான்சோற்றுத்
துறையுடையான்சோராதசொல்லு ... ... ... (௩௯)

சொல்லாயமின்றித்தொலைவின்றித்தூநெறிக்கட்
சொல்லாய்ப்பெருத்தசுடரொளியாய்ச்—சொல்லாய
வீரட்டத்தானைவிரவார்புரமட்ட
வீரட்டத்தானைவினை ...... ...... ...... (௪0)

விரையாருமத்தம்விரகாகச்சூடி
விரையாரும்வெள்ளெலும்புபூண்டு—விரையாரு
நஞ்சுண்டவாதிநலங்கழல்கள்சேராதார்
நஞ்சுண்டவாதிநலம் ... ... ...... ...... (௪௧)

நலம்பாயுமாக்கநலங்கொண்டலென்றல்
நலம்பாயுமானன்குருவ—நலம்பாய்செய்
தார்த்தார்க்குமண்ணுமலையானிடந்
தார்த்தார்க்குமண்ணுமலை ... ... ... ... ... (௪௨)

மலையார்கலையோடவாரோடக்கொங்கை
மலையார்கலைபோய்மாலானாள்—மலையார்
கலையுடையான்வானின்மதியுடையான்காவாத்
தலையுடையானென்றுதொழுதாள் ...... ... (௪௩)

தாளார்கமலமலரொடுதண்மலருந்
தாளாரவேசொரிந்துதாமிருந்து—தாளார்
சிராமலையாய்சேமத்துணையேயென்றேத்துஞ்
சிராமலையார்சேமத்துளார் ... ......... ... (௪௪)

ஆர்துணையாவாங்கிருப்பதம்பலவாவஞ்சலுமை
யார்துணையாவானையுரிமூடி—யார்துணையாம்
பூவணத்தாய்பூதப்படையாளிபொங்கொளியாய்
பூவணத்தாயென்னின்புகல் ... ... ... (௪௫)

புகலூருடையாய்பொதியரவம்பூணி
புகலூர்ப்புனற்சடையெம்பொன்னே—புகலூராய்
வெண்காடாவேலைவிடமுண்டாய்வெள்ளேற்றாய்
வெண்காடாவென்பேனோநான் ... ... ...... (சசு)

நானுடையமாடேயென்ஞானச்சுடர்விளக்கே
நானுடையகுன்றமேநான்மறையாய்—நானுடைய
காடுடையாய்காலங்களானாய்கனலாடுங்
காடுடையாய்காலமானாய் ......... ... ...... (சஎ)

ஆயன்றமரராழியாவகைசெய்தா
யாயன்றமரராழியாமை—யாயன்
றிருத்தினான்செங்கண்விடையூர்வான்மேனி
திருத்தினான்சேதுக்கரை ... ... ... ... (சஅ)

கரையெனுமாதர்கருவானசேருக்
கரையெனுமாதர்கரையாங்—கரையெனுங்
கோளிலியெம்மாதிகுறிப்பரவவல்லையே
கோளிலியெம்மாதிகுறி ...... ... ... ... (சகூ)

குறியார்மணிமிடற்றுக்கோலஞ்சேர்ஞானக்
குறியாகிநின்றகுணமே—குறியாகு
மாலங்காடெய்தாவடைவேன்மேலாடரவ
மாலங்காடெய்தாவடை ...... ...... ... (ருo)

அடையும்படைமழுவுஞ்சூலமிலம்பங்கி
யடையுமிறப்பறுப்பதானூ—லடைய
மறைக்காடுசேருமனூளொன்பாற்சேரா
மறைக்காடுசேர்மக்கடாம் ... ... ... ... (ருக)

தாமேயவாறுசமையமுதற்பரமுந்
தாமேயவாறுதழைக்கின்றார்—தாமேற்
றழலுருவர்சங்கரவர்பொங்கரவம்பூண்ட
தழலுருவர்சங்கரரொன்பார் ... ...... ...... (ருஉ)

பார்மேவுகின்றபலருருவர்பண்டரங்கர்
பார்மேவுகின்றபடுதலையர்—பார்மேல்
வலஞ்சுழியைச்சேர்வர்மலரடிகள்சேர்வார்
வலஞ்சுழியைச்சேர்வாகுவார் ...... ...... (ருங)

வாரணிந்தகொங்கையுமையாண்மணவாளா
வாரணிந்தகொன்றைமலர்சூடி—வாரணிந்த
செஞ்சடையாய்சீர்கொள்சிவலோகாசேயொளியாய்
செஞ்சடையாய்செல்லநினை ...... ...... (ருச)

நினைமால்கொண்டோடிநெறியானதேடி
நினைமாலேநெஞ்சநினைய—நினைமால்கொண்
டேர்தேடியும்பராலம்பர்மாகாளாவென்
றூர்தேடியென்றுரைப்பானூர் ......... ...... (ருரு)

ஊர்வதுவுமானேறுடைதலையிலுண்பதுவு
மூர்வதுவுமெல்லுரகமூடுவர்கொ—லூர்வதுவு
மேகம்பமென்றுமிடைமருதைநேசத்தாற்
கேகம்பமாய்நின்றவேறு ...... ...... ...... ... (ருசு)

ஏறேயவாண்முதலேயேகம்பாவெம்பெருமா
னேறேறியூருமெரியாடி—யேறேய
வாதிவிடங்காகாறையண்டத்தாயம்மானே
யாதிவிடங்காவுமைநன்மாட்டு ...... ... ... (ருஎ)

மாட்டும்பொருளையுருவைவருகாலம்
வாட்டும்பொருளாய்மறையானை—வாட்டு
முருவானைச்சோதியுமைபங்காபங்கா
யுருவானசோதியுளை ... ... ... ... (ருஅ)

உளையாயிருப்பதுவுமுன்னையேயூனி
னுளையாயுயிராய்ப்பொலிந்தா—யுளையாய
வம்பொனேசோதியணியாரூர்சேர்கின்ற
வம்பொனேசோதியேயாய்ந்து ... ... ... (ருக)

ஆய்ந்துன்றன்பாதமடையவருமென்மே
லாய்ந்தென்றன்பாசமலமறுத்—தாய்ந்துன்றன்
பாலணையச்செய்தபரமாபரமேட்டி
பாலணையச்செய்தபரம் ... ... ... ... (சு0)

பரமாய்பைங்கட்சிரமேயப்பூண்ட
பரமாயபைங்கட்சிரமே—பரமாய
வாறடைந்தசெஞ்சடையாயைந்தடைந்தமேனியா
யாறடைந்தசெஞ்சடையாயன்பு ... ... ... (சுக)

அன்பேயுடையவரனேயணையாத
வன்பேயுடையவனலாடி—யன்பே
கழுமலத்துளாடுங்கரியுரிபோர்த்தானே
கழுமலத்துளாடுங்கரி ... ... ... ...... (சுஉ)

கரியார்தாஞ்சேருங்கலைமறிகைக்கொண்டே
கரியார்தாஞ்சேருங்கபாலி—கரியாகி
நின்றகழிப்பாலைசேரும்பிரானுமை
நின்றகழிப்பாலைசேர் ... ...... ... ...... (சுங)

சேரும்பிரானுமஞ்சிந்திக்கவல்லீரோ
சேரும்பிரானுமஞ்சிந்திக்கச்—சேரு
மலையான்மகளைமகிழ்ந்தாரூர்நின்றான்
மலையான்மகளைமகிழ்ந்து ... ... ... ...... (சுச)

மகிழ்ந்தம்பர்மாகாளஞ்செய்யுமகளிர்
மகிழ்ந்தம்பரமாகிநின்றார்—மகிழ்ந்தங்க
மொன்றாகிநின்றவுமைபங்கனொற்றியூ
ரொன்றாகிநின்றவுமை ... ... ... ...... (சுரு)

உமைகங்கையென்றிருவருற்றவுணர்வு
முமைகங்கையென்றிருவர்காணு—ருமைகங்கை
கார்மிடற்றம்மேனிக்கதிர்முடியான்கண்மூன்று
கார்மிடற்றம்மேனிக்கினி ... ... ... ... (௬௬)

இனியவாகாணீர்களிப்பிறவியெல்லா
மினியவாவாகாமையற்று—மினியவா
ருக்கைபலசெய்தவாமாத்தூரம்மானை
யாக்கைபலசெய்தவன்று ... ... ... (௬௭)

அன்றமரருய்யவமிர்தமவர்க்கருளி
யன்றவுணர்வீடவருள்செய்தோ—னன்றவுணர்
சேராமனின்றவடிகளடியார்க்குச்
சேராமனின்றசிவம் ...... ...... ... ... (௬௮)

சிவனந்தஞ்செல்கதிக்கோர்கண்சேர்வதாக்குஞ்
சிவனந்தஞ்செல்கதிக்கோர்கண்ணுஞ்—சிவனந்தஞ்
சேருமுருவுடையீர்செங்காட்டங்குடிமேற்
சேருமுருவுடையீர்செல் ...... ... ......... (௬௯)

செல்லுமளவுஞ்சிதையாமற்சிந்திப்பின்
செல்லுமளவுஞ்சிவனும்மைச்—செல்லுந்
திருமீச்சூரக்கேறச்செங்கணேறூருந்
திருமீச்சூரீசன்றிறம் .... ...... ...... (௭௦)

திறமென்னுஞ்சிந்தைதெரிந்தும்மைக்காணுந்
திறமென்னுஞ்சிந்தைக்குமாமே—திறமென்னுஞ்
சித்தத்தீர்செல்வத்திருக்கடவூர்சேர்கின்ற
சித்தத்தீரோசெல்லுநீர் ...... ...... (௭௧)

நீரோவெருதேறுநின்மலனாராவீரு
நீரோநெடுவானினின்றீரு—நீரோ
நெருப்பாயதோற்றத்துநீளாறும்பூண்டு
நெருப்பாயதோற்றநிலைத்து ...... ... ... (௭௨)

நிலைத்திவ்வுலகனைத்தும்நீரோயாய்நின்றீர்
நிலைத்திவ்வுலகனைத்தும்நீரோ—நிலைத்தீரக்
கானப்பேரீர்கங்கைசூடினீர்கங்காளீர்
கானப்பேரீர்கங்கையீர் ......... ... ......... (௭௩)

ஈரமுடையவிளமதியஞ்சூடினீ
ரீரமுடையசடையினீ—ரீர
வருங்காலமாயினீரிவ்வுலகமெல்லாம்
வருங்காலமாயினீர்வாழ்வு ......... ......... ...(௭௪)

வாழ்வார்மலரணைவார்வந்தவருநாகம்
வாழ்வார்மலரணைவர்வண்கங்கை—வாழ்வாய
தீயாடவானுள்வான்வான்கழல்கள்சேராதார்
தீயாடவானுளுமாறு ...... ...... ... ... (௭௫)

மாருதவானையின்றேல்போர்த்துவளர்சடைமேன்
மாருதநீறுடையமாகாளர்—மாரு
விடுங்கையார்சேருமெழிலவாய்முன்னே
விடுங்கையார்சேர்வாகவீ ...... ...... ...... (எசு)

ஈயும்பொருளேயெமக்குச்சிவலோக
மீயும்பொருளேயிடுகொட்டி—னீயும்
படநாகம்பூணும்பரலோகிரென்னீர்
படநாகம்பூணும்படி ...... ...... .......... ... (எஎ)

படியேறும்பார்த்துப்பரத்தோடுங்கூட்டிப்
படியேறும்பார்த்துப்பரனெப்—படியேனைப்
பாருடையாய்பைங்கட்புலியதளாய்பரனீற்றாய்
பாருடையாயானுன்பரம் ...... ...... ... (எஅ)

பரமாயவிட்டுநின்பாதம்பணிந்தேன்
பரமாயவாதிப்பரனே—பரமாய
நீதியேநின்மலனேநேரார்புரமூன்று
நீதியேசெய்தாய்நினே ...... ... ......... (எகு)

நினையடைந்தேன்சித்தநிலையாகும்வண்ண
நினையடைந்தேன்சித்தநிமலா—நினையடைந்தேன்
கண்டத்தாய்காளத்தியானேகனலாருங்
கண்டத்தாய்காவாலிகா ...... ...... ...... (அ0)

காவார்பொழிற்கயிலையாதிகருவேயெங்
காவாய்ப்பொலிந்தகடுவெளியே—காவாய
வேறுடையாயென்னையிடைமருதிலேயென்றும்
வேறுடையாய்நீயேகரி ...... ......... ... (அக)

கரியானுநான்முகனுமாய்நின்றகண்ணன்
கரியாருங்கூற்றங்கனியே—கரியாருங்
காடுடையாய்காலங்களானாய்கனலாடுங்
காடுடையாய்காலமானாய் ...... ........ ... (அஉ)

ஆனையனையவடலேறேயாரூர்க்கோ
னானையனைவமுதமேயானா—யானாய்
கவனொலும்பொடேந்திகதனுகம்பூணி
கவனொலும்புதார்கைவளை ...... ......... ... (அங)

வளைகொண்டாயென்னைமடவார்கண்முன்னே
வளைகொண்டாய்மாசற்றசோதி—வளைகொண்டாய்
மாற்றார்கதுவமதிளாரூர்சேர்கின்ற
மாற்றாரூர்கின்றமயல் ...... ......... ... (அச)

மயலானதிருமருந்தாகுமற்று
மயலானாராரூர்மயரார்—மயலான
கண்ணியர்தம்பாகாகனியேகடிக்கொன்றைக்
கண்ணியலான்பாதமேகல் ......... ... ... (அரு)

கலைமான்கையேனப்பூண்காண்கயிலைமானின்
கலைமான்கறைகாண்கவாலி—கலைமானே
யாடுவதும்பாடுவதுங்காலனைப்பொன்னம்பலத்துள்
ளாடுவதுமாடானரன் ...... ...... ...... (அசு)

அரனேயணியாரூர்மூலட்டத்தானே
யரனேயடைந்தார்தம்பாவ—மரனே
யயனார்தமங்கமடையாகக்கொண்டா
யயனாகமாகவடை ...... ...... ...... ...... (அஎ)

அடையுந்திசையீசன்றிண்டோளாகாச
மடையுந்திருமேனியண்ட—மடையுந்
திருமுடிகால்பாதாளமாடைகடலங்கி
திருமுடிநீர்கண்கள்சுடர்மூன்று ...... ...... ... (அஅ)

மூன்றரணமெய்தானேமூலத்தனிச்சுடரோ
மூன்றரணமாய்நின்றமுக்கணனே—மூன்றரண
மாய்நின்றசோதியணியாரூர்சேர்கின்ற
வாய்நின்றசோதியறம் ... ... ... ...... (அகூ)

அறமாய்வரோனுமடுகாடுசேர
வறமானாரங்கமணிவ—ரறமாய
வல்வினைகள்வாராவெனுமருகலானென்னை
வல்வினைகள்வாராதவாறு ...... ...... ...... (கூ0)

ஆறுடையர்நஞ்சுடையராடுமரவுடைய
ராறுடையர்காலமமைவுடைய—ராறுடைய
சித்தத்தீர்செல்வத்திருக்கயிலைசேர்கின்ற
சித்தத்தீரொல்லார்க்குஞ்சேர்வு ... ... ... ... (கூக)

சேர்வுமுடையர்செழுங்கொன்றைதாரார்நஞ்
சேர்வுமுடையரரவுடையர்—சேருந்
திருச்சாய்க்காட்டாடுவரோற்செய்தக்கவென்றுந்
திருச்சாக்காட்டேநின்னுருவு ... ...... ......... (கூஉ)

உருவுபலகொண்டொருவராய்நின்றா
ருருவுபலவாமொருவ—ருருவு
பலவல்லவொன்றல்லபைஞ்ஞீலிமேயார்
பலவல்லவொன்றாப்பகர் ...... ...... ...... ...... (கூங)

பகரப்பரியானைமேலூராதானைப்
பகரப்பரிசடைமேல்வைத்த—பகரப்
பரியானைச்சேருலகம்பல்லுயிர்களெல்லாம்
பரியானைச்சேருலகம்பண் ... ... ... ... (கூச)

பண்ணாகப்பாடிப்பலிகொண்டாய்பாரேழும்
பண்ணாகச்செய்தபரஞ்சோதி—பண்ணா
வெருதேறியூர்வாயெழில்வஞ்சியெங்க
ளொருதேறியூர்வாயிடம் ...... ... ... (கூரு)

நொச்சியாயினுங்கரந்தையாயினும்
பச்சிலையிட்டுப்பரவுந்தொண்டர்
கருவிடைப்புகாமற்காத்தருள்புரியுந்
திருவிடைமருததிரிபுராந்தக
மலர்தலையுலகத்துப்பலபலமாக்கண்
மக்களைமனைவியையொக்கலையொரீஇ
மனையும்பிறவுந்துறந்துநினைவருங்
காடுமலையும்புக்குக்கோடையிற்
கைம்மேனிமிர்த்துக்காலொன்றுமுடக்கி
யைவகைநெருப்பினடுவத்துநின்று
மாரிநாளிலுமவார்பனிநாளிலு
நீரிடைமூழ்கிநெடிதுகிடந்துஞ்
சடையைப்புனைந்துந்தலையைப்பறித்து
முடையைத்துறந்துமுண்ணாதுழன்றுங்
காயுங்கிழங்குங்காற்றுதிர்சருகும்
வாயுவுநீரும்வந்தனவருந்தியுங்
களரிலுங்கல்லிலுங்கண்படைகொண்டுந்
தளர்வுறுமியாக்கையைத்தளர்வித்தாங்கவ
ரம்மைமுத்தியடைவதற்காகத்
தம்மைத்தாமேசாலவுமொறுப்ப
ரீங்கிவைசெய்யாதியாங்களெல்லாம்
பழுதின்றுயர்ந்தவெழுநிலைமாடத்துஞ்
செந்தாதுதிர்ந்தநந்தாவனத்துந்
தென்றலியங்குமுன்றிலகத்துந்
தண்டாச்சித்திரமண்டபமருங்கிலும்
பூவிரிதரங்கவாவிக்கரையிலு
மயிற்பெடையாலக்குயிற்றியகுன்றிலும்
வேண்டுழிவேண்டுழியாண்டாண்டிட்ட
மருப்பினியன்றவாளரிசுமந்த
விருப்புறுகட்டின்மீமிசைப்படுத்த
வைவகையமளியணைமேற்பொங்கத்
தண்மலர்கமழும்வெண்மடிவிரித்துப்
பட்டினுட்பெய்தபதநுண்பஞ்சி
னெட்டணையருகாக்கொட்டைகள்பரப்பிப்
பாயன்மீமிசைப்பரிபுரமிழற்றச்
சாயலன்னத்தின்றளர்நடைபயிற்றிப்
பொற்றேரணத்தைச்சுற்றியதுகிலென
வம்மென்குறங்கிணைம்மென்கலிங்கங்
கண்ணுமனமுங்கவற்றிப்பண்வர
விரங்குமணிமேகலைமருங்கிற்கிடப்ப
வாடரவல்குலரும்பெறனுசுப்பு
வாடவீங்கியவனமுலைகதிர்ப்ப
வணியியல்கமுகையலங்கரித்ததுபோன்
மணியியலாரங்கதிர்விரித்தொளிர்தர
மணிவளைதாங்குமணிகெழுமென்றோள்
வரித்தசாந்தின்மிசைவிரித்துமீதிட்ட
வுத்தரியப்பட்டொருபாலொளிதர

வள்ளைவாட்டியவொள்ளிருகாதொடு
பவளத்தருகாத்தரளநிரைத்தாங்
கொழுகிநீண்டகுமிழொன்றுபதித்துக்
காலன்வேலுங்காமபாணமு
மாலகாலமுமனைத்துமிட்டமைத்த
விரண்டுநாட்டமும்புரண்டுகடைமிளிர்தர
மதியெனமாசறுவதனம்விளங்கப்
புதுவிரையலங்கல்குழன்மிசைப்பொலியு
மஞ்சொன்மடந்தையராகந்தோய்ந்துஞ்
சின்னம்பரப்பியபொன்னின்கலத்து
மறுசுவையடிசில்வறிதிருந்தருந்தா
தாடினர்க்கென்றும்பாடினர்க்கென்றும்
வாடினர்க்கென்றும்வரையாதுகொடுத்தும்
பூசுவனபூசியும்புனைவனபுனைந்துந்
தூசினல்லனதொடையிற்சேர்த்தியு
மைந்துபுலன்களுமாரவார்ந்து
மைந்தருமொக்கலுமனமகிழ்ந்தோங்கி
யிவ்வகையிருந்தோமாயினுமவ்வகை
மந்திரவெழுத்தைந்துமாயிடைமறவாது
சிந்தைநின்வழிசெலுத்தலினந்த
முத்தியுமிழந்திலமுதல்வவத்திற
நின்னதுபெருமையன்றேவென்னெனின்
வல்லானொருவன்கைம்முயன்றெறியினு
மாட்டாவொருவன்வாளாவெறியினு
நிலத்தின்வழாஅக்கல்லேபோ
னலத்தின்வழார்நின்னுரைஞவின்றோரே. ... ... ... (௧௯)

வெண்பா.

நாமநவிற்ருய்மனனேநாரியர்கடோடோய்ந்து
காமநவிற்றிக்கழிந்தொழிய—லாமோ
பொருதவனத்தானையுரிபோர்த்தருளுமெங்கண்
மருதவனத்தானைவளைந்து• ...... ...... ...... ... (௨0)

கலித்துறை.

வளையார்பசியின்வருந்தார்பிணியின்மதனனம்புக்
கிளையார்தனங்கண்டிரங்கிநில்லாரிப்பிறப்பினில்வந்
தளையார்நரகினுக்கென்கடவார்பொன்னலர்ந்தகொன்றைத்
தளையானிடைமருதன்னடியாரடிசார்ந்தவரே ...... ...... (௨௧)

நேரிசையாசிரியப்பா.

அடிசார்ந்தவர்க்குமுடியாவின்ப
நிறையக்கொடுப்பினுங்குறையாச்செலவ
மூலமுநடுவுமுடிவுமிகந்து
காலமூன்றுங்கடந்தகடவு
ளுளக்கணுக்கல்லாதூன்கணுக்கொளித்துத்
துளக்கறநிமிர்ந்தசோதித்தனிச்சுடர்

யெறுப்புத்துளையினிருசெவிக்கெட்டா
துறுப்பினின்றெழுதருமுள்ளத்தோசை
வைத்தநாவின்வழிமறுத்தகத்தே
தித்தித்தூறுந்தெய்வத்தேற
றுண்டத்துளையிற்பண்டைவழியன்றி
யறிவினாறுநறியநாற்ற
மேனையதன்மையுமெய்தாதெவற்றையுந்
தானேயாகிநின்றதத்துவ
தோற்றுவதெல்லாந்தன்னிடைத்தோற்றித்
தோற்றம்பிறிதிற்றோற்றாச்சுடர்முளை
விரிசடைமீமிசைவெண்மதிகிடப்பினு
மிருள்விரிகண்டத்தேகநாயக
சுருதியுமிருவருந்தொடர்ந்துநின்றலமர
மருதிடங்கொண்டமருதமாணிக்க
வுமையாள்கொழுநவொருமூன்றாகிய
விமையாநாட்டத்தென்றனிநாயக
வடியேனுறுகுறைமுனியாதுகேண்மதி
நின்னடிபணியாக்கன்மனக்கயவரொடு
நெடுநாட்பழகியகொடுவினையீர்ப்பக்
கருப்பாசயமெனுமிருட்சிறையறையிற்
குடரென்சங்கிலிபூண்டுதொடர்ப்பட்டுக்
கூட்டுச்சிறைப்புழுவினீட்டுமலத்தழுந்தி
யுடனேவருந்திநெடுநாட்கிடந்து
பல்பிணிப்பெயர்பெற்றல்லற்படுத்துந்
தண்டனாளர்மிண்டிவந்தலைப்ப
வுதரநெருப்பிற்பதைபதைபதைத்தும்
வாதமத்திகையின்மோதமொத்துண்டுங்
கிடத்தனிற்றனடத்தல்செல்லா
திடங்குறைவாயிலின்முடங்கியிருந்துழிப்
பாவப்பகுதியிலிட்டுக்காவற்
கொடியோரைவரையேவிநெடிய
வாசைத்தளையிலென்னையுமுடலையும்
பாசப்படுத்திப்பையெனவிட்டபின்
யானும்போந்துதீதினுக்குழன்றும்
பெரியோர்ப்பிழைத்தும்பிறர்பொருள்வெளவியும்
பசியாலுழன்றும்பல்லுயிர்செகுத்தும்
வேற்றோர்மனைவியர்தோற்றம்புகழ்ந்தும்
பொய்பலகூறியும்புல்லினம்புல்லியு
மைவருங்கடுப்பவவாவதுகூட்டி
யீண்டினகொண்டுமீண்டுவந்துழி
யிட்டுழியிடாதுபட்டுழிப்படாஅ
திந்நாளிடுக்கணெய்திப்பன்னாள்
வாடுபுகிடப்பேன்வீடுநெறிகாணே
ணின்னையடைந்தவடியாரடியார்க்
கென்னையுமடிமையாகக்கொண்டே
யிட்டபச்சிலைகொண்டொட்டியறிவித்
திச்சிறைபிழைப்பித்தினிச்சிறைபுகாமற்

காத்தருள்செய்யவேண்டுந்
நித்தி[illegible]டையோனே ... ... ... (உஉ)

வெண்பா.

சடைமேலொருத்திசமைந்திருப்பமேனிப்
[illegible]ருத்திபொலிய—விடைபுக்கு
சங்கேகலேயேமருதற்குத்தான்கொடுப்ப
தெங்கேயிருக்கவிவள். ......... ......... ......... ... (உ௩)

கலித்துறை.

இருக்குமருதினுக்குள்ளிமையோர்களுநான்மறையு
நெருக்குநெருக்கத்துநீளகத்துச்சென்றுமீளவொட்டாத்
திருக்குமறுத்தைவர்தீமையுந்தீர்த்துச்செவ்வேமனத்தை
யொருக்குமொருக்கத்தினுள்ளேமுளைக்கின்றவொண்சுடரே. ... (உ௪)

நேரிசையாசிரியப்பா.

சுடர்விடுசூலமேந்தினையென்றும்
விடையுகந்தேறியவிமலவென்று
முண்ணாஞ்சமுண்டனையென்றுங்
கண்ணாற்காமனைக்காய்ந்தனையென்றுந்
திரிபுரமெரித்தசேவகவென்றுங்
கரியுரிபோர்த்தகடவுளென்று
முரகம்பூண்டவுரவோயென்றுஞ்
சிரகஞ்செந்தழலேந்தினையென்றும்
வலந்தருகாலனைவதைத்தனையென்றுஞ்
சலந்தரனுடலந்தடிந்தனையென்று
மயன்சிரமொருநாளரிந்தனையென்றும்
வியந்தவாளரக்கனைமிதித்தனையென்றுந்
தக்கன்வேள்விதகர்த்தனையென்று
முக்கிரப்புலியுரியுடுத்தனையென்று
மேனமுமன்னமுமெட்டாதலமர
வானங்கீழ்ப்படவளர்ந்தனையென்றுஞ்
செழுநீர்ஞாலஞ்செகுத்துயிருண்ணு
மழல்விழிக்குறளையமுக்கினையென்று
மினையனவினையனவெண்ணில்கோடி
நினைவருங்கீர்த்திநின்வயிற்புகழ்த
றுளக்குறுசிந்தையேன்சொல்லளவாதலி
னளப்பரும்பெருமைநின்னளவலதாயினு
மென்றன்வாயிற்புன்மொழிகொண்டு
நின்னைநோக்குவனுதலினென்னை
யிடுக்கண்களையாவல்லற்படுத்தா
தெழுநிலைமாடத்துச்செழுமுகிலுறங்க
வடித்துத்தட்டியெழுப்புவபோல
நுண்டுகிற்பதாகைகொண்டுகொண்டுகைப்பத்
துயிலினீங்கிப்பயிலும்வீதித்
திருமருதமர்ந்ததெய்வச்செழுஞ்சுட
ரருள்சுரந்தளிக்குமற்புதக்கூத்த

கல்லானெறிந்தபொல்லாப்புத்த
னின்னினைந்தெறிந்தவதனு
லன்னவன்றனக்குமருள்பிழைத்தின்றே. ... ... (உரு)

வெண்பா.

இன்றிருந்துநாளையிறக்குந்தொழிலுடைய
புன்றலையமாக்கள்புகழ்வரோ—வென்றிமழு
வாளுடையான்றெய்வமருதுடையானுயேனை
யாளுடையான்செம்பொனடி ...... ...... ...... ... (உசு)

கலித்துறை.

அடியாயிரந்தொழிலாயிரவாயிரமாயிரம்பேர்
முடியாயிரங்கண்கண்மூவாயிரமுற்றுநீறணிந்த
தொடியாயிரங்கொண்டதோளிரண்டாயிரமென்றுநெஞ்சே
படியாயிராப்பகற்றென்மருதாளியைப்பற்றிக்கொண்டே. ... ... (உஎ)

நேரிசையாசிரியப்பா.

கொண்டலினிருண்டகண்டத்தெண்டோட்
செவ்வானுருவிற்பையரவார்த்துச்
சிறுபிறைகிடந்தநெறிதருபுன்சடை
மூவாமுதல்வமுக்கட்செல்வ
தேவதேவதிருவிடைமருத
மாசறுசிறப்பின்வானவராடும்
பூசத்தீர்த்தம்புரக்கும்பொன்னி
யயிராவணத்துறையாடுமெப்ப
கைலாயவாணகௌரிநாயக
நின்னைவணங்கிப்பொன்னடிபுகழ்ந்து
பெரும்பதம்பிழையாவரம்பலபெற்றோ
ரிமையாநெடுங்கணுமையாணங்கையு
மழைக்கட்கடத்துப்புழைக்கைப்பிள்ளையு
மமரர்த்தாங்குங்குமரவேளுஞ்
சுரிசங்கேந்தியதிருநெடுமாலும்
வரன்முறைபடைத்தநான்முகத்தொருவனுந்
தாருகற்செற்றவீரக்கன்னியும்
நாவின்கிழத்தியும்பூவின்மடந்தையும்
பீடுயர்தோற்றத்துக்கோடியுருத்திரரு
மானுப்பெருந்திறல்வானோர்தலைவனுஞ்
செயிர்தீர்நாற்கோட்டயிராவதமும்
வாம்பரியருக்கர்தாம்பன்னிருவருஞ்
சந்திரனொருவனுஞ்செந்தீக்கடவுளு
நிருதியுஞ்சமனுஞ்சுருதிகணன்கும்
வருணனும்வாயுவுமிருநிதிக்கிழவனு
மெட்டுநாகமுமட்டவசுக்களு
மூன்றுகோடியான்றமுனிவரும்
வசிட்டனுங்கபிலனுமகத்தியன்மூனுந்
தும்புருநாரதனென்றிருதிறத்தரும்
வித்தகப்பாடன்முத்திறத்தடியருந்

திருந்தியவன்பிற்பெருந்துறைப்பிள்ளையு
மத்தகுசெல்வத்தவமதித்தருளிய
சித்தமார்சிவவாக்கியதேவரும்
வெள்ளைநீறுமெய்யிற்கண்டு
கள்ளன்கையிற்கட்டவிழ்ப்பித்து
மோடும்பன்னரியூளைகேட்டரனைப்
பாடினவென்றுபடாம்பலவளித்துங்
குவளைப்புனலிற்றவளையரற்ற
வீசன்றன்னையேத்தினவென்று
காசும்பொன்னுங்கலந்துதூவியும்
வழிபடுமொருவன்மஞ்சனத்தியற்றிய
செழுவிதையெள்ளைத்தின்னக்கண்டு
பிடித்தலுமவனிப்பிறப்புக்கென்ன
விடித்துக்கொண்டவனெச்சிலைநுகர்ந்து
மருதவட்டத்தொருதனிக்கிடந்த
தலையைக்கண்டுதலையுறவணங்கி
யும்மைப்போலவெம்மித்தலையுங்
கிடத்தல்வேண்டுமென்றடுத்தடுத்திரந்துங்
கோயின்முற்றத்துமீமிசைக்கிடப்ப
வாய்த்தனவென்றுநாய்க்கட்டமெடுத்துங்
காம்புகுத்துதிர்ந்தகனியுருக்கண்டு
வேம்புகட்கெல்லாம்விதானமமைத்தும்
விரும்பினகொடுக்கைபரம்பரற்கென்று
புரிகுழற்றேவியைப்பரிவுடன்கொடுத்த
பெரியவன்பின்வரகுணதேவரு
மினையதன்மையரொண்ணிறந்தோரோ
யனையோர்நிற்கயானுமொருவன்
பத்தியென்பதோர்பாடுமின்றிச்
சுத்தனுயினுந்தோன்ருக்கடையே
னின்னை
யிறைஞ்சிலனுயினுமேத்திலனுயினும்
வருந்திலனுயினும்வாழ்த்திலனுயினுங்
கருதியிருப்பன்கண்டாய்பெரும
நின்னுலகனைத்துநன்மைதீமை
யானவைநின்செயலாதலி
னுனேயமையுநலமில்வழிக்கே. ...... ...... (உ௮)

## வெண்பா.

வழிபிழைத்துநாமெல்லாம்வந்தவாசெய்து
பழிபிழைத்தபாவங்களெல்லாம்—பொழில்சூழ்
மருதிடத்தானென்றொருகால்வாய்கூப்பவேண்டா
கருதிடத்தாநில்லாகரந்து. ...... ...... ...... ... (உ௯)

## கலித்துறை.

கரத்தினின்மாலவன்கண்கொண்டுநின்கழல்போற்றநல்ல
வரத்தினையீயுமருதவப்பாமதியொன்றுமில்லேன்

சிரத்திலுமாயென்றன்சிந்தையுளாகிவெண்காடனென்னுந்
தரத்திலுமாயதுநின்னடியாந்தெய்வத்தாமரையே. ...... ... (௩௦)

திருச்சிற்றம்பலம்,

திருவிடைமருதூர்மும்மணிக்கோவைமுற்றிற்று,



திருச்சிற்றம்பலம்.

பட்டணத்துப்பிள்ளையார்அருளிச்செய்த

# திருவேகம்பமுடையார் திருவந்தாதி.

கலித்துறை.

மெய்த்தொண்டர்செல்லுநெறியறியேன்மிகநற்பணிசெய்
கைத்தொண்டர்தம்மிலுநற்றொண்டுவந்திலனுண்பதற்கே
பொய்த்தொண்டுபேசிப்புறம்புறமேயுன்னைப்போற்றுகின்ற
வித்தொண்டனென்பணிகொள்ளுதியோகச்சியேகம்பனே. (௧)

ஏகம்பனேயென்னையாள்பவனேயிமையோர்க்கிரங்கிப்
போகம்பன்னாளுங்கொடுக்கின்றநாயகபொங்குமைவாய்
நாகம்பொன்னாரமெனப்பொலிவுற்றநன்னீறணியு
மாகம்பொன்மாமலையொப்பவனேயென்பனுதரித்தே. ......... (௨)

தரித்தேன்மனத்துன்றிகழ்தருநாமந்தடம்பொழில்வாய்
வரித்தேன்முரல்கச்சியேகம்பனேயென்றன்வல்வினையை
யரித்தேனுனைப்பணியாதவரேழைமைகண்டவரைச்
சிரித்தேனுனக்கடியாரடிபூணத்தெளிந்தனனே. ......... (௩)

தெளிதருகின்றதுசென்றென்மனநின்றிருவடிவ
மளிதருநின்னருட்கையமினியிலையந்திச்செக்கர்
ஒளிதருமேனியெம்மேகம்பனேயென்றுகந்தவர்தாள்
தளிதருதூளியென்றன்றலைமேல்வைத்ததன்மைபெற்றே. ... ... ... (௪)

பெற்றுகந்தேனென்றுமர்ச்சனைசெய்யப்பெருகுநின்சீர்
கற்றுகந்தேனென்கருத்தினிதாக்கச்சியேகம்பத்தின்
பற்றுகந்தேறுமுகந்தவனேபடநாககச்சின்
சுற்றுகந்தேர்விடைமேல்வருவாய்நின்றுணையடியே. ...... ... (௫)

அடிநின்றசூழலகோசரமாலுக்கயற்கலரின்
முடிநின்றசூழ்முடிகாண்பரிதாயிற்றுக்கார்முகிலி
னிடிநின்றசூழ்குரலேறுடையேகம்பயாமெங்ஙனே
வடிநின்றசூலப்படையுடையாயைவணங்குவதே. ...... (௬)

வணக்கந்தலைநின்றிருவடிக்கேசெய்யுமையல்கொண்டோ
ரிணக்கன்றிமற்றோரிணக்கறிவோமல்லம்வல்லரவின்
குணக்குன்றவில்லிகுளிர்கச்சியேகம்பம்பாடினல்லாற்
கணக்கன்றுமற்றொருதேவரைப்பாடுங்கவிநலமே, ...... (௭)

நலந்தரநாஞென்றுசொல்லுவன்கேண்மினல்லீர்களன்பு
கலந்தரனார்கச்சியேகம்பங்கண்டுகனற்றிகிரி
சலந்தரனாகமொழிக்கவைத்தாய்தக்கன்வேள்வியெல்லா
நிரந்தரமாகச்செய்யாயென்றுபூசித்துநின்மின்களே. ......... (அ)

மின்களென்றார்சடைகொண்டலென்றார்கண்டமேனிவண்ணம்
பொன்களென்றார்வெளிப்பாடுதம்பொன்னடிபூண்டுகொண்ட
வென்களென்றாலும்பிரிந்தறியார்கச்சியேகம்பத்தான்
றன்களென்றாருலகெல்லாநிலைபெற்றதன்மைகளே. ...... (கூ)

தன்மையிற்குன்றாத்தவத்தோரிமையவர்தாம்வணங்கும்
வன்மையிற்குன்றாமதிற்கச்சியேகம்பர்வண்கயிலைப்
பொன்மயிற்சாயலுஞ்சேயரிக்கண்ணும்புரிகுழலும்
மென்மையிற்சாயுமருங்குலுங்காதல்விளைத்தனவே. ............ (க0)

தனமிட்டுமைதழுவத்தழும்புற்றவர்தம்மடியார்
மனம்விட்டகலாமதிற்கச்சியேகம்பர்வான்கயிலைச்
சினம்விட்டகலாக்களிறுவினாவியோர்சேயனையார்
புனம்விட்டகலார்பகலாம்பொழுதும்பூங்கொடியே. ...... (கக)

பூங்கொத்திருந்தழையார்பொழிற்கச்சியேகம்பர்பொற்பார்
கோங்கத்திருந்தகுடுமிக்கயிலையெம்பொன்னொருத்தி
பாங்கொத்திருந்தனையாரணங்கேபடர்கல்லருவி
யாங்கத்திருந்திழையாடிவந்தாற்கண்டடிவருத்தே. ...... ...... (கஉ)

வருத்தந்தருமெய்யுங்கையிற்றழையும்வன்மாவினவுங்
கருத்தந்தரிக்குநடக்கவின்றையகழனிணையத்
திருத்தந்தருளுந்திகழ்கச்சியேகம்பர்சீர்க்கயிலைத்
* துருத்தந்திருப்பதன்றிப்புனங்காக்குந்தொழிலெமக்கே. ...... (கங)

எம்மையுமெம்மைப்பணிகொள்ளுங்கம்பரொழிற்கயிலை
யும்மையுமானிடமிப்புனத்தேவிட்டுவந்தமைந்தர்
தம்மையுமானையுஞ்சிந்தையுநோக்கங்கவர்வவென்றே
வம்மையுமம்மலர்க்கண்ணும்பெரியீரருளுமினே. ...... (கச)

அருளைத்தருகம்பரம்பொற்கயிலையுளெம்மையரம்
பிருளைக்கரிமறிக்கும்மிவரையருறுத்தியெய்ய
வெருளக்கலைகணைதன்னொடும்போயினவில்லிமைக்கு
மருளைத்தருசொல்லியெங்கோவிலையுண்டிவ்வையகத்தே. ......... (கரு)

வையார்மழுப்படையேகம்பரீங்கோய்மலைப்புனத்து
ஐயார்வருகலையேனங்கரிதொடர்வேட்டையெல்லாம்
பொய்யானவையர்மனத்தவெம்பூங்கொடிகொங்கைபொருப்
பையாரரவிடையாயிற்றுவந்துபரிணமித்தே. ...... (கசு)

பருமுத்துதிர்த்திடுஞ்சீர்மத்தயானைநுதல்பகுந்திட்
டுருமொத்ததிண்குரற்சீயந்திரிநெறியோங்குவைவாய்ப்
பொருமுத்தலைவேற்படைக்கம்பர்பூங்கயிலைப்புனத்துட்
டருமுத்தனநகைதன்னசையால்வெற்பசார்வரிதே. ............ (கஎ)

---

* துரு - ஈறுகுறைந்தமுதனிலைத்தொழிற்பெயர்.

அரிதன்றிருக்கண்ணிடநிரம்பாயிரம்போதணிய
வரிதன்றிருவடிக்கர்ச்சித்தகண்ணுக்கருளுகம்ப
ரரிதன்றிருக்கங்குலியாலழிந்தகயிலையில்லின்
எளிதென்றிருப்பதெம்பால்வெற்பவெம்மையர்க்கஞ்சுதுமே. ...... (கஅ)

அஞ்சரத்தான்பொடியாய்விழத்தீவிழித்தன்புசெய்வோர்
நெஞ்சரத்தாழ்வைத்தோர்கச்சியேகம்பர்நீள்கயிலைக்
குஞ்சரத்தாழ்வரைவிழநக்கொம்புய்யக்கும்பமூழ்த்தும்
வெஞ்சரத்தாரனையோவல்லவோவிவ்வியன்முரசே. ...... (க௯)

செய்தந்தகைம்மையுமைகணவன்றிருவேகம்பத்தான்
முய்தற்றையாயுயிர்காப்போன்கயிலைத்தயக்கிருள்வாய்
வெய்தற்றதேனிசைமூசலொழிம்பினைவேங்கைதன்னைப்
பாய்தற்றபூசலுண்டாக்கொண்டதோசைபகர்வந்தே ... ...... (உ0)

வந்தும்மணம்பெறிற்பொன்னனையீர்மன்னுமேகம்பர்த
முந்துமருவிக்கயிலைமலையுயர்தேனிழிச்சித்
தந்தமலர்கொய்துந்தண்டினைமேயுங்கிளிகடிந்துஞ்
சிந்தும்புகர்மலைக்கச்சமிச்சாரற்றிரிதவனே ... ...... (உக)

திரியப்புரமெய்தவேகம்பனார்திகழுங்கயிலைக்
கிரியக்குறவர்பருவத்தினைநாளம்விளையோம்
விரியச்சுருண்முதலாறுமடைத்தோம்விளைவிளைந்து
பிரியக்கதிர்முத்தினீர்பெற்றதென்னக்குப்பேசுமினே ......... (உஉ)

பேசகயாவருமைக்கணியாளொன்றுபித்தரொக்கும்
பூசனையார்திருநீற்றெழில்கம்பர்பொற்கயிலைத்
தேசனையார்சிலைவெற்பன்பிரியும்பரிசலரக்
கூசனையாதுமில்லாக்குலைவேங்கைப்பெயர்நமக்கே ...... (உ௩)

பெயராநலத்தெழில்கம்பனார்பிறைதோய்கயிலைப்
பெயராதிருக்கப்பெறுகிளிகாள்புனமேபிரிவின்
றுயரால்வருந்திமனமுயிர்க்கோடித்தொழுதுசென்ற
நயராதுறையும்வெற்பற்கடியற்றும்விடைதமினே ......... (உ௪)

தம்மைப்பிறவிக்கடல்கடப்பிப்பவர்தாம்வணங்கு
மும்மைத்திருக்கண்முகத்தெழில்கம்பர்மொய்கயிலை
யம்மைக்கருங்கண்ணிதன்னொடின்பந்தருந்தண்புனமே
யெம்மைக்கவலைசெயச்சொல்லியோவல்லியெய்தியதே ... ...(உ௫)

இயங்குந்திரிபுரமெய்தவேகம்பமொழிற்கயிலைத்
தயங்குமலர்ப்பொழில்காடையலாடருவித்தடங்கா
முயங்குமணியறைசாண்மொழியீரொழியாதுநெஞ்ச
மயங்கும்பரிசுபொன்னார்சென்றகுழல்வருத்தெமக்கே ... ...(உ௬)

வருப்பாரிவர்போன்மணத்துக்குநாண்மணந்தன்னொடின்ப
மிருப்பார்களாருயிரொன்றாமிருவரைவிள்ளக்கள்வாய்
நெருப்பான்மலர்கொண்டுநின்றார்இடக்கவிலாவுகம்பர்
தொருப்பான்மணிசிந்தருவிக்கயிலையிச்சூழ்புனத்தே...... ... (உ௭

புனங்குழையாதென்றுமென்றினைகொய்தரும்போகலுற்ற
கனங்குழையாடற்பிரியநமக்குறுங்கையறவால்
மனங்குழையாவருங்கண்களிபண்பலபாடுந்தொண்ட
ரினங்குழையாத்தொழுமேகம்பரிக்கயிலாயத்துள்ளே ... ... (உஅ)

உள்ளம்பெரியரல்லாச்சிறுமானிடருற்றசெல்வங்
கள்ளம்பெரியசிறுமனத்தார்க்கன்றிக்கங்கையென்னும்
வெள்ளம்பெரியசடைத்திருவேகம்பர்விண்ணரணந்
தள்ளம்பெரிகொண்டமைத்தாரடியவர்சார்வதன்றே ...... ... (உகூ)

அன்றும்பகையடர்க்கும்பரிமாவுமதவருவிக்
குன்றும்பதாதியுந்தேருங்குலவிக்குடைநிழற்கீழ்
நின்றும்பொலியினுங்கம்பர்நன்னீறுநுதற்கிலரேல்
என்றுமரசுமுரசும்பொலியாதிருநிலத்தே ... ... ... (ஙo)

நிலத்திமையோரிற்றலையாப்பிறந்துமறையொடங்கம்
வலத்திமைப்போதும்பிரியாரெரிவளர்த்தாலும்வெற்பன்
குலத்துமையோர்பங்கர்கச்சியுளேகம்பங்கூடித்தொழு
நலத்தமையாதவர்வேட்டுவர்தம்மினடுப்படையே... ...... (ஙக)

படையாலுயிர்கொன்றுதின்றுபசுக்களைப்போலச்செல்லு
நடையாலறிவின்றிநாண்சிறிதின்றிநகுங்குலத்திற்
கடையாப்பிறக்கினுங்கச்சியுளேகம்பத்தெங்களையா
ளுடையான்கழற்கன்பரேலவர்யாவர்க்குமுத்தமரே ... ... (ஙஉ)

உத்துங்கயானையுரியார்விரலாலரக்கன்சென்னி
பத்துங்கையானவிருபதுஞ்சோர்தரவைத்திலய
மொத்துங்கையாலவன்பாடக்கயிலைகைவாளொடுநா
ளொத்துங்கையானென்றுகந்தளித்தார்கச்சியேகம்பரே ... ......... (ஙங)

அம்பரங்காலனனீர்நிலந்திங்களருக்கனணு
வம்பரங்கொள்வதோர்வேழத்துரியவன்றன்னுருவா
மெம்பரன்கச்சியுளேகம்பத்தானிடையாதடைவா
னம்பரன்றன்னடியாரறிவார்க்குநறுந்துணையே ...... ...... (ஙச)

துணைத்தாமரையடியும்பவளத்திரணன்குறங்கும்
பணைத்தோளகலமுங்கண்டத்துநீலமுமண்டத்துமின்
பணைத்தாலனசடையுந்திருமுக்கணும்பெண்ணொர்பக்கத்
தணைத்தாரொழிற்கம்பரெங்கள்பிரானார்க்கழகியவே ... ... (ஙரு)

அழகறிவிற்பெரிதாகியவேகம்பரத்தர்கொற்றம்
பழகறிவிற்பெரியோர்தமைப்பற்றலர்பற்றுமன்பின்
குழகறிவேற்பினுளொன்றறியாரறியாமைதெய்வக்
கிழகெறியப்பட்டுலந்தாருலகிற்கிடந்தனரே ... ... ... (ஙசு)

இடக்குமொருபாலிளைக்கின்றபாம்பொருபான்மதியந்
தொடக்குண்டிலங்குமலங்குந்திளைக்கங்கைசூடுங்கொன்றை
வடக்குண்டுகட்டத்தலைமாலைவாளான்மலைந்தவெம்போர்
கடக்கும்விடைத்திருவேகம்பர்கற்றைச்சடைமுடியே ... ... (ஙஎ)

கற்றைப்பவளச்சடைவலம்பூக்கமழ்கொன்றையந்தார்
முற்றுற்றிலர்மதியின்கொழுந்தேகம்பர்மொய்குழலா
மற்றைத்திசையின்மணிப்பொற்கொழுந்தத்தரங்கழுநீர்
தெற்றிப்பொலிகின்றசூட்டழகாகித்திகழ்தருமே ...... ... (௩அ)

தருமருட்டன்மைவலப்பாற்கமலக்கணெற்றியின்மேற்
றிருமலர்க்கண்பிளவின்றிகழுந்தழல்செல்வக்கம்பர்
கருமலர்க்கண்ணிடப்பாலதுநீலங்கனிமதத்து
வருநுதற்பொட்டணங்குக்குயர்ந்தோங்குமலர்க்குழலே ... (௩௯)

மலர்ந்தபடத்துச்சியைந்தினுஞ்செஞ்சுடர்மாமணிவிட்
டலர்ந்தமணிக்குண்டலம்வலக்காதினிலாடிவரும்
நலந்திருநீள்வயிரம்வெயிற்பாயுநகுமணிகள்
கலந்தசெம்பொன்மகரக்குழையேகம்பர்காதிடமே ... ... (௪0)

காதலைக்கும்வலத்தோள்பவளக்குன்றமங்குயர்ந்து
போதலைக்கும்பனிப்பொன்மலைநீற்றின்பொலியகலந்
தாதலைக்குங்குழல்சேர்பணைத்தோணறுஞ்சாந்தணிந்து
சூதலைக்கும்முலைமார்பிடமேகம்பர்சுந்தரமே ... ......... (௪க)

தரம்பொற்பழியுமுலகட்டியெய்த்துத்தரந்தளரா
வுரம்பொற்புடையதிருவயிரும்வலமும்பர்மும்மைப்
புரம்பொற்பழித்தகம்பர்க்குத்தரத்திபூண்முலையு
நிரம்பப்பொருதுதளரிளவஞ்சியுநேருடைத்தே ...... ...... (௪உ)

உடைப்புலியாடையின்மேலுரகக்கச்சுவீக்கிமுஞ்சி
வடத்தொருகோவணந்தோன்றுமறைவலமற்றையல்குற்
றொடக்குறுகாஞ்சித்தொடுத்தவரசிலைதூநுண்டுகில்
அடற்பொலியேறுடையேகம்பமேயவடிகளுக்கே ...... ...... (௪௩)

அடிவலப்பாலதுசெந்தாமரையொத்ததிர்கழல்சூழ்ந்
திடிகுரற்கூற்றினெருத்திறவைத்ததிளந்தளிரி
னடியிடப்பாலதுபஞ்சுறவஞ்சுஞ்சிலம்பணிந்த
வடிவுடைத்தார்கச்சியேகம்பமேயவரதருக்கே ... ... ... (௪௪)

தருக்கவற்றுன்மிக்கமுப்புரமெய்தயன்றன்றலையை
நெருக்கவற்றேடமழுவாள்விசைத்ததுநெற்களென்றும்
பருக்கவற்றுங்கச்சியேகம்பரத்தர்தம்பாம்புகளின்
றிருக்கவற்றுலிட்டருளுங்கடகத்திருக்கரமே ...... ...(௪௫)

கரத்தத்தமருகத்தோசைகடுத்தண்டமீபிளப்ப
வரத்தத்தபாதநெரித்திட்டவனிதலநெரியத்
தரத்தத்திசைகளுக்கப்புறம்போர்ப்பச்சடைவிரித்து
வரத்தைத்தருகம்பராடுவொல்லியுமாநடமே ... ... (௪௬)

நடனம்பிரானுகந்துய்யக்கொண்டானென்றுநன்மறையோ
ருடன்வந்தழுவாயிரவரிறைஞ்சிநிறைந்தவன்பின்
கடனன்றிமற்றறியாத்தில்லையம்பலங்காளத்தியா
மிடமெம்பிரான்கச்சியேகம்பமேயாற்கினியனவே ...... ...... (௪௭)

இனியவரின்றாரவனாயொப்பார்பிறரென்னவொண்ணுத்
தனியவர்தையலுடனாமுருவரறம்பணித்த
முனியவரொன்றுமுகந்தமுக்கண்ணவர்தண்டியன்புக்
கினியவர்காய்மழுவாட்படையார்கச்சியேகம்பரே ...... ...... (சஅ)

பரவித்தனைநினையக்கச்சியேகம்பர்பண்ணுமையல்
வரவித்தனையுள்ளதெங்கறிந்தேன்முன்னவர்மகனார்
புரவித்தனையடிக்கக்கொடிதாய்விடியாவிரவி
லரவித்தனையுங்கொண்டார்மடவார்முன்றிலாட்டிடவே ... ... (சகூ)

இடவஞ்சுறுக்கெனப்பாயுமுஞ்சென்னிநகுதலைகண்
டிடவஞ்சுவர்மடவாரிரிகின்றனரேகம்பத்தீர்
படமஞ்சுவாயதுநாகமிளைக்குமதனுக்குமுற்
படவஞ்சுவரொங்ஙனேபலிவந்திடும்பாங்குகளே ...... ...... (ருo)

பாங்குடைக்கோட்புலியின்னதள்கொண்டீர்நும்பாரிடங்க
டாங்குடைகொள்ளப்பலிகொள்ளவந்தீர்தடங்கமலம்
பூங்குடைகொள்ளப்புனற்கச்சியேகம்பங்கோயில்கொண்டீ
ரீங்கிடைகொள்ளக்கலைகொள்ளவந்தீரிடைக்குமின்றே ... ... (ருக)

இடைக்குமின்றோற்குமிணைமுலையாய்முதியார்கடஞ்சொற்
கடைக்கணன்றாங்கச்சியேகம்பனையங்கொள்ளக்கடவும்
விடைக்குமுன்றோற்றநில்லேனின்றினியிந்தமொய்குழலார்
கிடைக்குமுன்றோற்றநெஞ்சங்கிதுவோதங்கிறித்துவமே ... ... (ருஉ)

கிறிபலபேசிச்சதிராநடந்துவிடங்குபடக்
குறிபலபாடிக்குளிர்கச்சியேகம்பனையங்கொள்ள
நெறிபலவார்குழலார்மெலிவுற்றநெடுந்தெருவிற்
செறிபலவெள்வளைபோயினதாயர்கடேடுவரோ ...... ...... (ருங)

தேடுற்றிலகள்ளநோக்கந்தெரிந்திலசொற்கண்முடி
கூடுற்றிலகுழல்கொங்கைபொடித்திலகூறுமிவண்
மாடுற்றிலமணியின்மடவல்குலுமற்றிவள்பா
ஞடுற்றிலவெழிலேகம்பனார்க்குள்ளநல்கிடத்தே ...... ...... (ருச)

நல்கும்புகழ்க்கடவூர்நன்மறையவனுய்யநண்ணிக்
கொல்கின்றகூற்றைக்குமைத்தவெங்கூற்றங்குளிர்திரைகண்
மல்குந்திருமறைக்காட்டமிர்தென்றுமலைமகடான்
புல்கும்பொழிற்கச்சியேகம்பமேவியபொன்மலையே ...... ...... (ருரு)

மலயத்தகத்தியனர்ச்சிக்கமன்னிவடகயிலை
நிலயத்தமரர்தொழவிருந்தானெடுமேருவென்னுஞ்
சிலையத்தன்பைம்பொன்மதிற்றிருவேகம்பத்தான்றிகழ்நீ
ரலயத்தடம்பொன்னிசூழ்திருவையாற்றருமணியே ...... ... (ருசா)

மணியாரருவித்தடவிமயங்குடகொல்லிகல்லின்
றிணியாரருவியினார்த்தசிராமலையைவனங்க
ளணியாரருவிகவர்கிளியோப்புமின்சாரல்விந்தம்
பணிவாரருவினைதீர்க்குமேகம்பர்பருப்பதமே ...... ...... (ருஎ)

பருப்பதங்கார்தவழ்மந்தரமிந்திரநீலம்வெள்ளை
மருப்பதங்கார்கருங்குன்றியங்கும்பரங்குன்றம்வில்லார்
நெருப்பதங்காகுதிநாறுமயேந்திரமென்றிவற்றி
லிருப்பதங்காவுகந்தான்கச்சியேகம்பத்தெம்மிறையே ... ... (ருஅ)

மிறைத்தார்புரமெய்தவில்லிமைநல்லிமவான்மகட்கு
மறைத்தார்கருங்குன்றம்வெண்குன்றஞ்செங்குன்றமன்னற்குன்ற
நிறைத்தார்நெடுங்குன்றநீள்கழுக்குன்றமென்றீவினைகள்
குறைத்தார்முதுகுன்றமேகம்பர்குன்றென்றுகூறுமினே ... ... (ருகூ)

கூறுமின்றொண்டர்குற்றாலநெய்த்தானந்துருத்தியம்பேர்
தேறுமின்வேள்விக்குடிதிருத்தோணிபுரம்பழன
மாறுமின்போற்சடைவைத்தவனூரிடைமருதன்
றேறுமினீரெம்பிரான்கச்சியேகம்பமுன்னிணைந்தே ...... ...... (சுo)

நினைவார்க்கருளும்பிரான்றிருச்சோற்றுத்துறைநியமம்
புனைவார்சடையோன்புகலூர்புறம்பியம்பூவணநீர்
புனைவார்பொழிற்றிருவெண்காடுபாச்சிலதிகையென்று
நினைவார்தருநெஞ்சினீர்கச்சியேகம்பநண்ணுமினே ...... ...... (சுக)

நண்ணிப்பரவுந்திருவாவடுதுறைநல்லநல்லூர்
மண்ணிற்பொலிகடம்பூர்கடம்பந்துறைமன்னுபுன்கூ
ரெண்ணற்கரியபராய்த்துறையேர்கொளெதிர்கொள்பாடிக்
கண்ணிப்பிறைச்சடையோன்கச்சியேகம்பங்காண்மின்சென்றே ... (சுஉ)

சென்றேறிவிண்ணுறுமண்ணுமலைதிகழ்வல்லமென்பூ
வின்றேறல்பாய்திருமால்பேறுபாசூரெழிலழுந்தூர்
வன்றேரவன்றிருவிற்பெரும்பேறுமதிலொற்றியூர்
நின்றேர்தருகச்சியேகம்பமேயார்நிலாவியவே ...... ...... (சுஙு)

நிலாவுபுகழ்த்திருவோத்தூர்திருவாமாத்தூர்நிறைநீர்
சுலாவுசடையோன்புலிவலம்வில்வலங்கொச்சைதொண்டர்
குலாவுந்திருப்பனங்காடுநன்மாகறல்கூற்றம்வந்தா
லலாயென்றடியார்க்கருள்புரியேகம்பராலயமே ...... ... (சுச)

ஆலயங்கார்கருகாவைகச்சூர்திருக்காரிகரை
வேலையங்கேறுதிருவான்மியூர்திருவூறன்மிக்க
சோலையங்கார்திருப்போந்தைமுக்கோணந்தொடர்கடுக்கை
மாலையன்வாழ்திருவாலங்காடேகம்பம்வாழ்த்துமினே ... ... (சுரு)

வாழப்பெரிதெமக்கின்னருள்செய்யுமலர்க்கழலோர்
தாழச்சடைத்திருவேகம்பர்தம்மைத்தொழாதவர்போய்
வாழப்பரற்சுரமாற்ருதளிரடிபூங்குழலெம்
மேழைக்கிடையிறுக்குங்குயபாரமியக்குறினே ...... ......(சுசு)

உறுகின்றவெவ்வழலக்கடமிக்கொடிக்குன்பின்வரப்
பெறுகின்றவண்மையினுலையபேரருளேகம்பனூர்
துறுகின்றமென்மலர்த்தண்பொழிற்கச்சியைச்சூழ்ந்திளையோர்
குறுகின்றபூங்குவளைக்குறுந்தண்பணையென்றுகொளே ... ... (சுஎ)

கொள்ளுங்கடுங்கதிர்க்கள்ளித்தீச்சிலவேயுலறி
விள்ளும்வெடிபடும்பாலையென்பாவைவிடலைபின்னே
தெள்ளும்புனற்கச்சியுட்டிருவேகம்பர்சேவடியை
யுள்ளுமதுமறந்தாரெனப்போவதுரைப்பரிதே ...... ...... (சுஅ)

பரிப்பருந்திண்மைப்படையதுகானரொனிற்சிறகு
விரிப்பருந்துக்கிரையாக்கும்வெய்யேனஞ்சலஞ்சடைமேற்
றரிப்பருந்திண்கங்கையார்திருவேகம்பமன்னபொன்னே
வரிப்பருந்திண்சிலையேயுமராயின்மறைகுவனே ...... ...... (சுகூ)

வனவரித்திண்புலியின்னதளேகம்பமன்னருளே
யெனவருபொன்னணங்கென்னணங்கிற்கெனெழிற்கழங்கும்
தனவரிப்பந்துங்கொடுத்தெனைப்புல்லியுமிற்பிரிந்தே
யினவரிக்கல்லதர்செல்வதெங்கேயொல்குமேழைநெஞ்சே ... ... (எ0)

நெஞ்சார்தரவின்பஞ்செய்கழலேகம்பர்கச்சியன்னாள்
பஞ்சாரடிவைத்தபாங்கிவையாங்கவள்பெற்றெடுத்த
வெஞ்சார்வொழியத்தன்பின்செலமுன்செல்வெடுவெடென்ற
வஞ்சாவடுதிறற்காளைதன்போக்கிவையந்தத்திலே ...... ...... (எக)

இலவவெங்கானுனையல்லாற்றெழுஞ்சரணேகம்பனார்
நிலவுஞ்சுட்டொளிவெய்யவனேதண்மலர்மிதித்துச்
செலவும்பருக்கைகுளிரத்தளிரடிசெல்சுரத்துன்
னுலவுங்கதிர்தணிவித்தருள்செய்யுன்னுறுதுணைக்கே ...... ...... (எஉ)

துணையொத்தகோவையும்போலெழிற்பேதையுந்தோன்றலுமுன்
னிணையொத்தகொங்கையொடேயொத்தகாதலொடேகினரோ
யணையத்தரோரொத்தகாளையைக்கண்டனமற்றவரோற்
பிணையொத்தநோக்குடைப்பெண்ணிவடன்றொடும்பேசுமினே ... (எங)

மின்னலிக்கும்வணக்கத்திடையாளையுமீளியையு
நென்னலிப்பாக்கைவந்தெய்தினிரோலெம்மனையிற்கண்டீர்
பின்னரிப்போக்கருங்குன்றுகடந்தவரின்றுகம்பர்
மன்னரிதேர்ந்துதொழுங்கச்சிநாட்டிடைவைகுவரோ ...... ...... (எச)

உவரச்சொல்வேடுடைக்காடுகந்தாடியவேகம்பனு
ரவரக்கன்போன்விமானத்தையாயிரமுண்மைசுற்றுந்
துவரச்சிகரச்சிவாலயஞ்சூலந்துலங்குவிண்மேற்
கவரக்கொடிதிளைக்குங்கச்சிகாணினுங்கார்மயிலே ...... ...... (எரு)

கார்மிக்ககண்டத்தெழிற்றிருவேகம்பர்கச்சியின்வா
யோர்மிக்கசேற்றெழினென்னடுவோரொலிபொன்மலைபோற்
போர்மிக்கசெந்நெல்குவிப்போரொலிகருப்பாலையொலி
நீர்மிக்கமாக்கடலின்றெலியேயொக்குநேரிழையே ... ... ... (எசு)

நேர்த்தமையாமைவிறற்கொடுவேடர்நெடுஞ்சுரத்தைப்
பார்த்தமையாலிமைதீர்ந்தகண்பொன்னேபகட்டுரிவை
போர்த்தமையாலுமைநோக்கருங்கம்பர்கச்சிப்பொழிலுட்
சேர்த்தமையாலிமைப்போதணிசீதஞ்சிறந்தனவே ... ... (எஎ)

சிறைவண்டுபாடுங்கமலக்கிடங்கிவைசெம்பழுக்காய்
நிறைகொண்டபாளைக்கமுகின்பொழிலவைதீங்கனியின்
பொறைகொண்டவாழைப்பொதும்புவைபுன்சடையேகம்பனூர்
நறைகொண்டபூங்கச்சிநாடெங்குமிவ்வண்ணநன்னுதலே ... ... (எஅ)

நன்னுதலார்கருங்கண்ணுஞ்செவ்வாயுமிவ்வாறெனப்போய்
மன்னிதழார்திருநீலமுமாம்பலும்பூப்பவள்ளை
யென்னவெலாமொப்புக்காதென்றுவீழிடுமேகம்பனூர்
பொன்னுதலார்விழியார்கச்சிநாட்டுளிப்பொய்கையுளே ... (எகூ)

உள்வார்குளிரநெருங்கிக்கருங்கிடங்கிட்டநன்னீர்
வள்வாளைகளொடுசெங்கயன்மேய்கின்றவெங்களையாட்
கொள்வார்பிறவிகொடாதவேகம்பர்குளிர்குவளை
கள்வார்தருகச்சிநாட்டெழிலேரிகளப்பரப்பே ... ... (அ0)

பரப்பார்விசும்பிற்படிந்தகருமுகிலன்னநன்னீர்
தரப்பாசிகண்மிகுபண்பொடுசேம்படர்தண்பணைவாய்ச்
சுரப்பாரொருமைமலர்தின்னத்துன்னுகராவொருத்தல்
பொரப்பார்பொலிநுதலாய்செல்வக்கம்பர்தம்பூங்கச்சியே ...... (அக)

கச்சார்முலைமலைமங்கைகண்ணூரவெண்ணூன்கறமும்
வைச்சார்மகிழ்திருவேகம்பர்தேவிம்கிழவிண்ணோர்
விச்சாதரர்தொழுகின்றவிமானமுந்தன்மமரு
வச்சாலையும்பரப்பாங்கணிமாடங்களோங்கினவே ...... ... (அஉ)

ஓங்கினவூரகமுள்ளகமும்பருருகிடமாம்
பாங்கினினின்றதரியுறைபாடகந்தெவ்விரிய
வாங்கினவாட்கண்ணிமற்றவர்மைத்துனிவான்கவிக
டாங்கினநாட்டிருந்தாளதுதன்மனையாயிழையே ............ (அங)

இழையாரரவணியேகம்பர்நெற்றிவிழியின்வந்த
பிழையாவருணம்பிராட்டியதின்னபிறங்கலுன்னு
நுழையாவருதிரிசூலத்தனேக்கரும்பொன்கடுக்கைத்
தழையார்பொழிலுதுபொன்னேநமக்குத்தளர்வில்லையே ... ...(அச)

தளராமிகுவெள்ளங்கண்டுமையோடித்தமைத்தழுவக்
கிளையார்வளைக்கைவடுப்படுமீங்கோர்கிறிபடுத்தார்
வளமாப்பொழிற்றிருவேகம்பமற்றிதுவந்திறைஞ்சி
யுளராவதுபடைத்தோமடவாயிவ்வுலகத்துள்ளே ...... ... (அரு)

உலவியமின்வடம்வீசியுருமதிர்வுண்முழங்கி
வலவியமாமதம்பாய்முகிலியானைகள்வானில்வந்தாற்
சுலவியவார்குழல்பின்னரென்பாரிரெனநினைந்து
நிலவியவேகம்பர்கோயிற்கொடியன்னநீர்மையனே......... ...... (அசு)

நீரென்னிலும்மழுங்கண்முகில்காணெஞ்சமஞ்சலையென்
றுரென்னிலுந்தமராயுறைப்பாரமராபதிக்கு
நேரென்னிலுந்தகுங்கச்சியுளேகம்பர்நீண்மதில்வாய்ச்
சேரென்னிலுந்தங்கும்வாட்கண்ணிதானன்பர்தேர்வரவே ... (அஎ)

வரங்கொண்டிமையோர்நலங்கொள்ளுமேகம்பர்கச்சியன்னாய்
பரங்கொங்கைதூவன்மினீர்முத்தமன்பர்தந்தேரின்முன்னே
தரங்கொண்டுபூக்கொண்டுகொன்றைபொன்னாகத்தண்காந்தள்கொத்தின்
கரங்கொண்டுபொற்சுண்ணமேந்தவும்போந்தனகார்முகிலே ... (அஅ)

கார்முகமாரவண்கைக்கொண்டகம்பர்கழற்றொழுது
போர்முகமாப்பகைவெல்லச்சென்றார்நினையார்புணரி
நீர்முகமாகவிருண்டுசுரந்ததுநேரிழைநா
மார்முகமாகவினைக்கடனீந்துமயர்வுயிர்ப்பே ... ... ... (அகூ)

உயிராயினவன்பர்தேர்வரக்கேட்டுமுன்வாட்டமுற்ற
பயிரார்புயல்பெற்றதென்னநம்பல்வளைபான்மைகளாந்
தயிரார்பானெய்யொடுமாடியவேகம்பர்தம்மருள்போற்
கயிராவளையழுந்தக்கச்சிறுத்தனகார்மயிலே ...... ...... (கூ0)

கார்விடைவண்ணத்தனன்றேழ்தழுவினுமின்றுதனிப்
போர்விடைப்பெற்றெதிர்மாண்டாரெனவண்டர்போதவிட்டார்
தார்விடையேகம்பர்கச்சிப்புறவிடைத்தம்பொனன்பூண்
மார்விடைவைகல்பெறுவார்தழுவமழவிடையே ............ (கூக)

விடைபாய்கொடுமையெண்ணாதுமேலாங்கன்னிவேற்கருங்கட்
கடைபாய்மனத்தினங்காளையர்புல்கொலிகம்பர்கச்சி
மடைபாய்வயலிளமுல்லையின்மான்கன்றொடான்கன்றினங்
கடைபாய்தொறும்பதிமன்றிற்கடல்போற்கலந்தெழுமே ...... (கூஉ)

எழுமலர்த்தண்பொழிலேகம்பர்கச்சியிருங்கடல்வாய்க்
கொழுமணப்புன்னைத்துணர்மணற்குன்றிற்பரதர்கொம்பே
செழுமலர்ச்சேலல்லவாளல்லவேலல்லநீலமல்ல
முழுமலர்க்கூரம்பினோரிரண்டாலுமுகத்தெனவே ...... ... (கூங)

முகம்பாகம்பண்டமும்பாகமென்றோதியமூதுரையை
யுகம்பார்த்திரேலென்னலமுயரேகம்பர்கச்சிமுன்னீ
ரகம்பாகவார்வினளவில்லையென்னின்பவளச்செவ்வாய்
நகம்பாற்பொழிற்பெற்றநாமுற்றவர்கொள்கநன்மயலே ... ......(கூச)

மயக்கத்தநல்லிருட்கொல்லுஞ்சுறவொடெறிமகர
மியக்கத்திடுசுழியோதங்கழிகிளரக்கழித்தார்
துயக்கத்தவர்க்கருளாரகம்பர்கச்சிக்கடலபொன்னூன்
முயக்கத்தகல்வுபொருள்கொண்கநீவருமூர்க்கஞ்சுமே ...... ...(கூரு)

மேயிரைவைகக்குருகுணராமதுவுண்டுபுன்னை
மீயினைவண்டோதமர்புக்கடியவிரிகடல்வாய்ப்
பாயிரைநாகங்கொண்டோன்றொழுங்கம்பர்கச்சிப்பவ்வநீர்
தூயிரைகானன்மற்றாரறிவார்நந்துறைவர்பொய்யே ... ... (கூசு)

பொய்வருநெஞ்சினர்வஞ்சனையாரையும்போகவிடா
மெய்வரும்பேரருளேகம்பர்கச்சிவிரையினவாய்க்
கைவரும்புள்ளொடுசங்கினமார்ப்பநஞ்சேர்ப்பர்திண்டே
ரவ்வருதாமங்களினம்வந்தார்ப்பவணைகின்றதே ... ... ...(கூஎ)

இன்றுசெய்வோமிதனிற்றிருவேகம்பர்க்கெத்தனையு
நன்றுசெய்வோம்பணிநாளையென்றுள்ளிநெஞ்சேயுடலிற்
சென்றுசெயாரைவிடுந்துணைநாளும்விடாதடிமை
நின்றுசெய்வாரவர்தங்களினீணெறிகாட்டுவரோ ... ... ...(கூஅ)

காட்டிவைத்தார்தம்மையாங்கடிப்பூப்பெய்யக்காதல்வெள்ள
மீட்டிவைத்தார்தொழுமேகம்பரோதுமிலாதவெம்மைப்
பூட்டிவைத்தார்தமக்கன்பதுபெற்றுப்பதிற்றுப்பத்துப்
பாட்டிவைத்தார்பரவித்தொழுதாமவர்பாதங்களே ... ... ... (கூகூ)

பாதம்பரவியோர்பித்துப்பிதற்றிலும்பல்பணியும்
மேதம்புகுதாவகையருளேகம்பரேத்தெனவே
போதம்பொருளாற்பொலியாதபுன்சொற்பனுவல்களும்
வேதம்பொலியும்பொருளாமெனக்கொள்வர்மெய்த்தொண்டரே ... (க00)

திருச்சிற்றம்பலம்.

திருவேகம்பமுடையார்திருவந்தாதிமுற்றும்.



திருச்சிற்றம்பலம்.

பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

# திருவொற்றியூரொருபாவொருபஃது.

---

அகவற்பா.

இருநிலமடந்தையியல்பினுடுத்த
பொருகடன்மேகலைமுகமெனப்பொலிந்த
ஒற்றிமாநகருடையோயுருவின்
பெற்றியொன்றுப்பெற்றோரியாரே
மின்னியமின்னின்பிறக்கநின்சடையே
மன்னியவண்டநின்சென்னியின்வடிவே
பாவகன்பரிதிபனிமதிதன்னொடு
மூவகைச்சுடருநின்னுதனேர்நாட்டம்
தண்ணொளியாரந்தரராகணமே
விண்ணவர்முதலாவேறேரிடமாக்
கொண்டுறைவிசும்பேகோலநின்னாக
மெண்டிசைதிண்டோளிருங்கடலுடையே
யணியுடையல்குலுமவனிமண்டலமே
மணிமுடிப்பாந்தணின்றாளிணைவழக்கே
யொழியாதோடியமாருதமுயிர்ப்பே
வழுவாவோசைமுழுதுநின்வாய்மொழி
வானவர்முதலாமன்னுயிர்பரந்த
ஊனமின்ஞானத்தொகுதிநின்னுணர்வே

நெருங்கியவுலகினினீர்மையுநிற்றலும்
சுருங்கலும்விரிதலுந்தோற்றநிற்றொழிலே
யமைத்தலுமழித்தலுமாங்கதன்முயற்சியு
மிமைத்தலும்விழித்தலுமாகுநின்னியல்பே
யென்றிவைமுதலாவியல்புடைவடிவினோ
டொன்றியதுப்புருவிருவகையாகி
முத்திறக்குணத்துநால்வகைப்பிறவி
யத்திறத்தைம்பொறியறுவகைச்சமையமோ
டேழுலகாகியெண்வகைமூர்த்தியோ
டேழிதோறூழியெண்ணிறந்தோங்கி
யெவ்வகையளவினிற்கூடிநின்
றவ்வகைப்பொருளுநீயாகியவிடத்தே...... ......... (க)
இடத்துறைமாதரோடீருடம்பென்றும்
நடத்தினைநள்ளிருணவிற்றினையென்றும்
புலியதளென்பொடுபுனைந்தோயென்றும்
பலிதிரிவாழ்க்கைபயின்றோயென்றும்
திருவமர்மாலொடுதிசைமுகனென்று
மருவமுமுருவமுமானாயென்று
மூளனேயென்றுமிலனேயென்றும்
தளரானென்றுந்தளர்வோனென்று
மாதியென்றுமசோகினனென்றும்
போதியிற்பொலிந்தபுராணனென்று
மின்னவைமுதலாத்தாமறியளவையின்
மன்னியநூலுடன்பன்மையுண்மயங்கிப்
பிணங்குமாந்தர்பெற்றிமைநோக்கி
யணங்கியவவ்வவர்க்கவ்வவையாகி
யடைபற்றியபளிங்குபோலு
மொற்றிமாநகருடையோயுருவே ... ... (உ)
உருவாமுலகுக்கொருவனாகிய
பெரியோய்வடிவின்பிறிதிங்கின்மையி
னெப்பொருளாயினுமிங்குளதாமெனி
னப்பொருளுனக்கேயவயவமாதலின்
முன்னிமூவெயின்முழங்கெரியூட்டித்
தொன்னீர்வையகந்துயர்கெடச்சூழ்ந்ததும்
வேள்விமூர்த்திதன்றலையினைவிடுத்ததும்
நீள்விசும்பாளிதன்றோளினைநெரித்தது
மோங்கியமறையோற்கொருமுகமொழித்ததும்
பூங்கணைவேளைப்பொடிபடவிழித்ததும்
திறல்கெடவரக்கனைத்திருவிரலூறுத்ததும்
குறைபடக்கூற்றினைக்குறிப்பினிலடர்த்தது
மென்றிவைமுதலாவாள்வினையெல்லாம்
நின்றுழிச்செறிந்தவைநின்செயலாதலி
னுலவாத்தொல்புகழொற்றியூர
பகர்வோர்நினக்குவேறின்மைகண்டவர்
நிகழ்ச்சியினிகழினல்லது
புகழ்ச்சியிற்படுப்பரோபொருளுணர்ந்தோரே...... ....... .. (ங)
பொருளுணர்ந்தோங்கியபூமகன்முதலா

யிருடீணயாக்கையிலியங்குமன்னுயி
ருருவினுமுணர்வினுமுயர்வினும்பணியினும்
திருவினுந்திறலினுஞ்செய்தொழில்வகையினும்
வெவ்வேறுகிவினையொடும்பிரியா
தொர்வாப்பன்மையுண்மற்றவரொழுக்க
மன்னியவேலையுள்வான்றிரைபோல
நின்னிடையெழுந்துநின்னிடையாகியும்
பெருகியுஞ்சுருங்கியும்பெயர்ந்துந்தோன்றியும்
விரவியும்வேருய்நின்றனைவிளக்க
மோவாத்தொல்புகழொற்றியூர
மூவாமேனிமுதல்வநின்னருள்
பெற்றவரறியினல்லது
மற்றவரறிவரோநின்னிடைமயக்கே...... ...... ...(ச)

மயக்கமில்சொன்னீயாயினுமற்றவை
துயக்கநின்றிறமறியாச்சூழலு
முறையிடமுள்ளமாயினுமற்றது
கறைபடவாங்கேகரந்தகள்ளமும்
செய்வினையுலகினிற்செய்வோயெனினு
மவ்வினைப்பயனீயணுகாவணிமையு
மினத்திடையின்பம்வேண்டிநிற்பணிவோர்
மனத்திடைவாரியாகியவனப்பு
மன்பினடைந்தவர்க்கணிமையுமல்லவாஞ்
சேய்மையுநாடோறு
மென்பினையுருக்குமியற்கையவாதலிற்
கண்டவர்தமக்கேயூனுடல்கழித
லுண்டெனவுணர்ந்தனமொற்றியூர
மன்னியபெரும்புகழ்மாதவத்
துன்னியசெஞ்சடைத்தூமதியோயே......... ...... (ரு)

தூமதிசடைமிசைச்சூடிதறுநெறி
யாமதியானெனவமைத்தவாறே
யறனுருவாகியவானேறேறுத
லிறையவனியானெனவியற்றுமாறே
யதுவவளவனெனநின்றமையார்க்கும்
பொதுநிலையானெனவுணர்த்தியபொருளே
முக்கணனென்பதுமுத்தீவேள்வியில்
தொக்கதென்னிடையென்பதோர்சுருக்கே
வேதமான்மறியேந்துதன்மற்றத
ளுதனனெனநவிற்றுமாறே
மூவிலையொருதாட்சூலமேந்துதன்
மூவரும்யானெனமொழிந்தவாறே
யெண்வகைமூர்த்தியென்பதிவ்வுலகினி
லுண்மையானெனவுணர்த்தியவாறே
நிலநீர்தீவளியநல்வானென்று
முலவாத்தொல்புகழுடையோயென்றும்
பொருளுநற்பூதப்படையோயென்றும்
தெருளநின்றுலகினிற்றெருட்டுமாறே
யீங்கிவைமுதலாவண்ணமும்வடிவு

மோங்குநின்பெருமையுணர்த்தவுமுணராத்
தற்கொலிமாந்தர்தம்மிடைப்பிறந்த
சொற்பொருள்வண்மையிற்சுழலுமாந்தர்க்
காதியாகியவறுதொழிலாள
ரோதலோவாவொற்றியூர
சிறுவர்தஞ்செய்கையிற்படுத்து
முறுவலித்திருத்திநீமுகப்படுமளவே...... .......... ...(சு)

அளவினிலிறந்தபெருமையையாயினு
மெனதுளமகலாவொடுங்கிநின்றனையே
மெய்யினையிறந்தமெய்யினையாயினும்
வையகமுழுதுநின்வடிவெனப்படுமே
கைவலத்திலைநீயெனினுங்காதல்
செய்வோர்வேண்டுஞ்சிறப்பொழியாயே
சொல்லியவகையாற்றுணையிலையாயினும்
நல்லுயிர்க்கூட்டநாயகனீயே
யெங்குமுள்ளோயெனினும்வஞ்சனை
தங்கியவவரைச்சார்விலைநீயே
அஃதான்று
பிறவாப்பிறவியைபெருகாப்பெருமையை
துறவாத்துறவியைதொடராத்தொடர்ச்சியை
நுகராநுகர்ச்சியைநுணுகாநுணுக்கினை
யகலாவகற்சியையணுகாவணிமையை
செய்யாச்செய்கையைசிறவாச்சிறப்பினை
வெய்யைதணியைவிழுமியைநொய்யை
செய்யைபசியைவெளியைகரியை
யாக்குதியழித்தியானபல்பொருள்
நீக்குதிதொகுத்திநீங்குதியடைதி
யேனையவாகியவெண்ணில்பல்குணம்
நினைதொறுமயக்குநீர்மையவாதலி
னேக்குகடலுடுத்தவொற்றியூர
ஈங்கிதுமொழிவார்தம்
சொன்னிலைசுருங்கினல்லது
நின்னியலறிவோரியாரிருநிலத்தே...... ...... ......(எ)

நிலத்திடைப்பொறையாயவாவினினீண்டு
சொலத்தகுபெருமைத்தூராவாக்கை
மெய்வளியையொடுபித்தொன்றுக
வைவகைநெடுங்காற்றுங்குடனடிப்ப
நரையெனுநுரையேநாடொறும்வெளுப்பத்
திரையுடைத்தோலேசெழுந்திரையாகக்
கூடியகுருதிநீரினுள்நிறைந்து
மூடியவிருமலோசையின்முழங்கிச்
சுடுபசிவெகுளிச்சுறவினமெறியக்
குடரொனுமரவக்கூட்டம்வந்தொலிப்ப
வூன்றடியெலும்பினுட்டிடலடைந்து
தோன்றியபல்பிணிப்பின்னகஞ்சுழலக்
கால்கையினரம்பேகண்டமாக
மேதகுநிணமேமெய்ச்சாலாக

முழக்குடைத்துளையேமுகங்களாக
வழுக்குடைமூக்காறுதம்வந்தொலிப்ப
விப்பரிசியற்றியவுடலிருங்கடலுட்
டுப்புரவென்னுஞ்சுழித்தலைப்பட்டிங்
காவாவென்றுநின்னருளினைப்பெற்றவர்
நாவாயாகியநாதநின்பாத
முந்திச்சென்றுமுறைமையின்வணங்கிச்
சிந்தைக்கூம்பினைச்செவ்வியலினிருத்தி
யுருகியவார்வப்பாய்பூரித்துப்
பெருகியநிறையெனுங்கயிற்றிடைப்பிணித்துத்
துன்னியசுற்றச்சுடர்க்கயிறறுத்து
மன்னியவொருமைப்பொறியினைமுறுக்கிக்
காமப்பாறொனுங்கடுவெளியற்ற
தூமச்சோதிச்சுடர்க்குறநிறுத்திச்
சுருங்காவுணர்ச்சித்துடுப்பினைத்துழாவி
நெருங்காவளவினீள்கரையேற்ற
வாங்கயாத்திரைபோக்குதிபோலு
மோங்குகடலுடுத்தவொற்றியூரோயே... ... ...(அ)
ஒற்றியூரவுலவாநின்குணம்
பற்றியாரப்பரவுதல்பொருட்டா
வென்னிடைப்பிறந்தவின்னுப்புன்மொழி
நின்னிடையணுகாநீர்மையவாதலி
ஞவலித்தழுதலிலகன்றவம்மனை
சேவலஞ்சேய்மையிற்கேளாளாயினும்
பிறித்தற்கரியபெற்றியதாகிக்
குறைவினிலார்த்துங்குழவியதியல்பினை
யறியாதெண்ணிலூழிப்பிறவியின்
மயங்கிக்கண்ணிலர்கண்பெற்றுங்கே
தாய்தலைப்படநின்றாளிணைவணக்கம்
வாய்தலையறியாமயக்குறும்வினையேன்
மல்கியவின்பத்தோடுடன்கூடிய
வெல்லையிலவாவினிலியற்றியவாகக்
கட்டியநீயேயவிழ்க்கினல்லது
தெட்டனையாயினுமியானிதற்கரியேன்
றுன்னிடையிருளென்னுந்தூற்றிடையொதுங்கி
வெள்ளிடைகாணவிருப்புறுவினையேன்
றந்தையுந்தாயுஞ்சாதியுமறிவுநஞ்
சிந்தையுந்திருவுஞ்செல்கதித்திறனுந்
துன்பமுந்துறவுந்தூய்மையுமறிவு
மின்பமும்புகழுமிவைபலபிறவுஞ்
சுவையொளியூறோசைநாற்றந்தோற்ற
மென்றிவைமுதலாவிளங்குவவெல்லா
மொன்றநின்னடிக்கேயொருங்குடன்வைத்து
நின்றனன்றனியேனின்னடியல்லது
சார்வுமற்றின்மையிற்றளர்ந்தோர்காட்சிச்
சேர்விடமதனைத்திறப்படநாடி
யெய்துதற்கரியோயானினிச்
செய்வதுமறிவனோதெரியுங்காலே. ... ... (கூ)

காலற்சீறியகழலோய்போற்றி
மூலத்தொகுதிமுதல்வபோற்றி
யொற்றிமாநகருடையோய்போற்றி
முற்றுமாகியமுதல்வபோற்றி
யணைதொறுஞ்சிறக்குமமிர்தேபோற்றி
யிணைபிறிதில்லாவீசபோற்றி
யார்வஞ்செய்பவர்க்கணியோய்போற்றி
தீர்விலின்சுவைத்தேனேபோற்றி
வஞ்சனைமாந்தரைமறந்தோய்போற்றி
நஞ்சினையமிர்தாநயந்தோய்போற்றி
விரிகடல்வையகவித்தேபோற்றி
புரிவுடைவனமாப்புணர்ந்தோய்போற்றி
காணமுன்பொருள்கருத்துறைசெம்மைக்
காணியாகியவரனேபோற்றி
வெம்மைதண்மையென்றிவைகுணமுடைமையிற்
பெண்ணோடாணெனும்பெயரோய்போற்றி
மேவியவவர்தமைவீட்டினிற்படுக்குந்
தீபமாகியசிவனேபோற்றி
மாலோய்போற்றிமறையோய்போற்றி
மேலாய்போற்றிவேதியபோற்றி
சந்திரபோற்றிதழலோய்போற்றி
யிந்திரபோற்றியிறைவபோற்றி
யமராபோற்றியழகாபோற்றி
குமராபோற்றிகூத்தாபோற்றி
பொருளேபோற்றிபோற்றியென்றுனை
நாத்தழும்பிருக்கநவிற்றினல்லல ... ... (௪௦)
தேற்றுதற்குரியோரியாரிருநிலத்தே.

திருச்சிற்றம்பலம்.

திருவொற்றியூரொருபாவொருபது முற்றும்.

பட்டணத்துப்பிள்ளையாரருளிச்செய்ததிருப்பிரபந்தங்கள்முற்றும்,



திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பிஅருளிச்செய்த

# திருநாரையூர்விநாயகப்பிள்ளையார்

## திருவிரட்டைமாலை.

வெண்பா.

என்னைநினைந்தடிமைகொண்டெனிடர்கெடுத்துத்
தன்னைநினையத்தருகின்றான்—புன்னை
விரைசுமகிழ்சோலைவியனாரையூர்முக்க
ணரைசுமகிழத்திமுகத்தான் ... ... ... ... ...(௧)

கலித்துறை.

முகத்தாற்கரியனென்றாலுந்தனையேமுயன்றவர்க்கு
மிகத்தான்வெளியனென்றேமெய்மையுன்னும்விரும்படியா
ரகத்தான்றிகழ்திருநாரையூரம்மான்பயந்தவெம்மா
னுகத்தானவன்றனுடலம்பிளந்தவொருகொம்பனே... ...... ...(உ)

வெண்பா.

கொம்பனையவள்ளிகொழுநன்குறுகாமே
வம்பனையமாங்கனியைநாரையூர்—நம்பனையே
* தன்னவலஞ்செய்துகொளுந்தாழ்தடக்கையானென்னோய்
பின்னவலஞ்செய்வதெனோபேசு... ... ... ... ...(௩)

கலித்துறை.

பேசத்தகாதனபேயெருதும்பெருச்சாளியுமென்
றேசத்தகும்படியேறுவதேயிமையாதமுக்கட்
கூசத்தகுந்தொழிலுங்கையுநுந்தையுநீயுமிந்தத்
தேசத்தவர்தொழுநாரைப்பதியுட்சிவக்களிறே... ... ... ...(ச)

வெண்பா.

களிறுமுகத்தவனுக்காயஞ்செந்தீயி
னொளிறுமுருக்கொண்டதென்னே—யளறுதொறும்
பின்னாரையூராரலாரும்பெரும்பழன
மன்னாரையூரான்மகன்... ... ...... ... ... ...(ரு)

கலித்துறை.

மகத்தினின்வானவர்பற்கண்சிரந்தோணரித்தருளுஞ்
சுகத்தினீள்பொழினாரைப்பதியுட்சுரன்மகற்கு
முகத்ததுகையந்தக்கையதுமூக்கந்தமூக்கதனி
னகத்ததுவாயந்தவாயதுபோலுமடுமருப்பே... ... ... ... (சு)

வெண்பா.

மருப்பையொருகைக்கொண்டுநாரையூர்மன்னும்
பொருப்பையடிபோற்றத்துணிந்தால்—நெருப்பை
யருந்தவெண்ணுகின்றவெறும்பன்றேயவரை
வருந்தவெண்ணுகின்றமலம்... ... ... ... ... (எ)

கலித்துறை.

மலஞ்செய்தவல்வினைநோக்கியுலகைவலம்வருமப்
புலஞ்செய்தகாட்சிக்குமரற்குமுன்னேபுரிசடைமேற்
சலஞ்செய்தநாரைப்பதியரன்றன்னைக்கனிதரவே
வலஞ்செய்துகொண்டமதக்களிறேயுன்னைவாழ்த்துவனே...... ...(அ)

வெண்பா.

வனஞ்சாயவல்வினைநீக்கிவனசத்
தனஞ்சாயலைத்தருவானன்றே—வினஞ்சாயத்
தநாரையூர்நம்பர்மகன்றிண்டோணெரித்தருளு
நாரையூர்நம்பர்மகனும்... ...... ...... ...... ...... (க)

---

* தன்னம்—சிறுமை.

கலித்துறை.

நாரணன்முன்பணிந்தேத்தநின்றெல்லைநடாவியவத்
தேரணவுந்திருநாரையூர்மன்னுசிவன்மகனே
காரணனேயெங்கணபதிவெய்யகரிவதனா
வாரணநுண்பொருளேயென்பவர்க்கில்லையல்லல்களே... ... ...(௧0)

வெண்பா.

அல்லல்களைந்தான்றனம்பொனுலகத்தி
னெல்லைபுகுவிப்பானீண்டுழவர்—நெல்லல்களைச்
செங்கழுநீர்கட்குந்திருநாரையூர்ச்சிவன்சேய்
கொங்கெழுதாரைங்கரத்தகோ... ... ... ... (௧௧)

கலித்துறை.

கோவிற்கொடியநமன்றமர்கூடாவகைவிடுவன்
காவிற்றிகழ்திருநாரைப்பதியிற்கரும்பனைக்கை
மேவற்கரியவிருமதத்தொற்றைமருப்பின்முக்க
ணேவிற்புருவத்திமையவடான்பெற்றயானையையே ... ... ... (௧௨)

வெண்பா.

யானேத்தியவெண்பாவென்னைநினைந்தடிமை
தானேசனாத்தனக்குநல்கினான்—றேனே
தொடுத்தபொழினாரையூர்ச்சூலம்வலனேந்தி
யெடுத்தமதமுகத்தவேறு ... ... ... (௧௩)

கலித்துறை.

ஏறியசீர்வீரணக்குடியேந்திழைக்கும்மிருந்தே
னூறியபூந்தார்க்குமரற்குமுன்னினைநண்ணலனாச்
சீறியவெம்பனைச்சிங்கத்தினுக்கிளையானைவிண்ணோர்
வேறியல்பாற்றொழுநாரைப்பதியுள்விநாயகனே ...... ...... (௧௪)

வெண்பா.

கனமதிள்சூழ்நாரையூர்மேவிக்கசிந்தார்
மனமருவினான்பயந்தவாய்ந்த—சினமருவு
கூசாரம்பூண்டமுகக்குஞ்சரக்கன்றென்றார்க்கு
மாசாரமோசொல்லுவான் ...... ... ...(௧௫)

கலித்துறை,

வானிற்பிறந்தமதிதவழும்பொழின் * மாமடுக்குந்
தேனிற்பிறந்தமலர்த்திருநாரைப்பதிதிகழுங்
கோனிற்பிறந்தகணபதிதன்னைக்குலமலையின்
மானிற்பிறந்தகளிறென்றுரைப்பரிவ்வையகத்தே ... ... (௧௬)

வெண்பா.

வையகத்தாரேத்தமதினாரையூர்மகிழ்ந்து
பொய்யகத்தாருள்ளம்புகலொழிந்து—கையகத்தோர்
மாங்கனிதன்கொம்பண்டம்பாசமமுமல்குவித்தா
னுங்கனிநஞ்சிந்தையமர்வான் ......... ... (௧௭)

---

* மா-வண்டு.

கலித்துறை.

அமராவமரர்தொழுஞ்சரணுனாயூர் தான்மகிழ்ந்த
குமராகுமரற்குமுன்னவனேகொடித்தேரவுணர்
தமராசறுத்தவன்றன்னிடைத்தோன்றினனேயெனநின்
றமராமனத்தவராழ்நரகத்திலழுந்துவரே ... ... (கஅ)

வெண்பா.

அவமதியாதுள்ளமேயல்லலறநல்ல
தவமதியாலேத்திச்சதிர்த்தோம்—நவமதியாங்
கொம்பன்விநாயகன்கொங்கார்பொழில்சூழ்நாரையூர்
நம்பன்சிறுவன்சீர்நாம் ............ ... ... (கக)

கலித்துறை.

நாந்தனமாமனமேத்துக்கண்டாயென்றுநாண்மலராற்
சூந்தனமாகவிருந்தனனாரைப்பதிதன்னுளே
சேர்ந்தனனேயைந்துசெங்கையனேநின்றிரண்மருப்பை
யேந்தினனேயென்னையாண்டவனேயெனக்கென்னையனே ......... (உ0)

திருச்சிற்றம்பலம்.

திருநாரையூர்விநாயகப்பிள்ளையார்திருவிரட்டைமணிமாலைமுற்றும்.

———oo———

திருச்சிற்றம்பலம்

நம்பியாண்டார்நம்பி அருளிச்செய்த

# கோயிற்றிருப்பண்ணியர்விருத்தம்.

———@———

நெஞ்சந்திருவடிக்கீழ்வைத்துநீண்மலர்க்கண்பனிப்ப
வஞ்சங்கடிந்துன்னைவந்தித்திலேனன்றுவானருய்ய
நஞ்சங்கருந்துபெருந்தகையேநல்லதில்லைநின்ற
வஞ்செம்பவளவண்ணவருட்கியானினியாரென்பரே ... ... ... (க)

என்புந்தழுவியவூனுநெகவகமேயெழுந்த
வன்பின்வழிவந்தவாரமிர்தேயடியேனுரைத்த
வன்புன்மொழிகள்பொறுத்திகொலாம்வளர்தில்லைதன்னுண்
மின்புன்மிளிர்சடைவீசிநின்றாடியவிண்ணவனே ...... ...... (உ)

அவநெறிக்கேவிழப்புக்கவிந்நானழுந்தாமைவாங்கித்
தவநெறிக்கேயிட்டதத்துவனேயத்தவப்பயனாஞ்
சிவநெறிக்கேயென்னையுய்ப்பவனேசெனனந்தொறுஞ்செய்
பவமறித்தாள்வதற்கோதில்லைநட்டம்பயில்கின்றதே ......... (ங)

பயில்கின்றிலேனின்றிறத்திருநாமம்பனிமலர்த்தார்
முயல்கின்றிலேனுன்றிருவடிக்கேயப்பமுன்னுதில்லை
யியல்கின்றநாடகச்சிற்றம்பலத்துளெந்தாயிங்ஙனே
யயர்கின்றநானெங்ஙனேபெறுமாறுநின்னாருளே ...... ...... (ச)

அருதிக்குவிம்மிநிவந்ததுவோவெள்ளிக்குன்றமஞ்சு
பருதிக்குழவியுமிழ்கின்றதேயொக்கும்பற்றுவிட்டோர்
கருதித்தொழுகழற்பாதமுங்கைத்தலநான்குமெய்த்த
சுருதிப்பதமுழங்குந்தில்லைமேயசுடரினுக்கே ...... ... ...... ... (௫)

சுடலைப்பொடியும்படுதலைமாலையுஞ்சூழ்ந்தவென்பு
மடலைப்பொலிமலர்மாலைமென்றோண்மேன்மயிர்க்கயிறு
மடலைப்பொலியயின்மூவிலைவேலுமணிகொடில்லை
விடலைக்கென்னானைக்கழகிதுவேதவினோதத்தையே ...... ...... (௬)

வேதமுதல்வன்றலையுந்தலையாயவேள்விதன்னு
னாதனவன் * எச்சனற்றலையுந்தக்கனார்தலையுங்
காதியதில்லைச்சிற்றம்பலத்தான்கழல்சூழ்ந்துநின்று
மாதவரொன்னோமறைமொழியாலேவழுத்துவதே ...... ...... (௭)

வழுத்தியசீர்த்திருமாலுலகுண்டுவன்பாம்புதன்னின்
கழுத்தருகேதுயின்றானுக்கப்பாந்தளைக்கங்கணமாச்
செழுத்திரணீர்த்திருச்சிற்றம்பலத்தான்றிருக்கையிட
வழுத்தியகல்லொத்தனனாயனாகியமாயவனே ............ ...... (௮)

மாயவன்முந்நீர்த்துயின்றவனன்றுமருதிடையே
போயவன்காணாதபூங்கழனல்லபுலத்தினர்நெஞ்
சேயவன்சிற்றம்பலத்துணின்றாடுங்கழலெவர்க்குந்
தாயவன்றன்பொற்கழலென்றலைமறைநன்னிழலே ...... ...... (௯)

நிழல்படுபூணெடுமாலயன்காணாமைநீண்டவரோ
தழல்படுபொன்னகலேந்தித்தமருகந்தாடித்தமைத்
தெழில்படவீசிக்கரமெறிநீர்த்தில்லையம்பலத்தே
குழல்படுசொல்வழியாடுவர்யாவர்க்குங்கூத்தினையே ......... (௧௦)

கூத்தனென்றுந்தில்லைவாணனென்றுங்குழுமிட்டிமையோ
ரேத்தனென்றுஞ்செவிமாட்டிசையாதேயிடுசுணங்கை
மூத்தவன்பெண்டிர்குணலையிட்டாலுமுகினிறத்த
சாத்தனென்றாலும்வருமோவிவளுக்குத்தண்ணெனவே ...... ...... (௧௧)

தண்ணார்புனற்றில்லைச்சிற்றம்பலந்தன்னின்மன்னிநின்ற
விண்ணாளனைக்கண்டநாள்விருப்பாயென்னுடன்முழுதுங்
கண்ணாங்கிலோதொழக்கையாங்கிலோதிருநாமங்கள்கற்
றெண்ணும்பரிசெங்கும்வாயாங்கிலோவெனக்கிப்பிறப்பே ... ... (௧௨)

பிறவியிற்பெற்றபயனொன்றுகண்டிலம்பேரொலிநீர்
நறவியல்பூம்பொழிற்றில்லையுணாடகமாடுகின்ற
துறவியல்சோதியைச்சுந்தரக்கூத்தனைத்தொண்டர்தொண்டர்க்
குறவியல்வாற்கண்கள்கண்டுகண்டின்பத்தையுண்டிடவே ... ... (௧௩)

உண்டேனவரருளாரமிர்தத்தினையுண்டலுமே
கண்டேனெடுத்தகழலுங்கனலுங்கவித்தகையு
மொண்டேன்மொழியினைநோக்கியநோக்குமொளிநகையும்
வண்டேன்மலர்த்தில்லையம்பலத்தாடுமணியினையே ...... ......(௧௪)

---

* எச்சன் - யாகத்தலைவன்.

மணியொப்பன திருமான்மகுடத்துமலர்க்கமலத்
தணியொப்பனவவன்றன்முடிமேலடியேனிடர்க்குத்
துணியச்சமைந்தநல்லீர்வாளனையனசூழ்பொழில்க
டிணியத்திகழ்தில்லையம்பலத்தான்றன்றிருந்தடியே ...... ...... (கரு)

அடியிட்டகண்ணினுக்கோவவனன்பினுக்கோவவுணர்
செடியிட்டவான்றுயர்சேர்வதற்கோதில்லையம்பலத்து
முடியிட்டகொன்றைநன்முக்கட்பிரானன்றுமூவுலகு
மடியிட்டகண்ணனுக்கீந்ததுவாய்ந்தவரும்படையே ...... (கசு)

படைபடுகண்ணிதன்பங்கதென்றில்லைப்பரம்பரவல்
விடைபடு * கேதுகவிண்ணப்பங்கேளென்விதிவசத்தால்
கடைபடுசாதிபிறக்கினுநீவைத்தருளுகண்டாய்
புடைபடுகிண்கிணித்தாட்செய்யபாதமென்னுள்புகவே ......... (கஎ)

புகவுகிர்வாளெயிற்றுனிலங்கீண்டுபொறிகலங்கி
மிகவுகுமாற்கரும்பாதத்தனேல்வியன்றில்லைதன்னு
ணகவுகுலாமதிக்கண்ணியற்கங்கணனென்றனன்றுந்
தகவுகொலாந்தகவன்றுகொலாமென்றுசங்கிப்பனே ...... ... (கஅ)

சங்கோர்கரத்தன்மகன்றக்கன்றனவர்நான்முகத்தோன்
செங்கோலவிந்திரன்றேடலையூர்வேள்விசீருடல
மங்கோலவெவ்வழலாயிட்டழிந்தெரிந்தற்றனவா
லெங்கோனெழிற்றில்லைக்கூத்தன்கடைக்கண்சிவந்திடவே ... ... (ககூ)

ஏவுசெய்மேருத்தடக்கையெழிற்றில்லையம்பலத்து
மேவுசெய்மேனிப்பிரானன்றியங்கணர்மிக்குளரோ
காவுசெய்காளத்திக்கண்ணுதல்வேண்டும்வரங்கொடுத்துத்
தேவுசெய்வான்வாய்ப்புனலாட்டியதிறல்வேடுவனே ...... ......(உ0)

வேடனென்றாள்வில்விசயற்குவெங்கணையன்றளித்த
கோடனென்றாள்குழைக்காதனென்றாளிடக்காதிலிட்ட
தோடனென்றாடொகுசீர்த்தில்லையம்பலத்தாடுகின்ற
சேடனென்றாண்மங்கையங்கைச்சரிவளைசிந்தினவே ......... ...... (உக)

சிந்திக்கவுமுரையாடவுஞ்செம்மலராற்கழல்கள்
வந்திக்கவுமனம்வாய்கரமென்னும்வழிகள்பெற்றுஞ்
சந்திக்கிலர்சிலர்தெண்ணர்தண்ணார்தில்லையம்பலத்து
ளந்திக்கமர்திருமேனியெம்மான்றனருள்பெறவே ...... .... (உஉ)

அருடருசீர்த்தில்லையம்பலத்தான்றனருளினன்றிப்
பொருடருவானத்தரசாதலிற்புழுவாதனன்றுஞ்
சுருடருசெஞ்சடையோனருளேற்றுறவிக்குநன்று
மிருடருகீழேழ்நரகத்துவீழுமிருஞ்சிறையே .... ...... (உஙு)

சிறைப்புளவாம்புனல்சூழ்வயற்றில்லைச்சிற்றம்பலத்துப்
பிறைப்பிளவார்சடையோன்றிருநாமங்களேபிதற்ற
மிறைப்புளவாகிவெண்ணீறணிந்தோடேந்தும்வித்தகர்தம்
முறைப்புளவோவயன்மாலினொடும்பர்தநாயகற்கே. ... (உச)

---

* கேதுகன் - கொடியையுடையவன்.

அகழ்சூழ்மதிற்றில்லையம்பலக்கூத்தவடியமிட்ட
முகிழ்சூழிலையுமுகைகளுமேயுங்கொல்கற்பகத்தின்
திகழ்சூழ்மலர்மழைதூவித்திறம்பயில்சிந்தையராய்ப்
புகழ்சூழிமையவர்போற்றித்தொழுநின்றன்பூங்கழற்கே ...... ......(உரு)

பூந்தண்பொழில்சூழ்புலியூர்ப்பொலிசெம்பொனம்பலத்து
வேந்தன்றனக்கன்றியாட்செய்வதென்னேவிரிதுணிமே
லாந்தண்பழையவவிழையன்பாகியபண்டைப்பறைச்
சேந்தன்கொடுக்கவதுவுந்திருவமிர்தாகியதே ... ... (உசு)

ஆகங்கனகனைக்கீறியகோளரிக்கஞ்சிவிண்ணோர்
பாகங்கனங்குழையாயருளாயெனத்தில்லைப்பிரான்
வேகந்தருஞ்சிம்புள்விட்டரிவெங்கதஞ்செற்றிலனேன்
மோகங்கலந்தன்றுலந்ததன்றேவிந்தமூவுலகே ... ... (உஎ)

மூவுலகத்தவரேத்தித்தொழுதில்லைமுக்கட்பிராற்
கேவுதொழிற்செய்யப்பெற்றவர்யாரெனிலேர்விடையாய்த்
தாவுதொழிற்பட்டெடுத்தனன்மாலயன்சாரதியா
மேவிரதத்தொடுபூண்டதொன்மாமிக்கவேதங்களே ... (உஅ)

வேதகச்சிந்தைவிரும்பியவன்றில்லையம்பலத்து
மேதகக்கோயில்கொண்டோன்சேயவன்வீரணக்குடிவாய்ப்
போதகப்போர்வைப்பொறிவாளரவரைப்பொங்குசினச்
சாதகப்பெண்பிள்ளைதன்னையன்றந்ததலைமகனே. ...... ...... (உகூ)

தலையவன்பின்னவன்றாய்தந்தையிந்தத்தராதலத்து
நிலையவநீக்குதொழில்புரிந்தோனடுவாகிநின்ற
கொலையவன்சூலப்படையவனூலத்தெழுகொழுந்தி
னிலையவன்காண்டற்கருந்தில்லையம்பலத்துள்ளிறையே...... ...(ஙo)

இறையுந்தெரிகிலர்கண்டுமெழிற்றில்லையம்பலத்து
ளுறையும்புனற்சென்னியோனருளாலன்றடுகரிமே
னிறையும்புகழ்த்திருவாரூரனுநிறைதார்ப்பரிமே
னறையுங்கமழ்தொங்கல்வில்லவனும்புக்கநல்வழியே ... ... (ஙக)

நல்வழிநின்றார்பகைநன்றுநொய்யருறவிலென்னுஞ்
சொல்வழிகண்டனம்யாந்தொகுசீர்த்தில்லையம்பலத்து
வில்வழிதானவரூரெரித்தோன்வியன்சாக்கியனூர்
கல்வழிநேர்நின்றளித்தனன்காண்கசிவகதியே ... ... ...... (ஙஉ)

கதியேயடியவரெய்ப்பினில்வைப்பாக்கருதிவைத்த
நிதியேநிமிர்புன்சடையமிர்தேநின்னையென்னுள்வைத்த
மதியேவளர்தில்லையம்பலத்தாய்மகிழ்மாமலையாள்
பதியேபொறுத்தருளாய்கொடியேன்செய்தபல்பிழையே ... ...(ஙங)

பிழையாயினவேபெருக்கிநின்பெய்கழற்கன்புதன்னி
னுழையாதசிந்தையினேனையுமந்தாகினித்துவலை
முழையார்தருதலைமாலைமுடித்தமுழுமுதலே
புழையார்கரியுரித்தோய்தில்லைநாதபொறுத்தருளே ... ... (ஙச)

பொறுத்திலனேனும்பன்னஞ்சினைப்பொங்கெரிவெங்கதத்தைச்
செறுத்திலனேனுநந்தில்லைப்பிரானைத்திரிபுரங்கள்
கறுத்திலனேனுங்கமலத்தயன்கதிர்மாமுடியை
யறுத்திலனேனுமமரருக்கென்கொலடுப்பனவே ........... (ருரு)

அடுக்கியசீரையராயகலேந்தித்தசையெலும்பி
லொடுக்கியமேனியொடுணிரப்பாரொள்ளிரணியனை
நடுக்கியமாநரசிங்கனைச்சிம்புளதாய்நரல
விடுக்கியபாதன்றன்றில்லைதொழாவிட்டவேழையரோ ... ...(ருசு)

ஏழையென்புன்மைகருதாதிடையறுவன்பெனக்கு
வாழிநின்பாதமலர்க்கேமருவவருளுகண்டாய
மாழைமென்னோக்கிதன்பங்கவளர்தில்லையம்பலத்துப்
போழிளந்திங்கள்சடைமுடிமேல்வைத்தபுண்ணியனே ... ...(ருஎ)

புண்ணியனேயென்றுபோற்றிசெயாதுபுலன்வழியே
நண்ணியனேற்கினியாறுகொலாம்புகலென்னுள்வந்திட்
டெண்ணியனேதில்லையம்பலவாவலர்திங்கள்வைத்த
கண்ணியனேசெய்யகாமன்வெளுப்பக்கறுத்தவனே ... ...(ருஅ)

கறுத்தகண்டாவண்டவாணுவருபுனற்கங்கைசடை
செறுத்தசிந்தாமணியேதில்லையாயென்னைத்தீவினைக
ளொறுத்தல்கண்டாற்சிரியாரோபிறரென்னுறுதுயரை
யறுத்தலசெய்யாவிடினர்க்கோவருஞ்சொலரும்பழியே ... ...(ருக)

பழித்தக்கவுமிகழான்றில்லையான்பண்டுவேட்டுவனும்
பழித்திட்டிறைச்சிகலையனளித்தவிருக்குழங்கன்
மொழித்தக்கசீரதிபத்தன்படுத்திட்டமீன்முழுது
மிழித்தக்கவென்றுதமிர்துசெய்தானென்றியம்புவரோ... ... (சு௦)

வரந்தருமாறிதன்மேலுமுண்டேவயற்றில்லைதன்னுட்
புரந்தரன்பாருழநின்றபிரான்புலைப்பொய்மையிலே
நிரந்தரமாய்நின்றவென்னையுமெய்ம்மையிற்றன்னடியார்
தரந்தருவான்செல்வத்தாழ்த்தினன்பேசருந்தன்மையிதே ... ...(சுக)

தன்றுடரித்தாரியாவர்க்குமீளாவழிதருவான்
குன்றுமதிற்றில்லைமூதூர்க்கொடிமேல்விடையுடையோன்
மன்றுடவும்பின்னுமற்றவன்பாதம்வணங்கியங்கே
யொன்றுரிரண்டில்விழுவரந்தோசிலவூமர்களே ... ...(சுஉ)

களைகணிலாமையுந்தன்பொற்கழற்றுணையாதன்மையுந்
துளைகணிலாமுகக்கைக்கரிப்போர்வைச்சுரமிணையான்
றளைகணிலாமலாக்கொன்றையன்றண்புலியூரனென்றேன்
வளைகணிலாமைவணங்குமநங்கனவரிசிலையே ... ... (சுந)

வரித்தடந்திண்சிலைமன்மதனுதலுமாழிவட்டந்
தரித்தவன்றன்மகனென்பதோர்பொற்புந்தவநெறிக
டெரித்தவன்றில்லையுட்சிற்றம்பலவன்றிருப்புருவ
நெரித்தலுங்கண்டதுவெண்பொடியேயன்றிநின்றிலவே... ... (சுச)

நின்றிலவேவிசயன்றெடுஞ்சிந்தைகளிப்புறநீ
டென்றில்லைமாநடமாடும்பிரான்றன்றிருமலைமேற்
றன்றலையானடந்தேறிச்சரங்கொண்டிழிந்ததென்பர்
கன்றினையேவிளமேலெறிந்தார்த்தகரியவனே ... ... ...(சரு)

கருப்புருவத்திருவார்த்தைகள்கேட்டலுங்கண்பனியேன்
விருப்புருவத்தினொடுள்ளமுருகேன்விதிர்விதிரே
னிருப்புருவச்சிந்தையென்னைவந்தாண்டதுமெவ்வணமோ
பொருப்புருவப்புரிசைத்தில்லையாடல்புரிந்தவனே ... ... ...(சசு)

புரிந்தவன்பின்றியும்பொய்மையிலேயுந்திசைவழியே
விரிந்தகங்கைம்மலர்சென்னியிற்கூப்பில்வியனமனூர்
பரிந்தவனூர்புகலில்லைபதிமூன்றெரியவம்பு
தெரிந்தவெங்கோன்றன்றிணையார்புனல்வயற்சேண்டில்லையே... ...(சஎ)

சேண்டில்லைமாநகர்த்திப்பியக்கூத்தனைக்கண்டுமென்பு
பூண்டிலைநின்னைமறந்திலையாங்கவன்பூங்கழற்கே
மாண்டிலையின்னம்புலன்வழியேவந்துவாழ்ந்திடுவான்
மீண்டனையென்னையென்செய்திடவோசிந்தைநீவிளம்பே... ...(சஅ)

விளவைத்தளர்வித்தவிண்டுவுந்தாமரைமேலயனு
மளவிற்கறியாவகைநின்றவன்றுமடுக்கல்பெற்ற
தளவிற்றிருநகையாளுநின்பாகங்கொறண்புலியூர்க்
களவிற்கனிபுரையுங்களவார்சடைக்கங்கையனே... ... ...(சகூ)

கங்கைவலமிடம்பூவலங்குண்டலந்தோடிடப்பாற்
றங்குங்கரம்வலம்வெம்மழுவீயிடம்பாந்தள்வலஞ்
சங்கமிடம்வலந்தோலிடமாடைவலமக்கிட
மங்கஞ்சரியம்பலவன்வலங்காணிடமணங்கே... ...... ...(ரு0)

அணங்காடகக்குன்றமாதறவாட்டியவாலமர்தாட்
கிணங்காயவன்றில்லையெல்லைமிதித்தலுமென்புருகா
வணங்காவழுத்தாவிழாவெழும்பாவைத்தவாமதர்த்த
குணங்காணிவளென்னவென்றுகொலாம்வந்துகூடுவதே... ... ...(ருக)

கூடுவதம்பலக்கூத்தனடியார்குழுவுதொறுந்
தேடுவதாங்கவனுக்கமச்செவ்வழியவ்வழியே
யோடுவதுள்ளத்திருத்துவதொண்சுடரைப்பிறவி
வீடுவதாகநினையவல்லோர்செய்யும்வித்தகமே...... ...... ...(ருஉ)

வித்தகச்செஞ்சடைவெண்மதிக்கார்நிறக்கண்டத்தெண்டோண்
மத்தகக்கைம்மலைப்போர்வைமதிற்றில்லைமன்னனைத்தஞ்
சித்தகக்கோயிலிருத்துந்திறத்தாகமிகர்க்கல்லாற்
புத்தகப்பேய்களுக்கெங்கித்ததோவரன்பொன்னடியே... ... ...(ருந)

பொன்னம்பலத்துறைபுண்ணியனென்பர்புயன்மறந்த
கன்னன்மைதீரப்புனிற்றுக்கலிக்காமற்கன்றுபுன்கூர்
மன்னுமழைபொழிந்தீரறுவேலிகொண்டாங்கவற்கே
பின்னும்பிழைதவிர்த்தீரறுவேலிகொள்பிஞ்ஞகனே... ... ... (ருச)

நேசனல்லேனினையேன்வினைதீர்க்குந்திருவடிக்கீழ்
வாசநன்மாமலரிட்டிறைஞ்சேனென்றன்வாயதனாற்
றேசனென்னானைபொன்னார்திருச்சிற்றம்பலநிலவு
மீசனென்னேன்பிறப்பென்னாய்க்கழியுங்கொலென்றனக்கே... ...(௫௫)

தனந்தலைசக்கரம்வானத்தலைமைகுபேரன்றக்கன்
வனந்தலையேறடர்த்தோன்வாசவனுயிர்பல்லுடலூர்
சினந்தலைக்காலன்பகல்காமன்றானவர்தில்லைவிண்ணோ
ரினந்தலைவன்னருளான்முனிவாற்பெற்றிகந்தவரோ...... ... ...(௫௬)

அவமதித்தாழ்நரகத்திலிடப்படுமாதர்களுந்
தவமதித்தொப்பிலவொன்னவிண்ணாளுந்தகைமையரு
நவநிதித்தில்லையுட்சிற்றம்பலத்துநடம்பயிலுஞ்
சிவநிதிக்கேநினையாருநினைந்திட்டசெல்வருமே...... ... ...(௫௭)

வருவாசகத்தினின்முற்றுணர்ந்தோனைவண்டில்லைமன்னைத்
திருவாதவூர்ச்சிவபாத்தியன்செய்திருச்சிற்றம்பலப்
பொருளார்தருதிருக்கோவைகண்டேயுமற்றப்பொருளைத்
தெருளாதவுள்ளத்தவர்கவிபாடிச்சிரிப்பிப்பரோ... ...... ...(௫௮)

சிரித்திட்டசெம்பவளத்தின்றிரளுஞ்செழுஞ்சடைமேல்
விரித்திட்டபைங்கதிர்த்திங்களும்வெங்கதப்பாந்தளுந்தீத்
தரித்திட்டவங்கையுஞ்சங்கச்சுருளுமென்னெஞ்சினுள்ளே
தெரித்திட்டவாதில்லைச்சிற்றம்பலத்துத்திருநடனே... ...... ...(௫௯)

நடஞ்செய்சிற்றம்பலத்தான்முனிவென்செய்யுங்காமனன்று
கொடுஞ்சினத்தீவிழித்தாற்குக்குளிர்ந்தனன்விற்கொடும்பூண்
விடுஞ்சினத்தானவர்வெந்தலர்வெய்தெனவெங்கதத்தை
யொடுங்கியகாலனந்நாணின்றுதையுணாவிட்டனனே... ... ...(௬௦)

விட்டங்கொளிமணிப்பூண்டிகழ்வன்மதன்மெய்யுராக்கி
லிட்டங்கரியனல்லானல்லனம்பலத்தெம்பரன்மேற்
கட்டங்கியகணையெய்தலுந்தன்னைப்பொன்னார்முடிமேற்
புட்டங்கினான்மகனாமென்றுபார்க்கப்பொடிந்தனனே...... ...(௬௧)

பொடியேர்தருமேனியனாகிப்பூசல்புகவடிக்கே
கடிசேர்கணைகுளிப்பக்கண்டுங்காயிற்கருவியில்லா
வடியேபடவமையுங்கணையென்றவரகுணன்றன்
முடியேதருகழலம்பலத்தாடிதன்மொய்கழலே... ...... ...(௬௨)

கழலும்பசுபாசராமிமையோர்தங்கழல்பணிந்திட்
டழலுமிருக்குந்தருக்குடையோரிடப்பால்வலப்பாற்
றழலுந்தமருகமும்பிடித்தாடிசிற்றம்பலத்தைச்
சுழலுமொருகாலிருகாலவர்வல்லதோன்றல்களே ...... ...(௬௩)

தோன்றலைவெண்மதிதாங்கியைத்துள்ளியமாலயற்குத்
தான்றலைபாதங்கள்சார்வரியோன்றன்னைச்சார்ந்தவர்க்குத்
தேன்றலையான்பாலதுகலந்தாலன்னசீரனைச்சீர்
வான்றலைநாதனைக்காண்பதென்றோதில்லைமன்றிடையே... ... ...(௬௪)

மன்றங்கமர்திருச்சிற்றம்பலவவடவனத்து
மின்றங்கிடைக்குந்திநாடகமாடக்கொல்வெண்டரங்கந்
துன்றங்கிளர்கங்கையானைசுடுசினத்தீயரவக்
கன்றங்கடைசடைமேலடையாவிட்டகைதவமே...... ... ...(சுரு)

தவனைத்தவத்தவர்க்கன்பனைத்தன்னடியெற்குதவுஞ்
சிவனைச்சிவக்கத்திரிபுரத்தைச்சிவந்தானைச்செய்ய
வவனைத்தவளத்திருநீறனைப்பெருநீர்கரந்த
பவனைப்பணியுமினும்பண்டைவல்வினைபற்றறவே ........ ...(சுசு)

பற்றறமுப்புரம்வெந்ததுபைம்பொழிற்றில்லைதன்னுட்
செற்றருமாமணிக்கோயிலினின்றதுதேவர்கணஞ்
சுற்றருநின்புகழேத்தித்திரிவதுசூழ்சடையோய்
புற்றரவாட்டித்திரியுமதுவொருபுல்லனவே ............ ...(சுஎ)

புல்லறிவின்மற்றைத்தேவரும்பூம்புலியூருணின்ற
வல்லெறிமாமதிக்கண்ணியனைப்போலருளுவரோ
கல்லெறிந்தானுந்தன்வாய்நீர்கதிர்முடிமேலுகுத்த
நல்லறிவாளனுமீளாவழிசென்றுநண்ணினரோ ............ ...(சுஅ)

நண்ணியதீவினைநாசஞ்செலுத்திநமனுலகத்
தெண்ணினைநீக்கியிமையோருலகத்திருக்கலுற்றீர்
பெண்ணினோர்பாகத்தன்சிற்றம்பலத்துப்பெருநடனைக்
கண்ணிணையார்தரக்கண்டுகையாரத்தொழுமின்களே...... ... (சுகூ)

கைச்செல்வமெய்திடலாமென்றுபின்சென்றுகண்குழித்தல்
பொய்ச்செல்வர்செய்திடும்புன்மைகட்கேயென்றும்பொன்றலில்லா
வச்செல்வமெய்திடவேண்டுதியேதில்லையம்பலத்து
விச்செல்வன்பாதங்கருதிரந்தேனுன்னையென்னெஞ்சமே......... ...(எ0)

திருச்சிற்றம்பலம்.

**கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம் முற்றும்.**

---

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி அருளிச்செய்த

# திருத்தொண்டர் திருவந்தாதி.

---

துதிகவி.

பொன்னிவடகரைசேர்நாரையூரிற்புழைக்கைமுக
மன்னனருபத்துமூவர்பதிதேமரபுசெயல்
பன்னவத்தொண்டத்தொகைவகைபல்குமந்தாதிதனைச்
சொன்னமறைக்குலநம்பிபொற்பாதத்துணைதுணையே

தில்லைவாழந்தணர்.

செப்பத்தகுபுகழ்த்தில்லைப்பதியிற்செழுமறையோ
ரொப்பப்புவனங்கண்மூன்றினுமும்பரினாரிைத்த
வப்பர்க்கமுதத்திருநடர்க்கந்திப்பிறையணிந்த
துப்பர்க்குரிமைத்தொழில்புரிவோர்தமைச்சொல்லுதுமே ...... ...(க)

திருநீலகண்டக்குயவநாயனர்.

சொல்லச்சிவன்றிருவாணைதன்றூமொழிதோணசையை
யொல்லைத்துறந்துருமூத்ததற்பின்னுமைகோனருளால்
வில்லைப்புறாநுதலாளொடிளமைபெற்றின்பமிக்கான்
றில்லைத்திருநீலகண்டக்குயவனுஞ்செய்தவனே ... ... (உ)

இயற்பகைநாயனர்.

செய்தவர்வேண்டியதியாதுங்கொடுப்பச்சிவன்றனைக்
கைதவம்பேசிநின்காதலியைத்தருகென்றலுமே
மைதிகழ்கண்ணியையீந்தவன்வாய்ந்தபெரும்புகழ்வந்
தெய்தியகாவிரிப்பூம்பட்டினத்துளியற்பகையே... ... ... (ங)

இளையான்குடிமாறநாயனர்.

இயலாவிடைச்சென்றமாதவர்க்கின்னமுதாவிதைத்த
வயலார்முளைவித்துவாரிமனையலக்கால்வறுத்துச்
செயலார்பயிர்விழுத்தீங்கறியாக்குமவன்செழுநீர்க்
கயலாரிளையான்குடியுடைமாறனெங்கற்பகமே... ... ...(ச)

மெய்ப்பொருணயனர்.

கற்றநன்மெய்த்தவன்போலொருபொய்த்தவன்காய்சினத்தாற்
செற்றவன்றன்னையவனைச்செறப்புகலுந்திருவாய்
மற்றவன்றத்தாநமரோயெனச்சொல்லிவானுலகம்
பெற்றவன்சேதிபன்மெய்ப்பொருளாமென்றுபேசுவரோ ...... (ரு)

விறன்மிண்டநாயனர்.

பேசும்பெருமையவ்வாரூரனையும்பிரானவனு
மீசன்றனையும்புறகுதட்டென்றவனீசனுக்கே
நேசனெனக்கும்பிரான்மனைக்கேபுகநீடுதென்றல்
வீசும்பொழிற்றிருச்செங்குன்றமேயவிறன்மிண்டனே ... ......(சு)

அமர்நீதிநாயனர்.

மிண்டும்பொழிற்பழையாறையமர்நீதிவெண்பொடியின்
முண்டந்தரித்தபிராற்குநல்லூரின்முன்கோவணநேர்
கொண்டிங்கருளென்றுதன்பெருஞ்செல்வமுந்தன்னையுந்தன்
றுண்டமதிநுதலாளையுமீந்ததொழிலினனே ......... ...... (எ)

சுந்தரமூர்த்திநாயனர்.

தொழுதும்வணங்கியுமாலயன்றேடருஞ்சோதிசென்றுங்
கெழுதுந்தமிழ்ப்பழவாவணங்காட்டியெனக்குன்குடி
முழுதுமடிமைவந்தாட்செயெனப்பெற்றவன்முரறே
ளெழுகுமலரினற்றொெம்பிரானம்பியாரூரனே ...... ...... (அ)

எறிபத்தநாயனார்.

ஊர்மதின்மூன்றட்டவுத்தமற்கென்றோருயர்தவத்தோன்
றார்மலர்கொய்யாவருபவன்றண்டின்மலர்பறித்த
வூர்மலைமேற்கொளும்பாகருடறுணியாக்குமவ
னேர்மலிமாமதில்சூழ்கருவூரிலெறிபத்தனே ........... ...... (கூ)

ஏனாதிநாதநாயனார்.

பத்தனையேனாதிநாதனைப்பார்நீடெயின்தன்னு
ளத்தனைத்தன்னோடமர்மலைந்தானெற்றிநீறுகண்டு
கைத்தனிவாள்வீடொழிந்தவன்கண்டிப்பநின்றருளு
நித்தனையீழக்குலதீபனென்பரிந்நீணிலத்தே ...... ...... (க0)

கண்ணப்பநாயனார்.

நிலத்திற்றிகழ்திருக்காளத்தியார்திருநெற்றியின்மே
லலத்திற்பொழிதருகண்ணிற்குருதிகண்டுண்ணடுங்கி
வலத்திற்கடுங்கணையாற்றன்மலர்க்கண்ணிடந்தப்பினான்
குலத்திற்கிராதனங்கண்ணப்பனாமென்றுகூறுவரோ ......... ......(கக)

குங்கிலியக்கலயநாயனார்.

ஏய்ந்தகயிறுதன்கண்டத்திற்பூட்டியெழிற்பனந்தாட்
சாய்ந்தசிவனிலைத்தானென்பர்காதலிதாலிகொடுத்
தாய்ந்தநற்குங்கிலியங்கொண்டனற்புகைகாலனைமுன்
காய்ந்தவரற்கிட்டதென்கடவூரிற்கலயனையே... ...... ......(கஉ)

மானக்கஞ்சாறநாயனார்.

கலசமுலைக்கன்னிகாதற்புதல்விகமழ்குழலை
நலசெய்தவத்தவன்பஞ்சவடிக்கிவைநல்கெனலு
மலசுமெனக்கருதாதவள்கூந்தலரிந்தளித்தான்
மலைசெய்மதிற்கஞ்சைமானக்கஞ்சாறனெனும்வள்ளலே... ......(கஙு)

அரிவாட்டாயநாயனார்.

வள்ளற்பிராற்கமுதேந்திவருவோனுகலுமிங்கே
வெள்ளச்சடையாயமுதுசெய்யாவிடிலென்றலையைத்
தள்ளத்தகுமென்றுவாட்பூட்டியதடங்கையினன்கா
ணள்ளற்பழனக்கணமங்கலத்தரிவாட்டாயனே ...... ......(கச)

ஆனாயநாயனார்.

தாயவன்யாவுக்குந்தாழ்சடைமேற்றனித்திங்கள்வைத்த
தூயவன்பாதந்தொடர்ந்துதொல்சீர்துளையாற்பரவும்
வேயவன்மேன்மழநாட்டுவிரிபுனன்மங்கலக்கோ
னாயவனானாயனென்னையுவந்தாண்டருளினனே ...... ...... ... (கரு)

சுந்தரமூர்த்திநாயனார்.

அருட்டுறையத்தற்கடிமைப்பட்டேனினியல்லனென்னும்
பொருட்டுறையாவதென்னேயென்னவல்லவன்பூங்குவளை
யிருட்டுறைநீர்வயனாவற்பதிக்கும்பிரானடைந்தோர்
மருட்டுறைநீக்கிநல்வான்வழிகாட்டிடவல்லவனே ... ... (கசு)

முர்த்திநாயனர்.

அவந்திரிகுண்டமணுவதின்மாள்வனென்றன்றலவாய்ச்
சிவன்றிருமேனிக்குச்செஞ்சந்தனமாச்செழுமுழங்கை
யுவந்தொளிர்பாறையிற்றேய்த்துவொண்டவொண்மூர்த்திதன்னூர்
நிவந்தபொன்மாடமதுராபுரியென்னுநீள்பதியே... ... ... (கஎ)

முருகநாயனர்.

பதிகந்திகழ்தருபஞ்சாக்கரம்பயினுவினன்சேர்
மதியஞ்சடையாற்கலர்தொட்டணபவன்யான்மகிழ்ந்து
துதியங்கழற்சண்பைநாதற்குத்தோழன்வன்றொண்டனம்பொன்
னதிகம்பெறும்புகலூர்முருகன்னெனுமந்தணனே ... ... (கஅ)

உருத்திரபசுபதிநாயனர்.

அந்தாழ்புனறன்னிலல்லும்பகலுநின்றுதரத்தா
லுந்தாதவன்பொடுருத்திரஞ்சொல்லிக்கருத்தமைந்த
பைந்தாருருத்திரபசுபதிதன்னற்பதிவயற்கே
நந்தார்திருத்தலையூரொன்றுரைப்பரிந்நானிலத்தே... ... ...(கக)

திருநாளைப்போவார்நாயனர்.

நீர்வார்புகழ்த்தில்லையம்பலத்தானருள்பெற்றுநாளைப்
போவானவனும்புறத்திருத்தொண்டன்றன்புன்புலைபோய்
மூவாயிரவர்கைகூப்பமுனியாயவன்பதிதான்
மாவார்பொழிறிகழாதனூரொன்பரிம்மண்டலத்தே ... ... (உ0)

திருக்குறிப்புத்தொண்டநாயனர்.

மண்டும்புனற்சடையான்றமர்தூசெற்றிவாட்டும்வகை
விண்டுமழைமுகில்வீடாதொழியின்யான்வீவனென்று
முண்டம்படர்பாறைமுட்டுமெழிலார்திருக்குறிப்புத்
தொண்டன்குலங்கச்சியேகாலியர்தங்கடொல்குலமே... ... (உக)

தண்டீசநாயனர்.

குலமேறியசேய்ஞலூரிற்குரிசில்குறைகடல்சூழ்
தலமேறியவிறற்சண்டிகண்டீர்தந்தைதாளிரண்டும்
வலமேறியமழுவாலெறிந்திசன்மணிமுடிமே
லலமேறியபால்சொரிந்தலர்சூட்டியநன்னிதியே... ... ...(உஉ)

சுந்தரமூர்த்திநாயனர்.

நிதியார்துருத்திதென்வேள்விக்குடியாய்நினைமறந்த
மதியேற்கறிகுறிவைத்தப்புகர்பின்னைமாற்றிடென்று
துதியாவருள்சொன்னவாற்றிவாரிடைப்பெற்றவன்கா
ணதியார்புனல்வயனுவலர்கோனென்னுநற்றவனே ... ... (உ௩)

திருநாவுக்கரசுநாயனர்.

நற்றவனல்லூர்ச்சிவன்றிருப்பாதந்தன்சென்னிவைக்கப்
பெற்றவன்மற்றிப்பிறப்பறவீரட்டர்பெய்கழற்கு
ளுற்றவனுற்றவிடமடையாரிடவொள்ளமுதாத்
துற்றவனாமூரினாவுக்கரசெனுந்தூமணியே... ... ... (உச)

மணியினைமாமறைக்காட்டுமருந்தினைவண்மொழியாற்
றிணியனநீள்கதவந்திறப்பித்தனதெண்கடலிற்
பிணியனவன்கன்மிதப்பித்தசைவப்பெருநெறிக்கே
யணியனநாவுக்கரையர்பிரான்றனருந்தமிழே ... ... ... (௨௫)

குலச்சிறைநாயனார்.

அருந்தமிழாகரன்வாதிலமணைக்கழுநுதிமே
லிருந்தமிழ்நாட்டிடையேற்றுவித்தோனெழிற்சங்கம்வைத்த
பெருந்தமிழ்மீனவன்றன்னதிகாரிபிரசமல்கு
குருந்தவிழ்சாரன்மணமேற்குடிமன்குலச்சிறையே ...... ...(௨௬)

பெருமிழலைக்குறும்பநாயனார்.

சிறைநன்புனற்றிருநாவலூராளிசெழுங்கயிலைக்
கிறைநன்கழலிணையெய்துமிவனருள்பெற்றவின்றே
பிறைநன்முடியன்னடியடைவேனென்றுடல்பிரிந்தா
னறைநன்மலர்த்தார்மிழலைக்குறும்பனெனுநம்பியே ... ...(௨௭)

காரைக்காலம்மையார்.

நம்பன்றிருமலைநான்மிதியேனென்றுதாளிரண்டு
மும்பர்மிசைத்தலையானடந்தேறவுமைநகலுஞ்
செம்பொன்னுருவனென்னம்மையெனப்பெறறவள்செழுந்தேன்
கொம்பினுகுகாரைக்காலினின்மேயகுலதனமே ...... ... (௨௮)

அப்பூதியடிகணாயனார்.

தனமாவதுதிருநாவுக்கரசின்சரணமென்று
மனமார்புனற்பந்தர்வாழ்த்திவைத்தாங்கவன்வண்டமிழ்க்கே
யினமாத்தனதுபெயரிடப்பெற்றவனெங்கள்பிரா
னனமார்வயற்றிங்களூரினில்வேதியனப்பூதியே ... ... (௨௯)

திருநீலநக்கநாயனார்.

பூதிப்புயத்தர்புயத்திற்சிலந்திபுகலுமஞ்சி
யூதித்துமிந்தமனைவியைநீப்பவுப்பாலவெல்லாம்
பேதித்தெழுந்தனகாணென்றுபிஞ்ஞகன்காட்டுமவ
னீதித்திகழ்சாத்தைநீலநக்கன்னெனும்வேதியனே ...... ... (௩௦)

நமிநந்தியடிகணாயனார்.

வேதமறிக்கரத்தாரூரரற்குவிளக்குநெய்யைத்
தீதுநெறியமண்கையரட்டாவிடத்தெண்புனலா
லேதமுறுசவருகவொன்றன்றுவிளக்கெரித்தா
னூதனெழிலேமப்பேறூரதிபனமிநந்தியே ... ... (௩௧)

சுந்தரமூர்த்திநாயனார்.

நந்திக்குநம்பெருமாற்குநல்லாரூரினாயகற்குப்
பந்திப்பரியனசெந்தமிழ்பாடிப்படர்புனலிற்
சிந்திப்பரியனசேவடிபெற்றவன்சேவடியே
வந்திப்பவன்பெயர்வன்றொண்டனென்பரிவ்வையகத்தே ... (௩௨)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

வையமகிழயாம்வாழவமணர்வலிதொலைய
வையன்பிரமபுரத்தரற்கம்மென்குதலைச்செவ்வாய்
பையமிழற்றும்பருவத்துப்பாடப்பருப்பதத்தின்
றையலருள்பெற்றனனென்பர்ஞானசம்பந்தனையே ...... (௩௩)

பந்தார்விரலியர்வேள்செங்கட்சோழன்முருகனல்ல
சந்தாரகலத்துநீலநக்கன்பெயர்தான்மொழிந்து
கொந்தார்சடையர்பதிகத்திலிட்டடியேன்கொடுத்த
வந்தாதிகொண்டபிரானருட்காழியர்கொற்றவனே ... ... (௩௪)

ஏயர்கோன்கலிக்காமநாயனார்

கொற்றத்திறலெந்தைதந்தைதன்றந்தையெங்கூட்டமெல்லாந்
தெற்றச்சடையாய்நினதடியேந்திகழ்வன்றொண்டனே
மற்றிப்பிணிதவிர்ப்பானென்றுடைவாளுருவியந்நோய்
செற்றுத்தவிர்கலிக்காமன்குடியேயர்சீர்க்குடியே ... ... (௩௫)

திருமூலநாயனார்

குடிமன்னுசாத்தனூர்க்கோக்குலமேய்ப்போன்குரம்பைபுக்கு
முடிமன்னுகூனற்பிறையாளன்றன்னைமுழுத்தமிழின்
படிமன்னுவேதத்தின்சொற்படியேபரவிட்டெனுச்சி
யடிமன்னவைத்தபிரான்மூலனாகின்றவங்கணனே ......... ...(௩௬)

தண்டியடிகணாயனார்.

கண்ணார்மணியொன்றுமின்றிக்கயிறுபிடித்தரற்குத்
தண்ணார்புனற்றடந்தொட்டலுந்தன்னைநகுமமணர்
கண்ணாங்கிழப்பவமணர்கலக்கங்கண்டம்மலர்க்கண்
விண்ணாயகனிடைப்பெற்றவனாரூர்விறற்றண்டியே ......... (௩௭)

மூர்க்கநாயனார்.

தண்டலைசூழ்திருவேற்காட்டூர்மன்னன்றகுகவற்றூற்
கொண்டவல்லாயம்வன்சூதனைவென்றுமுன்கொண்டபொருண்
மூண்டநன்னீற்றனடியவர்க்கீபவன்மூர்க்கனென்பர்
நண்டலைநீரொண்குடந்தையின்மேவுநற்சூதனையே ...... (௩௮)

சோமாசிமாறநாயனார்.

சூதப்பொழிலம்பரந்தணன்சோமாசிமாறனென்பான்
வேதப்பொருளஞ்செழுத்தும்விளம்பியல்லான்மொழியா
னீதிப்பரன்மன்னுநித்தநியமன்பரவையென்னு
மாதுக்குக்காந்தன்வன்றொண்டன்றனக்குமகிழ்துணையே ...... (௩௯)

சுந்தரமூர்த்திநாயனார்.

துணையுமளவுமில்லாதவன்றன்னருளேதுணையாக்
கணையுங்கதிர்நெடுவேலுங்கறுத்தகயலிணையும்
பிணையுநிகர்த்தகட்சங்கிலிபேரமைத்தோளிரண்டு
மணையுமவன்றிருவாரூரனாகின்றவற்புதனே ...... ... (௪௦)

சாக்கியநாயனார்.

தகடனவாடையன்சாக்கியன்மாக்கற்றடவனாயின்
மகடனந்தாக்கக்குழைந்ததிண்டோளர்வண்கம்பர்செம்பொன்
திகழ்தருமேனியிற்செங்கலெறிந்துசிவபுரத்துப்
புகழ்தரப்புக்கவனூர்சங்கமங்கைபுவனியிலே... ...... ...(சக)

சிறப்புலிநாயனார்.

புவனியிற்பூதியுஞ்சாதனமும்பொலிவார்ந்துவந்த
தவநியமர்க்குச்சிறப்புச்செய்தத்துவகாரணனு
மவனியிற்கீர்த்தித்தென்னாக்கூரதிபனருமறையோன்
சிவனியமந்தலைநின்றதொல்சீர்நஞ்சிறப்புலியே.................. ...(சஉ)

சிறுத்தொண்டநாயனார்.

புலியினதளுடைப்புண்ணியற்கின்னமுதாத்தனதோ
ரொலியின்சதங்கைக்குதலைப்புதல்வனுடறுணித்துக்
கலியின்வலிகெடுத்தோங்கும்புகழ்ச்சிறுத்தொண்டன்கண்டீர்
மலியும்பொழிலொண்செங்காட்டங்குடியவர்மன்னவனே... ...(சங)

சேரமான்பெருமாணாயனார்.

மன்னர்பிரானெதிர்வண்ணானுடலுவருதியநீர்
தன்னபிரான்றமர்போலவருதலுந்தான்வணங்க
வென்னபிரானடிவண்ணானெனவடிச்சேரனென்னுந்
தென்னர்பிரான்கழறிற்றறிவானெனுஞ்சேரலனே... ... ...(சச)

சேரற்குத்தென்னாவலர்பெருமாற்குச்சிவனளித்த
வீரக்கடகரிமுன்புதன்பந்தியிவுளிவைத்த
வீரற்குவென்றிக்கருப்புவில்வீரனைவெற்றிகொண்ட
சூரற்கெனதுள்ளநன்றுசெய்தாயின்றுதொண்டுபட்டே.... ... (சரு)

கணநாதநாயனார்.

தொண்டனையாக்கியவரவர்க்கேற்றதொழில்கள்செய்வித்
தண்டர்தங்கோனக்கணத்துக்குநாயகம்பெற்றவன்காண்
கொண்டல்கொண்டேறியமின்னுக்குக்கோலமடல்கடொறுங்
கண்டல்வெண்சோறளிக்குங்கடற்காழிக்கணநாதனே... ...(சகூ)

கூற்றுவநாயனார்.

நாதன்றிருவடியேமுடியாகக்கவித்துநல்ல
போதங்கருத்திற்பொறித்தமையாலதுகைகொடுப்ப
வோதந்தழுவியஞாலமெல்லாமொருகோலின்வைத்தான்
கோதைநெடுவேற்களப்பாளனாகியகூற்றுவனே...... ...... ...(சஎ)

சுந்தரமூர்த்திநாயனார்.

கூற்றுக்கெவனோபுகறிருவாரூரன்பொன்முடிமே
லேற்றுத்தொடையனுமின்னடைக்காயுமிடுதருமக்
கோற்றெருத்துகூனனுங்கூன்போய்க்குருடனுங்கண்பெற்றமை
சாற்றித்திரியும்பழமொழியாமித்தரணியிலே...... ...... ..(சஅ)

பொய்யடிமையில்லாதபுலவர்.

தரணியிற்பொய்ம்மையிலாத்தமிழ்ச்சங்கமதிற்கபிலர்
பரணர்நக்கீரர்முதனாற்பத்தொன்பதுபல்புலவோ
ரருணமக்கியுந்திருவாலவாயரன்சேவடிக்கே
பொருளமைத்தின்பக்கவிபலபாடும்புலவர்களே...... ... ...(சகூ)

புகழ்ச்சோழநாயனார்.

புலமன்னியமன்னைச்சிங்களநாடுபொடிபடுத்த
குலமன்னியபுகழ்க்கோகனநாதன்குலமுதலோ
னலமன்னியபுகழ்ச்சோழனதென்பர்நகுசுடர்வாள்
வலமன்னியவெறிபத்தனுக்கீந்ததொர்வண்புகழே... ...... ...(ருo)

நரசிங்கமுனையரையநாயனார்.

புகழும்படியெம்பரமேதவர்க்குநற்பொன்னிடுவோ
னிகழும்படியோர்தவன்மடவார்புனைகோலமெங்கு
நிகழும்படிகண்டவனுக்கிரட்டிபொன்னிட்டவனி
திகழுமுடிநரசிங்கமுனையரசன்றிறமே...... ... ...(ருக)

அதிபத்தநாயனார்.

திறமமர்மீன்படுக்கும்பொழுதாங்கொருமீன்சிவற்கென்
றுறவமர்மாகடற்கேவிடுவோனொருநாட்கனக
நிறமமர்மீன்படநின்மலற்கென்றுவிட்டோன்கமலம்
புறமமர்நாகையதிபத்தனுகியபொய்யிலியே...... ...... ...(ருஉ)

கலிக்கம்பநாயனார்.

பொய்யைக்கடிந்துநம்புண்ணியர்க்காட்பட்டுத்தன்னடியான்
சைவத்திருவுருவாய்வரத்தானவன்றாள்கழுவ
வையத்தவர்முன்புவெள்கிநீர்வாராவிடமனைவி
கையைத்தடிந்தவன்பெண்ணாகடத்துக்கலிக்கம்பனே... ...... ...(ருங)

கலியநாயனார்.

கம்பக்கரிக்குஞ்சிலந்திக்குநல்கியகண்ணுதலோ
னும்பர்க்குநாதற்கொளிவிளக்கேற்றற்குடலிலனாய்க்
கும்பத்தயிலம்விற்றுஞ்செக்குழன்றுங்கொள்கூலியினா
னம்பற்கெரித்தகலியொற்றிமாநகர்ச்சக்கிரியே ..... ... ...(ருச)

சத்திநாயனார்.

கிரிவில்லவர்தம்மடியரைத்தன்முன்புகிழ்மைசொன்ன
திரிவில்லவரையந்நாவரிவோன்றிருந்தாரைவெல்லும்
வரிவில்லவன்வயற்செங்கழுநீரின்மருவுதென்ற
றெருவில்விரைகமழுந்தென்வரிஞ்சைத்திகழ்சத்தியே...... ...(ருரு)

ஐயடிகள்காடவர்கோனாயனார்.

சத்தித்தடக்கைக்குமரனற்றாதைதன்றாளமெல்லா
முத்திப்பதமொரோர்வெண்பாமொழிந்துமுடியரசா
மத்திற்குமும்மைநன்றலரற்காயையமேற்றலென்னும்
பத்திக்கடலையடிகளாகின்றநம்பல்லவனே..... ...... ... (ருசா)

சுந்தரமூர்த்திநாயனுர்.

பல்லவைசெங்கதிரோனைப்பறித்தவன்பாதம்புகழ்
சொல்லவன்றென்புகலூரரன்பாற்றுய்யசெம்பொன்கொள்ள
வல்லவனுட்டியத்தான்குடிமாணிக்கவண்ணனுக்கு
நல்லவன்றன்பதிநாவலூராகின்றநன்னகரே...... ...... ...(ருஎ)

கணம்புல்லநாயனுர்.

நன்னகராயவிருக்குவேளூர்தனினல்குரவாய்ப்
பொன்னகராயநற்றில்லைபுகுந்துபுலீச்சரத்து
மன்னவராயவரற்குநற்புல்லால்விளக்கெரித்தான்
கன்னவிறேளெந்தைதந்தைபிரானெங்கணம்புல்லனே...... ...(ருஅ)

காரிநாயனுர்.

புல்லனவாகாவகையுலகத்துப்புணர்ந்தனவுஞ்
சொல்லினவுநயமாக்கிச்சுடர்பொற்குவடுதனி
வில்லனைவாழ்த்திவிளங்குங்கயிலைபுக்கானென்பராற்
கல்லனமாமதில்சூழ்கடவூரினிற்காரியையே...... ...... ..(ருகு)

நெடுமாறநாயனுர்.

கார்த்தண்முகிற்கைக்கடற்காழியர்பெருமாற்கெதிரா
யார்த்தவமணரழிந்ததுகண்டுமற்றுங்கவரைக்
கூர்த்தகழுவினுதிவைத்தபஞ்சவனென்றுரைக்கும்
வார்த்தையதுபண்டுநெல்வேலியில்வென்றமாறனுக்கே...... ...(சூ0)

வாயிலார்நாயனுர்.

மாறுவருளரன்றன்னைமனவாலயத்திருத்தி
யாறுவறிவாமொளிவிளக்கேற்றியகமலர்வாம்
வீறுமலரளித்தன்பெனுமெய்யமிர்தங்கொடுத்தான்
வீறூர்மயிலையுள்வாயிலானென்றுவிளம்புவரோ......... ... ...(சூக)

முனையடுவார்நாயனுர்.

என்றுவிளம்புவர்நீரேதிபன்முனையடுவோ
னென்றுமமருளழிந்தவர்க்காக்கூலியேற்றெறிந்து
வென்றுபெருஞ்செல்வமெல்லாங்கனகநன்மேருவென்னுங்
குன்றுவளைத்தசிலையான்றமர்க்குக்கொடுத்தனனே......... ... (சூஉ)

சுந்தரமூர்த்திநாயனுர்.

கொடுத்தான்முதலைகொள்பிள்ளைக்குயிரன்றுபுக்கொளியூர்த்
தொடுத்தான்மதுரகவியவிநாசியைவேடர்சுற்றம்
படுத்தான்றிருமுருகன்பூண்டியினிற்பராபரத்தேன்
மடுத்தானவனென்பர்வன்றொண்டனுகின்றமாதவனே...... ... (சூந)

கழற்சிங்கநாயனுர்.

மாதவத்தோர்தங்கள்வைப்பினுக்காரூர்மணிக்குவைத்த
போதினைத்தான்மோந்ததேவிதன்மூக்கையரியப்பொற்கை
காதிவைத்தன்றேவரிவதென்றுங்கவள்கைதடிந்தா
னுதமொய்த்தார்வண்டுகிண்டுபைங்கோதைக்கழற்சிங்கனே... ...(சூச)

இடங்கழிநாயனர்.

சிங்கத்துருவனைச்செற்றவன்சிற்றம்பலமுகடு
கொங்கிற்கனகமணிந்தவாதித்தன்குலமுதலோன்
திங்கட்சடையர்தமரதென்செல்வமெனப்பறைபோக்
கெங்கட்கிறைவனிருக்குவேளூர்மன்னிடங்கழியே ......... ...(சுரு)

செருத்துணைநாயனர்.

கழிநீள்கடனஞ்சயின்ரூர்க்கிருந்தகடிமலரை
மொழிநீள்புகழ்க்கழற்சிங்கன்றன்றேவிமுன்மோத்தலுமே
யெழினீள்குமிழ்மலர்மூக்கரிந்தானென்றியம்புவராற்
செழுநீர்மருகனன்ருட்டமர்தஞ்சைச்செருத்துணையே ...... ...(சுசு)

புகழ்த்துணைநாயனர்.

செருவிலிபுத்தூர்ப்புகழ்த்துணைவையஞ்சிறுவிலைத்தா
யுருவலிகெட்டுணவின்றியுமைகோனைமஞ்சனஞ்செய்
தருவதோர்போதுகைசோர்ந்துகலசம்விழத்தரியாப்
பெருவரைவில்லியருளினிதியதுபெற்றனனே ...... ... ...(சுஎ)

கோட்புலிநாயனர்.

பெற்றமுயர்த்தோன்விரையாக்கலிபிழைத்தோர்தமது
சுற்றமறுக்குந்தொழிற்றிருநாட்டியத்தான்குடிக்கோன்
குற்றமறுக்குநங்கோட்புலிநாவற்குரிசிலருள்
பெற்றவருட்கடலென்றுலகேத்தும்பெருந்தகையே... ... ...(சுஅ)

சுந்தரமூர்த்திநாயனர்.

தருமகட்பேசிரேன்வீயவேநூல்போனசங்கிலிபாற்
புகுமணக்காதலினலொற்றியூருறைபுண்ணியன்றன்
மிகுமலர்ப்பாதம்பணிந்தருளாலிவ்வியனுலக
நகும்வழக்கேகன்மையாப்புணர்ந்தானவலூரரசே... ... ...(சுகூ)

பத்தராய்ப்பணிவார்கள்.

அரசினையாரூரமரர்பிரானையடிபணிந்திட்
டுரைசெய்தவாய்தடுமாறியுரோமபுளகம்வந்து
கரசரணுதியவையவங்கம்பித்துக்கண்ணருவி
சொரிதருமங்கத்தினேர்பத்தரொன்றுதொகுத்தவரோ... ...... ...(எ0)

பரமனையேபாடுவார்.

தொகுத்தவடமொழிதென்மொழியாதொன்றுதோன்றியதே
மிகுத்தவியலிசைவல்லவகையால்விண்டோயுநெற்றி
வகுத்தமதிற்றில்லையம்பலத்தான்மலர்ப்பாதங்கண்மே
லுகுத்தமனத்தொடும்பாடவல்லோரொன்பருத்தமரோ...... ...... ...(எக)

சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்.

உத்தமத்தானத்தறம்பொருளின்பமொடியெறிந்து
வித்தகத்தானத்தொருவழிக்கொண்டுவிளங்கச்சென்னி
மத்தம்வைத்தான்றிருப்பாதகமலமலரிணைக்கீழ்ச்
சித்தம்வைத்தாரென்பர்வீடுபேறெய்தியசெல்வர்களே,...... ... (எஉ)

திருவாரூர்ப்பிறந்தார்கள்.

செல்வந்திகழ்திருவாரூர்மதில்வட்டத்துட்பிறந்தார்
செல்வன்றிருக்கணத்துள்ளவரோயதனுற்றிகழச்
செல்வம்பெருகுதென்னூரூர்ப்பிறந்தவர்சேவடியே
செல்வநெறியுறுவார்க்கணித்தாயசெழுநெறியே...... ...... ...(எரு)

முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்.

நெறிவார்சடையனைத்தீண்டிமுப்போதுநீடாகமத்தி
னறிவால்வணங்கியர்ச்சிப்பவர்நம்மையுமாண்டமரர்க்
கிறையாய்முக்கண்ணுமெண்டோளுந்தரித்தீறில்செல்வத்தொடு
முறைவார்சிவபெருமாற்குறைவாயவுலகினிலே........ ...... ...(எச)

முழுநீறுபூசியமுனிவர்.

உலகங்கலங்கினுமூழிதிரியினுமுள்ளொருகால்
விலகுதலில்லாவிதியதுபெற்றநல்வித்தகர்கா
ணலகில்பெருங்குணத்தாரூரமர்ந்தவானடிக்கீ
ழிலகுவெண்ணீறுதம்மேனிக்கணியுமிறைவர்களே;........... ...(எடு)

அப்பாலுமடிச்சார்ந்தார்.

வருக்கமடைத்துநன்னூவலூர்மன்னவன்வண்டமிழாற்
பெருக்குமதுரத்தொகைபிறைசூடிதன்பெய்கழற்கே
யொருக்குமனத்தொடப்பாலடிச்சார்ந்தவரொன்றுலகிற்
றெரிக்குமவர்சிவன்பல்கணத்தோர்நஞ்செழுந்தவரோ...... .. ...(எசு)

சுந்தரமூர்த்திநாயனுர்.

செழுநீர்வயன்முதுகுன்றினிற்செந்தமிழ்பாடிவெய்ய
மழுநீடடக்கையனீந்தபொன்னுங்குக்கொள்ளாதுவந்தப்
பொழினீடருதிருவாரூரில்வாசியும்பொன்னுங்கொண்டோன்
கெழுநீள்புகழ்த்திருவாரூரனென்றுநாங்கேட்பதுவே......... ...(எஎ)

பூசலார்நாயனுர்.

பதுமநற்போதன்னபாதத்தரற்கொருகோயிலையான்
கதுமெனச்செய்குவதென்றுகொலாமென்றுகண்டுயிலா
ததுமனத்தேயெல்லிதோறுநினைந்தருள்பெற்றதென்பர்
புதுமணத்தென்றலுலாநின்றவூர்தனிற்பூசலையே...... ...... ...(எஅ)

மங்கையர்க்கரசியார்.

பூசலயிற்றென்னனூர்க்கனலாகப்பொருமையினுல்
வாசமலர்க்குழற்பாண்டிமாதேவியாமானிகண்டீர்
தேசம்விளங்கத்தமிழாகரர்க்கறிவித்தவரா
ஞசம்விளைத்தாளருகந்தருக்குத்தென்னூட்டகத்தே ...... ...... ...(எக)

நேசநாயனுர்.

நாட்டமிட்டன்றரிவந்திப்பவெல்படைநல்கினர்தந்
தாட்டரிக்கப்பெற்றவனென்பர்சைவத்தவரனாயிற்
கூட்டுமக்கப்படக்கோவணநெய்துகொடுத்துநன்மை
யீட்டுமெக்காம்பீலிச்சாலியநேசனையிம்மையிலே... ...... (அ0)

### கோச்செங்கட்சோழநாயனர்.

மைவைத்தகண்டனெறியன்றிமற்றோர்நெறிகருதாத்
தெய்வக்குடிச்சோழன்முன்புசிலந்தியாய்ப்பந்தர்செய்து
சைவத்துருவெய்திவந்துதரணிநீடாலயங்கள்
செய்வித்தவன்றிருக்கோச்செங்கணானெனுஞ்செம்பியனே...... ...(அக)

செம்பொனணிந்துசிற்றம்பலத்தைச்சிவலோகமெய்தி
நம்பன்கழற்கீழிருந்தோன்குலமுதலென்பர்நல்ல
வம்புமலர்த்தில்லையீசனைச்சூழமறைவளர்த்தா
னிம்பநறுந்தொங்கற்கோச்செங்கணானெனுமித்தனையே...... ... (அஉ)

### திருநீலகண்டயாழ்ப்பாணநாயனர்.

தனையொப்பருமெருக்கத்தம்புலியூர்த்தகும்புகழோ
னினையொப்பருந்திருநீலகண்டப்பெரும்பாணனைநீள்
சினையொப்பலர்பொழிற்சண்பையர்கோன்செந்தமிழொடிசை
புனையப்பரனருள்பெற்றவனென்பரிப்பூதலத்தே... ... ...(அஙு)

### சடையநாயனர்.

தலம்விளங்குந்திருநாவலூர்தன்னிற்சடையனென்னுங்
குலம்விளங்கும்புகழோனையுரைப்பர்குவலயத்தி
னலம்விளங்கும்படிநாம்விளங்கும்படிநற்றவத்தின்
பலன்விளங்கும்படியாரூரனைமுன்பயந்தமையே...... ... ...(அச)

### இசைஞானியார்.

பயந்தாள்கறுவுடைச்செங்கண்வெள்ளைப்பொள்ளனிள்பணைக்கைக்
கயந்தானுகைத்தநற்காளையையென்றுங்கபாலங்கைக்கொண்
டயந்தான்புகுமரனூரர்ப்புனிதவரன்றிருத்தா
ணயந்தாடனதுள்ளத்தென்றுமுரைப்பதுஞானியையே...... ...(அரு)

### சுந்தரமூர்த்திநாயனர்.

ஞானவவ்வாரூரரசரையல்லதுநாமறியோ
மானவவாக்கையொடும்புக்கவரைவளரொளிப்பூண்
வானவராலுமருவற்கரியவடகயிலைக்
கோனவன்கோயிற்பெருந்தவத்தோர்தங்கள்கூட்டத்திலே... ...(அசு)

### திருத்தொண்டத்தொகையினுள்ளகூட்டவடியார்கள்தனியடியார்கள்.

கூட்டமொன்பானொடறுபத்துமூன்றுதனிப்பெயரா
வீட்டும்பெருந்தவத்தோரொடுபத்திரண்டாம்வினையை
வாட்டுந்தவத்திருத்தொண்டத்தொகைபதினொன்றின்வகைப்
பாட்டுந்திகழ்திருநாவலூராளிபணித்தனனே............ ...... ...(அஎ)

### திருத்தொண்டத்தொகைப்பதிகக்கவிகளின்முதற்குறிப்பு.

பணித்தநற்றொண்டத்தொகைமுதற்றில்லையிலைமலிந்த
வணித்திகழ்மும்மைதிருநின்றவம்பருவார்கொண்டதோ
ணிணைத்தநற்பொய்யடிமைகறைக்கண்டன்கடல்சூழ்ந்தபின்
மணித்திகழ்சொற்பத்தர்மன்னியசீர்மறைநாவனொடே.... ... ...(அஅ)

நூற்பயன்.

ஓடிடும்பஞ்சேந்திரியமொடுக்கியென்னூழ்வினைகள்
வாடிடும்வண்ணநின்றெத்தவஞ்செய்தனன்வானினுள்ளோர்
சூடிடுஞ்சீர்த்திருப்பாதத்தர்தொண்டத்தொகையினுள்ள
சேடர்தஞ்செல்வப்பெரும்புகழந்தாதிசெப்பிடவே... ...... ...(அகூ)

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பியருளிச்செய்ததிருத்தொண்டர்திருவந்தாதிமுற்றும்.



திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பியருளிச்செய்த.

# திருஞானசம்பந்தர் திருவந்தாதி.

பார்மண்டலத்தினிற்பன்னிருபேரொடுமன்னிநின்ற
நீர்மண்டலப்படப்பைப்பிரமாபுரநீறணிந்த
கார்மண்டலக்கண்டத்தெண்டடந்தோளன்கருணைபெற்ற
தார்மண்டலமண்ணச்சம்பந்தன்மேவியதண்பதியே... ... ...(க)

பதிகப்பெருவழிகாட்டப்பருப்பதக்கோன்பயந்த
மதியத்திருநுதல்பங்கனருள்பெறவைத்தவெங்க
ணிதியைப்பிரமாபுரநகர்மன்னனையென்னுடைய
கதியைக்கருதவல்லோரமராபதிகாப்பவரோ...... ...... ...(உ)

காப்பயில்காழிக்கவுணியர்தீபற்கென்காரணமா
மாப்பழிவாராவகையிருப்பேனென்னமாரனென்னே
பூப்பயில்வாளிகளஞ்சுமென்னெஞ்சரங்கப்புகுந்த
வேப்பயில்வார்சிலைகால்வளையாநிற்குமீண்டிரவே... ... ... ...(ங)

இரவும்பகலுநின்பாதத்தலரென்வழிமுழுதும்
பரவும்பரிசேயருளுகண்டாய்பழனத்தர்தம
புரையுங்குமுதத்தமுதத்தலர்வெண்குமுதம்வளை
தரளஞ்சொரியுங்கடல்புடைசூழ்ந்ததராய்மன்னனே...... ......... (ச)

மன்னியமோகச்சுவையொளியூறோசைநாற்றமென்றிப்
பன்னியவைந்தின்பதங்கடந்தோர்க்குந்தொடர்வரிய
பொன்னியல்பாடகக்கிண்கிணிப்பாதநிழல்புகுவோர்
துன்னியகாவமர்சண்பையர்நாதர்க்குத்தொண்டர்களே...... ...(ரு)

தொண்டினஞ்சூழச்சுரிகுழலார்தம்மனந்தொடர
வண்டினஞ்சூழவருமிவன்போலுமயிலுகுத்த
கண்டினஞ்சூழ்ந்தவளைபிரம்போர்கழுவாவுடலம்
விண்டினஞ்சூழக்கழுவினவாக்கியவித்தகனே...... ...... ...(சு)

வித்தகம்பேசிநம்வேணுத்தலைவனைவாணிகர்த்து
முத்தகங்காட்டுமுறுவனல்லார்தமனமணைய
வுய்த்தகம்போந்திருந்துள்ளவுமில்லாதனவுமொரு
பொத்தகம்போலுமுதுபுலைப்பாணன்புணர்க்கின்றதே............ ...(௭)

புணர்ந்தநன்மேகச்சிறுநுண்டுளியிற்சிறகொதுக்கி
யுணர்ந்தனர்போலவிருந்தனையாலுலகம்பரசுங்
குணந்திகழ்ஞானசம்பந்தன்கொடிமதிற்கொச்சையின்வாய்
மணந்தவர்போயினரோசொல்லுவாழிமடக்குருகே............ ...(௮)

குருந்தலர்முல்லையங்கோவலரேற்றின்கொலைமருப்பா
லருந்திறலாகத்துழுதசெஞ்சேற்றருகாசனிதன்
பெருந்திறமாமதிட்சண்பைநகரன்னபேரமைத்தோட்
டிருந்திழையார்வம்விகைரள்முரசே... ... ... ...(௯)

முரசங்கரையமுன்றோரணநீடமுழுநிதியின்
பரிசங்கொணர்வானமைகின்றனர்பலர்பார்த்தினிநீ
யரிசங்கணைதலென்னுமுன்கருதருகாசனிதன்
சுரிசங்கணைவயற்றந்தநகரன்னதூமொழிக்கே...... ...... ...(௧0)

மொழிவதுசைவசிகாமணிமூரித்தடவரைத்தோட்
டொழுவதுமற்றவன்றூமலர்ப்பாதங்கடாமங்கமழ்ந்
தெழுவதுகூந்தலும்பூந்தாமரையினியாதுகொலோ
மொழிவதுசேரிமுரிப்புதைமாதர்முறுவலித்தே...... ... ...(௧௧)

வலிகெழுகுண்டர்க்குவைகைக்கரையன்றுவான்கொடுத்த
கலிகெழுதிண்டோட்கவுணியர்தீபன்கடலுடுத்த
வொலிதருநீர்வையகத்தையுறையிட்டதொத்துதிரு
மலிதருவார்பனியாமடமாதினைவாட்டுவதே... ... ... ...(௧௨)

வாட்டுவர்தத்தந்துயரைவன்கேழலின்பின்புசென்ற
வேட்டுவர்கோலத்துவேதத்தலைவனைமெல்விரலாற்
றேட்டியல்காதணிவானென்றுதாதைக்குச்சூழ்விசும்பிற்
காட்டியகன்றின்கழற்றிறமானவைகற்றவரோ...... ...... ......(௧௩)

அவர்சென்றணுகுவர்மீள்வதிங்கன்னையருகர்தம்மைத்
தவர்கின்றதண்டமிழ்ச்சைவசிகாமணிசண்பையென்னப்
பவர்கின்றநீள்கொடிக்கோபுரம்பல்கதிரோன்பரியைக்
கவர்கின்றசூலத்தொடுநின்றுதோன்றுங்கடிநகரோ...... ......(௧௪)

நகரங்கெடப்பண்டுதிண்டேர்மிசைநின்றுநான்மறைகள்
பகரங்கழலவனைப்பதினாறுயிரம்பதிக
மகரங்கிளர்கடல்வையந்துயர்கெடவாய்மொழிந்த
நிகரொங்கிலிகலிக்காழிப்பிரானென்பர்நீணிலத்தே...... ...(௧௫)

நிலமேறியமருப்பிற்றிருமாலுநிலம்படைத்த
குலமேறியமலர்க்கோகனகத்தயனுங்கொழிக்குஞ்
சலமேறியமுடிதாள்கண்டிலர்தந்தைகாணவன்று
நலமேறியபுகழ்ச்சம்பந்தன்காட்டியநாதனையே ... ... (௧௬)

நாதனணிபள்ளிசூழ்நகர்கானகமாக்கியஃதே
போதின்மலிவயலாக்கியகோனுறைபொற்புகலி
மேதைநெடுங்கடல்வாருங்கயலோவிலைக்குனது
காதினளவுமிளிர்கயலோசொல்லுகாரிகையே... ......... ...(கஎ)

கைம்மையினுனின்கழல்பரவாதுகண்டாற்கிவனோர்
வன்மையனேயென்னும்வண்ணநடித்துவிழுப்பொருளோ
டிம்மையில்யானெய்துமின்பங்கருதித்திரிதருமத்
தன்மையினேற்குமருளுதியோசொல்லுசம்பந்தனே ...... ...(கஅ)

பந்தாரணிவிரற்பங்கயக்கொங்கைப்பவளச்செவ்வாய்க்
கொந்தார்நறுங்குழற்கோமளவல்லிகைக்கூறருஞ்சீர்
நந்தாவிளக்கினைக்கண்டதுநானெப்பொழுதுமுன்னுஞ்
சந்தாரகலத்தருகாசனிதன்றடவரையே...... ...... ...(ககூ)

வரைகொண்டமாமதிட்சண்பைத்தலைவனைவாழ்த்தலர்போ
னிரைகொண்டுவானோர்கடைந்ததினினஞ்சநிகழக்கொலா
நுரைகொண்டுமெய்ப்பரத்துள்ளஞ்சுழலநொந்தோரிரவுந்
திரைகொண்டலமருமாலகன்ஞாலஞ்செறிகடலே... ... ...(உ0)

கடலன்னபொய்ம்மைகள்செய்யினும்வெய்யகடுநரகத்
திடநமனேவுதற்கெவ்விடத்தானிருஞ்செந்தமிழாற்
றிடமன்னுமாமதிட்சண்பைத்தலைவன்செந்தாமரையின்
வடமன்னுநீண்முடியானடிப்போதவைவாழ்த்தினமே ...... ...(உக)

வாழ்த்துவதெம்பரமேபரமாந்தத்துவையமுந்நீ
ராழ்த்தியகாலத்துமாழாததுவரன்சேவடியே
யேத்தியஞானசம்பந்தர்க்கிடம்வலத்தும்பிகொம்பர்க்
காத்திகழ்கேதகம்போதகமீனுங்கழுமலமே...... .... ...(உஉ)

மலர்பயில்வாட்கண்ணிகேள்கண்ணிநீண்முடிவண்கமலப்
பலர்பயில்கீர்த்திக்கவுணியர்தீபன்பகைவரொன்னத்
தலைபயில்பூம்புனங்கொய்திடுமேகணியார்புலம்ப
வலர்பயிலாமுன்பறித்தனமாகிலரும்பினையே......... ... ...(உஙு)

அரும்பினவன்பில்லையர்ச்சனையில்லையரனெறியே
விரும்பினமாந்தர்க்குமெய்ப்பணிசெய்கிலம்பொய்க்கமைந்த
விரும்பினவுள்ளத்தினேற்கெங்ஙனேவந்துநேர்பட்டதாற்
கரும்பனநீள்வயல்சூழ்காழிநாதன்கழலடியே...... ...... ...(உச)

அடியாலலர்மிதித்தாலரத்தம்பில்கமிர்தமின்றிக்
கொடியாளெடும்பின்னடந்ததெவ்வாறலர்கோகனகக்
கடியார்நறுங்கண்ணிஞானசம்பந்தன்கருதலர்சேர்
வெடியாவிடுவெம்பரற்சுறுநாறுவியன்சுரத்தே ............ ...(உரு)

சுரபுரத்தார்தந்துயருக்கிரங்கிச்சுரர்கடங்கள்
பரபுரத்தார்தந்துயர்கண்டருளும்பரமன்மன்னு
மரபுரத்தானடியெய்துவனென்பதவனடிசேர்
சிரபுரத்தானடியாரடியேனென்னுந்திண்ணனவே ......... ...(உசு)

திண்ணனவாசென்றநாட்டிடையில்லைசொறீந்தமிழோர்
கண்ணெனவோங்குங்கவுணியர்தீபன்கைபோற்பொழிந்து
விண்ணினமாய்முல்லைமெல்லரும்பீனமற்றியாமெலிய
வெண்ணினநாள்வழுவாதிணைத்தோடியெழுமுகிலே... ...... ...(௨௭)

எழுவாண்மதியால்வெதுப்புண்டலமந்தெழுந்துவிம்மித்
தொழுவாடனக்கின்றருளுங்கொலாந்தொழுநீரவைகைக்
குழுவாயெதிர்ந்தவுறிக்கைப்பறிதலைக்குண்டர்தங்கள்
கழுவாவுடலங்கழுவினமாக்கியகற்பகமே...... ...... ... (௨௮)

கற்பாநறவம்மணிகொழித்துந்துமலைச்சிலம்பா
நற்பாமொழியெழின்ஞானசம்பந்தன்புறவமன்ன
விற்பாநுதலிதன்மென்முலையின்னிளஞ்செவ்விகண்டிட்
டிற்பாவிடும்வண்ணமெண்ணுகின்றாளம்மவெம்மனையே... ...(௨௯)

எம்மனையாயெந்தையாயென்னையாண்டென்றுயர்தவிர்த்த
செம்மலர்நீண்முடிஞானசம்பந்தன்புறவமன்னீர்
வெம்முனைவேலென்னவென்னமிளிர்ந்துவெளுத்தரிபோன்
றும்மனவோவல்லவோவந்தென்னுள்ளத்தொளிர்வனவே...... ...(௩0)

ஒளிறுமணிப்பணிநாட்டுமுலகத்துமும்பருள்ளும்
வெளிறுபடச்சிலநிற்பதுண்டேமிண்டிமீனுகளு
மளறுவயற்சண்பைநாதனமிர்தப்பதிகமென்னுங்
களிறுவிடப்புகுமேற்றொண்டர்பாடுங்கவிதைகளே ......... ...(௩௧)

கவிக்குத்தகுவனகண்ணுக்கினியனகேட்கிலின்பஞ்
செவிக்குத்தகுவனசிந்திக்குரியனபைந்தரள
நவிக்கட்சிறுமியர்முற்றின்முகந்துதஞ்சிற்றிறொறுங்
குவிக்கத்திரைபரக்குங்கொச்சைநாதன்குழைகழலே... ...... ...(௩௨)

கழல்கின்றவைங்கணையந்தியுமன்றிலுங்கால்பரப்பிட்
டுழல்கின்றதென்றலும்வந்திங்கடர்ப்பவன்றாயிழைக்காச்
சுழல்கின்றநஞ்சந்தணித்தவன்றன்னைத்தொடர்ந்துபின்போ
யுழல்கின்றநெஞ்சமிங்கென்னோவினியின்றுறுகின்றதே..... ...(௩௩)

உறுகின்றவன்பினொடொத்தியதாளமுமுள்ளுருகிப்
பெறுகின்றவின்பும்பிறைநுதன்முண்டமுங்கண்டவரைத்
தெறுகின்வாறென்னசெய்தவமோவந்தென்சிந்தையுள்ளே
துறுகின்றபாதன்கழுமலம்போலுந்துடியிடைக்கே...... ... ...(௩௪)

இடையுமெழுதாதொழியலுமாமினவண்டுகளின்
புடையுமெழுதிலும்பூங்குழலொக்குமப்பொன்னனையா
ளடையுநகையுந்தமிழாகரன்றன்புகலிநற்றே
னடையுமொழியுமெழுதிடிற்சாலவதிசயமே........... ...... ...(௩௫)

மேனாட்டமரர்தொழவிருப்பாரும்வினைப்பயன்க
டானாட்டருநரகிற்றளர்வாருந்தமிழர்தங்கள்
கோனாட்டருகர்குழாம்வென்றகொச்சையர்கோன்கமலப்
பூநாட்டடிபணிந்தாருமல்லாதபுலையருமே ........ ... ...(௩௬)

புலையடித்தொண்டனைப்பூசுரனுக்கிப்பொருகயற்கண்
மலைமடப்பாவைக்குமாநடமாடுமணியையென்றன்
றலையிடைப்பாதனைக்கற்றுங்குறைத்தசம்பந்தனென்று
முலையிடைப்பொன்கொண்டுசங்கிழந்தாளென்றன்மொய்குழலே ...(௩௭)

குழலியலின்கவிஞானசம்பந்தன்குராகழல்போற்
கழலியல்பாதம்பணிந்தேனுனையுங்கதிரவனே
தழலியல்வெம்மைதணித்தருணீதணியாதவெம்மை
யழலியல்கானடந்தாள்வினையேன்பெற்றவாரணங்கே...... ...(௩௮)

அணங்கமரியாழ்முரித்தாண்பனைபெண்பனையாக்கியமண்
கணங்கழுவேற்றிக்கடுவிடந்தீர்த்துக்கதவடைத்துப்
பிணங்கலைநீரொதிரோடஞ்செலுத்தினவெண்பிறையோ
டிணங்கியமாடச்சிரபுரத்தான்றன்றிருந்தமிழே............ ...(௩௯)

இருந்தண்புகலிகோலக்காவெழிலாவடுதுறைசீர்
பொருந்துமரத்துறைபோனகந்தாளநன்பொன்சிவிகை
யருந்திடவொத்தமுத்தீசெயவேறவரனளித்த
பெருந்தகைசீரினையெம்பரமோநின்றுபேசுவதே...... ... ...(௪௦)

பேசுந்தகையதன்றேயின்றுமன்றுந்தமிழ்விரகன்
றேசமுழுதுமழைமறந்துள்கெடச்செந்தழற்கை
யீசன்றிருவருளாலெழில்வீழிமிழலையின்வாய்க்
காசின்மழைபொழிந்தானென்றிஞ்ஞாலங்கவின்பெறவே...... ...(௪௧)

பெறுவதுநிச்சயமஞ்சனெஞ்சேபிரமாபுரத்து
மறுவறுபொற்கழன்ஞானசம்பந்தனைவாழ்த்துதலான்
மிறையறுவான்மறியுண்டடந்தோள்வல்விடையெடுத்த
பொறியுறுபொற்கொடியெம்பெருமானமர்பொன்னுலகே ..... ...(௪௨)

பொன்னார்மதில்சூழ்புகலிக்கரசையருகர்தங்க
டென்னாட்டரணட்டசிங்கத்தினையெஞ்சிவனிவனென்
றந்நாள்குதலைத்திருவாய்மொழிகளருளிச்செய்த
வென்னானையைப்பணிவார்க்கில்லைகாண்கயமாலையமே...... ...(௪௩)

மாலையொப்பாகும்பிறைமுன்புநின்றுமணிகுறுக்கி
வேலையைப்பாடணைந்தாங்கெழின்மன்மதன்விற்குனித்த
கோலையெப்போதும்பிடிப்பன்வடுப்படுகொக்கினஞ்சூழ்
சோலையைக்காழித்தலைவன்மலரின்றுசூடிடிலே...... ...(௪௪)

சூடுநற்றார்த்தமிழாகரன்றன்பொற்சுடர்வரைத்தோள்
கூடுதற்கேசற்றகொம்பினைநீயுங்கொடும்பகைநின்
றூடுதற்கேயத்தனைக்குனையேநின்னையாடரவம்
வாடிடக்காருமறுவும்படுகின்றவாண்மதியே...... ...... ...(௪௫)

மதிக்கத்தகுநுதன்மாதொடுமென்கண்மலையில்வைகித்
துதிக்கத்தகுசண்பைநாதன்சுருதிகடந்துழவோர்
மிதிக்கக்கமலமுகிழ்த்ததண்டேனுண்டுமிண்டிவரால்
குதிக்கக்குருகிரியுங்கொச்சைநாடுகுறுகுமினே... ...... ...(௪௬)

குறுமனமுள்கலவாத்தமிழாகரன்கொச்சையன்ன
நறுமலர்மென்குழலாயஞ்சலெம்மூர்நகுமதிசென்
றுறுமணேயொண்சுவரோவியக்கிள்ளேக்குறும்பதியிற்
சிறுமிகள்சென்றிருந்தங்கையைநீட்டுவர்சேயிழையே...... ...(சஎ)

இழைவளராகத்துஞானசம்பந்தனிருஞ்சுருதிக்
கழைவளர்குன்றுகடத்தலுங்காண்டீகடைசியர்நீண்
முழைவளர்ஞண்டுபடத்தடஞ்சாலிமுத்துக்கிளேக்கு
மழைவளர்நீள்குடுமிப்பொழில்சூழ்ந்தவளவயலே... ... ...(சஅ)

வயலார்மருகற்பதிதன்னில்வாளரவாற்கடியுண்
டயலாவிழுந்தவவனுக்கிரங்கியறிவழிந்த
கயலார்கருங்கண்ணிதன்றுயர்தீர்த்தகருணேவெள்ளப்
புயலார்தருகையினனென்னத்தோன்றிடும்புண்ணியமே...... ...(சக)

புண்ணியநாடுபுகுவதற்காகப்புலனடக்கி
யெண்ணியசெய்தொழினிற்பதெல்லாருமின்றியானெனக்கு
நண்ணியசெய்தொழின்ஞானசம்பந்தனேநந்தமர்நீர்க்
கண்ணியன்மாடக்கழுமலத்தானேக்கருதுவதே... ... ...(ரு0)

கருதத்தவவருளீந்தருண்ஞானசம்பந்தன்கொச்சை
யிரதக்கிளிமொழிமாதேகலங்கலிவருடலம்
பொருதக்கழுகினையாக்குவனுந்தமர்போர்ப்படையேன்
மருதச்சினேயிற்பொதும்பருளேறிமறைகுவனே... ... ...(ருக)

மறைமுழங்குங்குழலார்கலிகாட்டவயற்கடைஞர்
பறைமுழங்கும்புகலித்தமிழாகரன்பற்றலர்போற்
றுறைமுழங்குங்கரிசீறிமடங்கல்சுடர்ப்பளிங்கி
னறைமுழங்கும்வழிநீவரிற்சாலவரும்பழியே... ... ...(ருஉ)

பழிக்கேதகுகின்றதின்றிப்பிறைபல்கதிர்விழுந்த
வழிக்கேதிகழ்தருசெக்கரைக்கொச்சைவயவனொன்னு
மொழிக்கேவிரும்பிமுளரிக்கலம்வருமோவியர்தங்
கிழிக்கேதருமுருவத்திவள்வாட்டிடக்கீள்கின்றதே... ... ...(ருங)

கீளரிக்குன்றத்தரவமுமிழ்ந்தகிளர்மணியின்
வாளரிக்கும்வைகைமாண்டனவொன்பர்வயற்புகலித்
தாளரிக்கும்மரியானருள்பெற்றபரசமைய
கோளரிக்குகிராத்தமிழ்நாட்டுள்ளகுண்டர்களே... ... ...(ருச)

குண்டகழ்சூழ்தருகொச்சைத்தலைவன்றன்குன்றகஞ்சேர்
வண்டகமென்மலர்வல்லியன்னீர்வருவிற்புருவக்
கண்டகவாளிபடப்புடைவீழ்செங்கலங்கலொடும்
புண்டகக்கேழல்புகுந்ததுண்டோநுங்கள்பூம்புனத்தே...... ...(ருரு)

புனத்தெழுகைம்மதக்குன்றமதாயங்கோர்புண்கலையாய்
வனத்தெழுசந்தனப்பைந்தழையாய்வந்துவந்தடியேன்
மனத்தெழுபொற்கழன்ஞானசம்பந்தன்வண்கொச்சையன்னுள்
கனத்தெழுகொங்கைகளாயல்குலாய்த்திவர்கட்டுவையே... ...(ருசு)

கட்டதுவேகொண்டுகேள்ளுண்டுநுங்கைகளாற்சுணங்கை
யிட்டதுவேயன்றியெட்டனைத்தானிவளுள்ளுறுநோய்
விட்டதுவேயன்றிவெங்குருநாதன்றன்பங்கயத்தின்
மட்டவிழ்தார்கொண்டுசூட்டுமின்பேதைமகிழ்வுறவே ........ ...(ருஎ)

உறவும்பொருளுமொண்போகமுங்கல்வியுங்கல்வியுற்ற
துறவுந்துறவிப்பயனுமெனக்குச்சுழிந்தபுனற்
புறவும்பொழிலும்பொழில்சூழ்பொதும்புந்ததும்புவண்டி
னறவும்பொழிலெழிற்காழியர்கோன்றிருநாமங்களே ... ...(ருஅ)

நாமுகந்தேத்தியஞானசம்பந்தனைநண்ணலர்போ
லேமுகவெஞ்சரஞ்சிந்திவல்லிஞ்சியிடிபடுக்கத்
தீமுகந்தோன்றிகடோன்றத்தளவமுகிழரும்பக்
காமுகம்பூமுகங்காட்டினின்றூர்த்தனகாரினமே ...... ...(ருகூ)

காரங்கணைபொழிற்காழிக்கவுணியர்தீபனல்லூர்ச்
சீரங்கணைநற்பெருமணந்தன்னிற்சிவபுரத்து
வாரங்கணைகொங்கைமாதொடும்புக்கினிற்பின்புவந்தா
ராரங்கொழிந்தனர்பெற்றதல்லாலவ்வரும்பதமே... ... ...(சு0)

அரும்பதமாக்குமடியரொடஞ்சலித்தார்க்கரிய
பெரும்பதமெய்தலுற்றீர்வந்திறைஞ்சுமின்பேரரவம்
வரும்பதநான்மறைக்காழித்தலைவன்மலர்க்கமலத்
தரும்பதஞானசம்பந்தனென்னனைதன்றாளிணையே ... ...(சுக)

தாளின்சரணந்தருஞ்சண்பைநாதன்றரியலர்போற்
கிளின்மலங்கவிலங்கேபுகுந்திடுங்கெண்டைகளும்
வாளுந்தொலையமதத்திருகாதினளவும்வந்து
மீளுங்கருங்கண்ணிமின்புரியாவைத்தமென்னகையே ... ...(சுஉ)

நகுகின்றமுல்லைநண்ணுறொரிகண்டத்தவர்கவர்ந்த
மிகுகின்றநன்னிதிகாட்டினகொன்றைவிரவலரூர்
புகுகின்றதீயெனப்பூத்தனதோன்றிபுறவமன்கைத்
தகுகின்றகோடல்களன்பரின்றெய்துவர்கார்மயிலே... ... ...(சுங)

மயிலேந்தியவள்ளறன்னையளிப்பமதிபுணர்ந்த
வெயிலேந்தியசண்பைநாதனுலகத்தெதிர்ப்பவரியார்
குயிலேந்தியபொழிற்கொங்கேந்தியகொம்பினம்புகழீ(இ)
யயிலேந்தியமலர்கண்டுளனுய்வந்தவண்ணலுக்கே... ... ...(சுச)

அண்ணன்மணிவளைத்தோளருகாசனிசண்பையன்ன
பெண்ணினமிர்தநல்லாள்குழனுற்றம்பெடையொடும்பூஞ்
சுண்ணந்துதைந்தவண்டேகண்டதுண்டுகொறுங்கொவிகீர்த்
தண்ணம்பொழிலெழிற்காசினிபூத்தமென்றூதுகளே... ... ...(சுரு)

தாதுகற்றேய்த்தநஞ்சன்னுசியார்சடலம்படுத்துத்
தூதையிற்சிக்கங்கரஞ்சேர்த்துவாளாதலுக்குகின்றீர்
போதியிற்புத்தரோவம்மின்புகலியர்கோனின்னநாட்
காதியிட்டேற்றுங்கழுத்திறம்பாடிக்களித்திடவே...... ... ...(சுசு)

களியுறுதேனூர்க்கவுணியர்தீபன்கருதலர்போல்
வெளியுறுஞாலம்பகலிழந்தால்விளையார்கமலத்
தளியுறுமென்மலர்த்தாதளைந்தாழியமைப்பவருந்
துளியுறுவாடையிதாமடமானைத்துவள்விப்பதே... ... ...(௬௭)

தேறும்புனற்றில்லைச்சிற்றம்பலத்துச்சிறந்துவந்துள்
ளூறுமமிர்தைப்பருகிட்டெழுவதொருட்களிப்புக்
கூறும்வழிமொழிதந்தெனைவாழ்வித்தவன்கொழுந்தே
னூறுமலங்கற்றமிழாகரனென்னுநன்னிதியே ......... ...(௬௮)

நிதியுறுவாரறனின்பம்வீடெய்துவரொன்னவேதந்
துதியுறுநீள்வயற்காழியர்கோனைத்தொழாரினைய
நதியுறுநீர்தெளித்தஞ்சலெனவண்ணலன்றுவெறு
மதியுறுவாணுதல்பாதம்பணிந்தனண்மன்னனையே... ... ...(௬௯)

மன்னங்கனையந்தமிழாகரன்வெற்பில்வந்தொருவ
ரன்னங்களஞ்சன்மினென்றடர்வேழத்திடைவிலங்கிப்
பொன்னங்கலசாவகையெடுத்தாற்கிவள்பூணமுந்தி
யின்னந்தழும்புளவாம்பெரும்பாலுமவ்வேந்தலுக்கே ... ...(௭0)

ஏந்துமுலகுறுவீரொழிநீலநக்கர்க்குமின்பப்
பூந்தண்புகலூர்முருகற்குத்தோழனைப்போகமார்ப்பைக்
காந்துங்கனலிற்குளிர்படுத்துக்கடற்கூடலின்வாய்
வேந்தின்றுயர்தவிர்த்தானையெப்போதும்விரும்புமினே ... ...(௭க)

விரும்பும்புதல்வனைமெய்யரிந்தாக்கியவின்னமிர்த
மரும்பும்புனற்சடையாயுண்டருளென்றடிபணிந்த
விரும்பின்சுடர்க்களிற்றான்சிறுத்தொண்டனையேத்துதிரோற்
சுரும்பின்மலர்த்தமிழாகரன்பாதந்தொடர்வெளிதே ... ...(௭௨)

எளிவந்தவாவெழிற்பூவணைஞாண்மணித்தார்சழுங்கத்
துளிவந்தகண்பிசைந்தேகலுமெங்களரன்றுணையாங்
கிளிவந்தசொல்லிபொற்கிண்ணத்தின்ஞானவமிர்தளித்த
வளிவந்தபூங்குஞ்சியின்சொற்சிறுக்கன்றனாருளே ... ...(௭௩)

அருளுந்தமிழாகரனின்னலங்கறந்தென்பெயரச்
சுருளுங்குழலியற்கீந்திலையேமுன்புதூங்குகரத்
தருளுங்களிற்றினொடோட்டருவானையருளியன்றே
மருளின்மொழிமடவாள்பெயரொன்கண்வருவிப்பதே ... ...(௭௪)

வருவாருருவின்வழிவழிவைத்தவனமருந்துந்
திருவாரிருந்தசெழுநகர்ச்செவ்வித்திருவடிக்கா
டருவான்றமிழாகரன்கரம்போற்சலம்வீசக்கண்டு
வெருவாவணங்கொண்டல்காண்மிண்டிவானத்துமின்னியவே ...(௭௫)

மின்னார்குடுமிநெடுவெற்பகங்கொங்கில்வீழ்பனிநோய்
தன்னார்வழிகெட்டழிந்தமைசொல்லுவர்காளிறையே
மன்னார்பரிசனத்தோர்மேற்புகலுமெவற்குமிக்க
நன்னாவலர்பெருமானருகாசனிநல்கிடவே ...... ...(௭௬)

நல்கென்றடியினிணைபணியார்சண்பைநம்பெருமான்
பல்கும்பெரும்புகழ்பாடகில்லார்சிலர்பாழ்க்கிறைத்திட்
டொல்குமுடம்பினராய்வழிதேடிட்டிடறிமுட்டிப்
பில்கும்மிடமறியார்கெடுவாருறுபேய்த்தனமே ...... ...(எஎ)

தனமேதருபுகழ்ச்சைவசிகாமணிதன்னருள்போன்
மனமேபுகுந்தமடக்கொடியேமலர்மேலிருந்த
வனமேயமிர்தக்குமுதச்செவ்வாயுங்களாயமென்னு
மினமேபொலியவண்டாடெழிற்சோலையுளெய்துகவே ... ...(எஅ)

உகட்டித்துமோட்டுவராலினமேதிமுலையுரிஞ்ச
வகட்டிற்சொரிபாறடநிறைகொச்சைவயத்தரசைத்
தகட்டிற்றிகழ்மணிப்பூண்டமிழாகரன்றன்னையல்லாற்
பகட்டிற்பொலியினும்வேண்டேனொருவரைப்பாடுதலே ...... ...(எகூ)

பாடியசெந்தமிழாற்பழங்காசுபரிசில்பெற்ற
நீடியசீர்த்திருஞானசம்பந்தனிறைபுகழா
னேடியபூந்திருநாவுக்கரைசொடெழின்மிழலைக்
கூடியகூட்டத்தினாலுளதாய்த்திக்குவலயமே ... ... ...(அ0)

வலயத்திணிதோண்மிசைமழுவேற்றிமனைப்புறத்து
நிலையெத்தனைபொழுதோகண்டனூரனைநீதிகெட்டார்
குலையக்கழுவின்குழுக்கண்டவன்றிகழ்கொச்சையன்ன
சிலையொத்தவாணுதன்முன்போன்மலர்கதிருக்கண்களே ... ...(அக)

கண்ணார்திருநுதலோன்கோலக்காவிற்கரநொடியாற்
பண்ணார்தரப்பாடுசண்பையர்கோன்பாணிநொந்திடுமென்
றெண்ணாரெழுத்தஞ்சுமிட்டபொற்றாளங்களீயக்கண்டு
மண்ணார்சிலர்சண்பைநாதனையேத்தார்வருந்துவதே ... ...(அஉ)

வருந்துங்கொலாங்கழன்மண்மிசையேகிடிலென்றுமென்றார்
திருந்தும்புகழ்ச்சண்பைஞானசம்பந்தர்க்குச்சீர்மணிகள்
பொருந்துஞ்சிவிகைகொடுத்தனன்காண்புணரித்திகழ்நஞ்
சருந்தும்பிரானம்மரத்துறைமேயவரும்பொருளே ... ...(அங)

பொருளெனவென்னைத்தன்பொற்கழல்காட்டிப்புகுந்தெனக்கு
மருளியசீர்த்திருஞானசம்பந்தனருளிலர்போல்
வெருளினமானின்மென்னோக்கியைவிட்டுவிழுநிதியின்
றிரளினையாதரித்தானன்றுசாலவென்சிந்தனைக்கே ... ...(அச)

சிந்தையைத்தேனைத்திருவாவடுதுறையுட்டிகழு
மெந்தையைப்பாடலிசைத்துத்தொலையாநிதியமெய்தித்
தந்தையைத்தீத்தொழின்மூட்டியகோன்சரண்சார்விலரோ
ணிந்தையைப்பெற்றொழியாதிரந்தேகரநீட்டுவரோ ... ...(அரு)

நீட்டுவரோதத்தொடேறியசங்கநெகுமுளரித்
தோட்டுவெண்முத்தஞ்சொரிசண்பைநாதற்றொழாதவரில்
வேட்டுவர்வேட்டதண்ணீரினுக்குண்ணீருணக்குழித்த
காட்டுவரூறல்பருகுங்கொலாமெங்கணங்குழையே ...... ...(அசு)

குழைக்கின்றகொன்றைபொன்போலமலரநுங்கூட்டமெல்லா
மழைக்கின்றகொண்டலியம்பொன்னிலையகன்றூர்வரவு
பிழைக்கின்றதுகொலென்றஞ்சியொண்சண்பைப்பிரான்புறவத்
திழைக்கின்றகூடன்முடியவெண்ணுதவிளங்கொடிக்கே...... ...(அஎ)

கொடித்தேரவுணர்குழாமனலூட்டியகுன்றவில்லி
யடித்தேர்கருத்திலருகாசனியையணியிழையார்
முடித்தேர்கமலங்க்வர்வான்முரிபுருவச்சிலையால்
வடித்தேர்நயனக்கணையிணைகோத்துவளைத்தனரோ ...... ...(அஅ)

வளைபடுதண்கடற்கொச்சைவயவன்மலர்க்கழற்கே
வளைபடுநீண்முடிவார்புனலூரன்றனீரிலங்கு
வளைபடுகண்ணியர்தம்பொதுத்தம்பலநாறுமிந்த
வளைபடுகிண்கிணிக்கான்மைந்தன்வாயின்மணிமுத்தமே...... ...(அகூ)

முத்தனவெண்ணகையார்மயன்மாற்றிமுறைவழுவா
தெத்தனைகாலநின்றேத்துமவரிலுமென்பணிந்த
பித்தனையெங்கள்பிரானையணைவதெளிதுகண்டீ
ரத்தனைஞானசம்பந்தனைப்பாதமடைந்தவர்க்கே......... ... ...(கூ0)

அடைத்ததுமாமறைக்காடர்தங்கோயிற்கதவினையன்
றுடைத்ததுபாணன்றனியாழினொலியையுரகவிடந்
துடைத்ததுதோணிபுரத்துக்கிறைவன்சுடரொளிவாய்ப்
படைத்ததுதண்மையைநள்ளாற்றரசுபணித்திடவே ... ...(கூக)

பணிபடுநுண்ணிடைபாதம்பொருபலகாதமென்று
தணிபடுமின்சொற்களாற்றவிர்த்தேற்குத்தழலுமிழ்கான்
மணிபடுபொற்கழன்ஞானசம்பந்தன்மருவலர்போற்
றுணிபடுவேலன்னகண்ணியென்னோவந்துதோன்றியதே... ...(கூஉ)

தோன்றறன்னோடுடனேகியசுந்தரப்பூண்முலையை
யீன்றவரோயிந்தவேந்திழையாரவரிவ்வளவில்
வான்றவர்சூழுந்தமிழாகரன்றன்வடவரையே
போன்றபொன்மாடக்கழுமலநாடுபொருந்துவரோ ... ...(கூ௩)

பொருந்திடஞானத்தமிழாகரன்பதிபொற்புரிசை
திருந்தியதோணிபுரத்துக்கிறைவன்றிருவருளாற்
கருந்தடநீரொழுகாலையிற்காகூகழுமலமென
திருந்திடவாமென்றுவானவராகியியங்கியதே... ... ...(கூ௪)

இயலாதனபலசிந்தையராயியலுங்கொலென்று
முயலாதனவேமுயன்றுவன்மோகச்சுழியழுந்திச்
செயலார்வரைமதிற்காழியர்கோன்றிருநாமங்களுக்
கயலாரொனப்பலகாலங்கள்போக்குவராதர்களே ... ...(கூரு)

ஆதரவும்பசப்புமிவளெய்தினளென்றயலார்
மாதரவஞ்சொல்லியென்னைநகுவதுமாமறையி
னோதரவம்பொலிகாழித்தமிழாகரனொடன்றே
தீதரவம்படவன்னையென்னோபலசெப்புவதே ... ...... ...(கூசு)

செப்பியவென்னதவமுயன்றேனல்லசெந்தமிழா
லொப்புடைமாலைத்தமிழாகரனையுணர்வுடையோர்
கற்புடைவாய்மொழியேத்தும்படிகதநிட்டிவர
மற்படுதொல்லைக்கடல்புடைசூழ்தருமண்ணிடையே ... ... (கஎ)

மண்ணிற்றிகழ்சண்பைநாதனைவாதினில்வல்லமணைப்
பண்ணைக்கழுவினுதிவைத்தெம்பந்தவினையறுக்குங்
கண்ணைக்கதியைத்தமிழாகரனையெங்கற்பகத்தைத்
திண்ணற்றுடையற்கவுணியர்தீபனைச்சேர்ந்தனமே ... ... (கஅ)

சேரும்புகழ்த்தருஞானசம்பந்தனையானுரைத்த
பேருந்தமிழ்ப்பாவிவைவல்லவர்பெற்றவின்புலகங்
காருந்திருமிடற்றுயருளாயென்றுகைதொழுவர்
நீருமலருங்கொளாநெடுமாலும்பிரமனுமே ... ... (கக)

பிரமாபுரம்வெங்குருசண்பைதோணிபுகலிகொச்சை
சிரமார்புரநற்புறவந்தராய்காழிவேணுபுரம்
வரமார்பொழிற்றிருஞானசம்பந்தன்பதிக்குமிக்க
பரமார்கழுமலம்பன்னிருநாமமிப்பாரகத்தே... ... ... (க00)

வெண்பா.

பாரகலத்துன்பங்கடந்தமரராற்பணியு
மேரகலம்பெற்றுலும்மின்னுதாற்—காரகிலின்
றூமங்கமழ்மாடத்தோணிபுரத்தலைவ
ளுமஞ்செவிக்கிசையாநாள்

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தர்திருவந்தாதி முற்றும்.

——00——

திருச்சிற்றம்பலம்

நம்பியாண்டார்நம்பி அருளிச்செய்த

# திருஞானசம்பந்தர் திருச்சண்பை

## விருத்தம்.

பாலித்தெழிறங்குபார்முகமுய்யப்பறிதலையோர்
மாலுற்றழுந்தவவதரித்தோன்மணிநீர்க்கமலத்
தாலித்தலர்மிசையன்னநடப்பவணங்கிதென்றுச்
சாலித்தலைபணிசண்பையர்காவலன்சம்பந்தனே ............ (க)

கொங்குதங்குங்குஞ்சிகூடாப்பருவத்துக்குன்றவில்லி
பங்குதங்கும்மங்கைதன்னருள்பெற்றவன்பைம்புணரிப்
பொங்குவங்கப்புனல்சேர்த்தபுதுமணப்புன்னையின்கீழ்ச்
சங்குதங்கும்வயற்சண்பையர்காவலன்சம்பந்தனே ........ (உ)

குவளைக்கருங்கட்கொடியிடைதன்பந்தவிரவன்று
துவளத்தொடுவிடந்தீர்த்ததமிழின்றொகைசெய்தவன்
றிவளக்கொடிக்குன்றமாளிகைச்சூளிகைச்சென்னியின்வாய்த்
தவளப்பிறைதங்குசண்பையர்காவலன்சம்பந்தனே ........ (௩)

கள்ளம்பொழினனிபள்ளிதடங்கடமாக்கியஃதே
வெள்ளம்பணிநெய்தலாக்கியவித்தகன்வெண்குருகுப்
புள்ளொண்டவளப்புரிசங்கொடாலக்கயலுகளத்
தள்ளந்தடம்புனற்சண்பையர்காவலன்சம்பந்தனே ......... (௪)

ஆறதேறுஞ்சடையானருண்மேவவவனியர்க்கு
வீறதேறுந்தமிழால்வழிகண்டவன்மென்கிளிமாந்
தேறல்கொதித்தூறுசண்பகந்தாவிச்செழுங்கமுகின்
தாறதேறும்பொழிற்சண்பையர்காவலன்சம்பந்தனே ... (௫)

அந்தமுந்தும்பிறவித்துயர்தீரவரனடிக்கே
பந்தமுந்துந்தமிழ்செய்தபராபரன்பைந்தடத்தேன்
வந்துமுந்திநந்தமுத்தங்கொடுப்பவயற்கயலே
சந்தமுந்தும்பொழிற்சண்பையர்காவலன்சம்பந்தனே... ... ... (௬)

புண்டலைக்குஞ்சரப்போர்வையர்கோயிற்புகவடைக்கு
மொண்டலைத்தண்டமிழ்க்குண்டாசனியும்பர்ப்பம்பிமின்னுங்
கொண்டலைக்கண்டுவண்டாடப்பெடையொடுங்கொக்கிறகுந்
தண்டலைக்குண்டகழ்ச்சண்பையர்காவலன்சம்பந்தனே... ...... (௭)

எண்டலைக்குந்தலைவன்கழல்சூடியென்னுள்ளவெள்ளங்
கண்டலைப்பத்தன்கழறந்தவாகதிர்முத்தநத்தம்
விண்டலைப்பத்தியிலோடும்விரவிமிளிர்பவளந்
தண்டலைக்குங்கடற்சண்பையர்காவலன்சம்பந்தனே... ... ...(௮)

ஆறுமண்டப்பண்டுசெஞ்சொனடாத்தியமண்முழுதும்
பாறுமண்டக்கண்டசைவசிகாமணிபைந்தடத்த
சேறுமண்டச்சங்குசெங்கயறேமாங்கனிசிதறிச்
சாறுமண்டும்வயற்சண்பையர்காவலன்சம்பந்தனே... ... ... (௯)

விடந்திளைக்கும்மரவல்குன்மென்கூந்தல்பெருமணத்தின்
வடந்திளைக்குங்கொங்கைபுல்கியமன்மதன்வண்கதலிக்
கடந்திளைத்துக்கமுநீர்புல்கியொல்கிக்கரும்புரிஞ்சித்
தடந்திளைக்கும்புனற்சண்பையர்காவலன்சம்பந்தனே... ... ...(௧0)

பாலித்தகொங்குகுவளைக்கள்ளம்பொழிற்கீழ்ப்பரந்து
வாலிப்பவாறதேறுங்கழனிச்சண்பையந்தமுந்து
மேலிட்டபுன்றலைக்குஞ்சரத்தெண்டலைக்குந்தலைவன்
கோலிட்டவாறுவிடந்திளைக்கும்மரவல்குலையே... ... ... (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தர் திருச்சண்பை விருத்தம் முற்றும்.

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி அருளிச்செய்த

# திருஞானசம்பந்தர் திருமும்மணிக்கோவை.

நிலைமண்டிலவாசிரியப்பா

திங்கட்கொழுந்தோடுபொங்கரவுதிளைக்குங்
கங்கைப்பேரியாற்றுக்கடுவரக்கலுழியி
னிதழியின்செம்பொனிருகரைசிதறிப்
புதலெருக்குமலர்த்தும்புரிபுன்சடையோன்
றிருவருள்பெற்றவிருபிறப்பாளன்
முத்தீவேள்விநான்மறைவளர
வைவேள்வுயர்த்தவறுதொழிலாள
னேழிசையரசையெண்டிசையறியத்
தண்டப்படுத்ததண்டமிழ்விரகன்
காழிநாடன்கவுணியர்தலைவன்
மாமறைநோக்கிமலைமகள்புதல்வன்
றிருந்தியபாடல்விரும்பினர்க்கல்லது
கடுந்துயருட்புகக்கைவிளிக்குமிந்
நெடும்பிறவிக்கடனீந்துவதரிதே ... ... (க)

வெண்பா

அரியொடுநான்முகத்தோனாதிசுரர்க்கெல்லாந்
தெரியாமைச்செந்தழலாய்நின்ற—வொருவன்சீர்
தன்றலையின்மேற்றரித்தசம்பந்தன்றாளிணைக
ளென்றலையின்மேலிருக்கவென்று ... ..... ... (உ)

கலித்துறை

என்றுமடியவருள்ளத்திருப்பனவிவ்வுலகோர்
நன்றுமலர்கொடுதூவித்துதிப்பனநல்லசங்கத்
தொன்றும்புலவர்களியாப்புக்குரியனவொண்கலியைப்
பொன்றுங்கவுணியன்சைவசிகாமணிபொன்னடியே... ... (ங)

ஆசிரியப்பா

அடுசினக்கடகரியதுபடவுரித்த
படர்சடைக்கடவுடன்றிருவருளதனாற்பிறந்தது
கழுமலமென்னுங்கடிநகரதுவே வளர்ந்தது
தேங்கமழ்வாவிச்சிலம்பரையன்பெறு
பூங்குழன்மாதிடுபோனகமுண்டே பெற்றது
குழகனைப்பாடிக்கோலக்காப்புக்
கழகுடைச்செம்பொற்றாளமவையே தீர்த்தது
தாதமர்மருகற்சடையனைப்பாடிப்
பேதுறுபெண்ணின்கணவனைவிடமே யடைத்த
தனைசொரிசையவணிமறைக்காட்டுக்

குழைசேர்குடுமிக்கொழுமணிக்கதவே யேறிற்
றத்தியுமாவுந்தவிரவரத்துறை
முத்தின்சிவிகைமுன்னாட்பெற்றே பாடிற்
றருமறையோத்தூராண்பனையதனைப்
பெருகிறமெய்தும்பெண்பனையாவே கொண்டது
பூவிடுமதுவிற்பொறிவண்டுழலு
மாவடுதுறையிற்பொன்னாயிரமே கண்ட
துறியொடுபீலியொருகையிற்கொள்ளும்
பறிதலைச்சமணைப்பல்கழுமிசையே நீத்த
தமிழ்ச்சுவையேயறிந்தரனடிபரவுந்
தமிழ்ச்சுவையறியாத்தம்பங்களையே நினைந்த
தள்ளற்பழனக்கொள்ளம்பூதூ
ரிக்கரையோடமக்கரைச்செலவே மிக்கவ
ருனசம்பந்தமறுத்துயக்கொளவல
ஞானசம்பந்தனிஞ்ஞாலத்திடையே ...... ... (ச)

வெண்பா.

நிலத்துக்குமேலாறுநீடுலகத்துச்சித்
தலத்துக்குமேலேதானென்பர்—சொலத்தக்க
சுத்தர்கள்சேர்காழிச்சுரன்ஞானசம்பந்தன்
பத்தர்கள்போய்வாழும்பதி ...... ...... ...... (ரு)

கலித்துறை.

பதிகம்பலபாடிநீடியபிள்ளைபரசுதரற்
கதிகம்மணுக்கனமணர்க்குக்காலனவதரித்த
மதியந்தவழ்மாடமாளிகைக்காழியென்றூல்வணங்கா
ரொதியம்பணைபோல்விழுவரந்தோசிலவூமர்களே ...... ... (சு)

இணைக்குறளாசிரியப்பா.

கவளமாளிகைத்திவளுமியானையின்
கவுட்டலைக்கும்பத்
தும்பர்ப்பதணத்தம்புதந்திளைக்கும்
பெருவளந்தழீஇத்திருவளர்புகலி
விளங்கப்பிறந்தவளங்கொள்சம்பந்தன்
கருதியஞ்செவ்விச்சுருதியஞ்சிலம்பிற்
றேமருதினைவளர்காமருபுனத்து
மும்மதஞ்சொரியும்வெம்முகக்கைம்மா
மூரிமருப்பிற்சீரியமுத்துக்
கொடுஞ்சிலைவளைத்தேகொடுஞ்சரந்துரந்து
முற்படவந்தமுயன்றங்குதவிசெய்
வெற்பனுக்கலது,சுணங்கணிமென்முலைச்சுரிகுழன்மாதினை
மணஞ்செயமதிப்பதுநமக்குவன்பழியே ...... (எ)

வெண்பா.

பழியொன்றுமோராதேபாயிடுக்கிவாளா
கழியுஞ்சமண்கையர்தம்மை—யழியத்
துரந்தரங்கச்செற்றான்சுரும்பரற்றும்பாத
நிரந்தரம்போய்நெஞ்சேநினை ...... ........ ...... (அ)

கலித்துறை

நினையாதரவெய்திமேகலைநெக்குவளைசரிவா
டனையாவவென்றின்றருளுதியேதடஞ்சாலிவயற்
கனையாவருமேதிகன்றுக்கிரங்கித்தன்கால்வழிபால்
நனையாவருங்காழிமேவியசீர்ஞானசம்பந்தனே ...... ...... (கூ)

நிலைமண்டிலவாசிரியப்பா.

தனமலிகமலத்திருவெனுஞ்செல்வி
விருப்பொடுந்திளைக்கும்வியாவின்பத்
தாடகமாடநீடுதென்புகலிக்
காமருகவினார்கவுணியர்தலைவ
பொற்பமர்தோளநற்றமிழ்விரக
மலைமகள்புதல்வகலைப்பயினாவநினாது
பொங்கொளிமார்பிற்றங்கியதிருநீ
ருதரித்திறைஞ்சியபேதையர்கையில்
வெள்வளைவாங்கிச்செம்பொன்கொடுத்தலிற்
பிள்ளையாவனுதெரிந்ததுபிறர்க்கே ...... ...... (க0)

வெண்பா.

பிறவியெனும்பொல்லாப்பெருங்கடலைநீந்தத்
துறவியெனுந்தோணிகண்டீர்—நிறையுலகிற்
பொன்மாலைமார்பன்புனற்காழிச்சம்பந்தன்
றன்மாலைஞானத்தமிழ் .......... .......... (கக)

கலித்துறை.

ஞானந்திரளையிலேயுண்டனையென்றுநாடறியச்
சோனந்தருகுழலார்சொல்லிடாமுன்சுரும்புகட்குப்
பானந்தருபங்கயத்தார்கொடுபடைச்சால்வழியே
கூனந்தருள்வயல்சூழ்காழிமேவியகொற்றவனே ... ... ... (கஉ)

நேரிசையாசிரியப்பா.

அவனிதலநெரியவெதிரொதிர்மலைஇச்
சொரிமதக்களிற்றுமத்தகம்போழ்ந்து
செஞ்சேறாடிச்செல்வனவரியே
யெஞ்சாப்படவரவுச்சிப்பருமணிபிதுங்கப்
பிடரிடைப்பாய்வனபேழ்வாய்ப்புலியேயிடையிடைச்
செறியிருளுருவச்சேண்விசும்பதனிற்
பொறியெனவிழுவனபொங்கொளிமின்னே
உறுசினவரையாலுந்தியகலுழிக்
கரையாலுழல்வனகரடியின்கணனேநினையார்
பொருகடலுதைந்தசுரிமுகச்சங்கு
செங்கயல்கிழித்தபங்கயமலரின்
செம்மடனிறையவெண்முத்துதிர்க்கும்
பழனக்கழனிக்கழுமலநாடன்
வைகையிலமணாவாதுசெய்தறுத்த
சைவசிகாமணிசம்பந்தன்வெற்பிற்
சிறுகிடையவடன்பெருமுலைபுணர்வா
னெறியினில்வரலொழிநீமலையோனே ...... ...(கரு.)

வெண்பா.

மலைத்தலங்கண் மீதேறிமாதவங்கள்செய்து
முலைத்தலங்கணீத்தாலுமுப்பர்—கலைத்தலைவன்
சம்பந்தற்காளாய்த்தடங்காழிகைகூப்பித்
தம்பந்தந்தீராததாம் ...... ...... ...... ......... (௧௪)

கலித்துறை.

தாமரைமாதவிசேறியநான்முகன்றண்பதிபோற்
காமருசீர்வளர்காழிநன்னுடன்கவித்திறத்து
நாமருவாதவர்போலநீங்குநல்வில்லிபின்னே
நீர்மருவாதசுரத்தெங்ஙனேகுமென்னேரிழையே ............ (௧௫)

நிலைமண்டிலவாசிரியப்பா,

இழைகெழுமென்முலையிதழிமென்மலர்கொயத்
தழைவரவொசித்ததடம்பொழிலிதுவேகாமர்
சுனைகுடைந்தேறித்துகிலதுபுனையநின்
றெனையுங்கண்டுவெள்கிடமிதுவேதினைதொறும்
பாய்கிளியிரியப்பையவந்தேறி
யாய்வென்றிருக்குமணிப்பரணிதுவேயீதே
யின்புறுசிறுசொல்லவைபலவியற்றி
யன்புசெய்தென்னையாட்கொளுமிடமே
பொன்புரைதடமலர்க்கமலக்குடுமியிலிருந்து
நற்றொழில்புரியுநான்முகனுட்டைப்
புற்கடைகழீஇப்பொங்குசராவத்து, நெய்த்துடுப்பெடுத்த
முத்தீப்புகையா, னுடொறுமறைக்குஞ்சேடுறுகாழி
யெண்டிசைநிறைந்ததண்டமிழ்விரக
னலங்கலந்தோங்கும்விலங்கலின்மாட்டுப்
பூம்புனமதனிற்காம்பனதோளி
பஞ்சித்திருந்தடிநோவப்போயெனை
வஞ்சித்திருந்தமணியறையிதுவே ............ (௧௬)

வெண்பா.

வேழங்களெய்பவற்குவில்லாவதிக்கால
மாழங்கடன்முத்தம்வந்தலைக்கும்—நீள்வயல்சூழ்
வாய்ந்ததிவண்மாடமதிற்காழிக்கோன்சிலம்பிற்
சாய்ந்ததுவண்டழையோதான் ... ... ... ... ... (௧௭)

கலித்துறை.

தழைக்கின்றசீர்மிகுஞானசம்பந்தன்றடமலைவா
யழைக்கின்றமஞ்ஞையலர்ந்தனகோடலம்பெய்திடுவா
னிழைக்கின்றதந்தரத்திந்திரசாபநின்னெண்ணமொன்றும்
பிழைக்கின்றதில்லைநற்றேர்வந்துதோன்றிற்றுப்பெய்வளையே ...(௧௮)

நேரிசையாசிரியப்பா.

வளைகான்மந்திமாமரப்பொந்தில்
விளைதேனுண்டுவேணுவின்றுணியாற்
பாறையிற்றுயில்பனைக்கைவேழத்தை

யுந்தியெழுப்புமந்தண்சிலம்பவஃதிங்
கென்னையரிங்குவருவர்பலரோ
யன்னைகாணிலலர்தூற்றும்மேபொன்னேர்
சிறுபரற்கரந்தவிளிகுரற்கிண்கிணி
சேவடிபுல்லிச்சில்குரலியற்றி
யமிர்துண்செவ்வாயருவிதூங்கத்
தாளம்பிரியாத்தடக்கையசைத்துச்
சிறுகூத்தியற்றிச்சிவனருள்பெற்ற
நற்றமிழ்விரகன்பற்றலர்போல
விடுங்கியமனத்தொடுமொடுங்கியசென்று
பரிதியுங்குடகடற்பாய்ந்தனன்
கருதிநிற்பதுபிழைகங்குலிப்புனத்தே ...... (கக)

வெண்பா.

தேம்புனமேயுன்னைத்திரிந்துதொழுகின்றேன்
வாம்புகழ்சேர்சம்பந்தன்மாற்றலர்போற்—றேம்பி
யழுதகன்றுளென்றுதணிமலையர்வந்தாற்
றொழுதகன்றுளென்றுநீசொல்லு ...... ...... ......... (உ0)

கலித்துறை.

சொற்செறிநீள்கவிசெய்தன்றுவைகையிற்றெல்லமணர்
பற்செறியாவண்ணங்காத்தசம்பந்தன்படர்சிலம்பிற்
கற்செறிவார்சுனைநீர்குடைந்தாடுங்கனங்குழையை
யிற்செறியாவண்ணங்காத்திலைவாழியிரும்புனமே ......... ...... (உக)

நிலைமண்டிலவாசிரியப்பா.

புனலறவறந்தபுன்முளிசுரத்துச்
சினமலிவேடர்செஞ்சரமுரீஇப்
படுகலைக்குளம்பின்முடுகுநாற்றத்
தாடுமரவினகடுதீயப்
பாடுதகையின்பஞ்சுரங்கேட்டுக்
கள்ளியங்கவட்டிடைப்பள்ளிகொள்ளும்
பொறிவரிப்புறவேயுறவலைகாணிநறைகமழ்
தேம்புனல்வாவித்திருக்கழுமலத்துப்
பையரவசைத்ததெய்வநாயகன்
றன்னருள்பெற்றபொன்னணிக்குன்ற
மானசம்பந்தமண்மிசைத்துரந்த
ஞானசம்பந்தனைநயவார்கிளைபோல்
வினையேனிருக்குமனைபிரியாத
வஞ்சிமருங்குலஞ்சொற்கிள்ளை
யேதிலன்பின்செலவிலக்காதொழிந்தனை
யாதலிற்புறவேயுறவலைநீயே ............... (உஉ)

வெண்பா.

அலைகடலின்மீதோடியந்துளையர்வீசும்
வலைகடலில்வந்தேறுசங்க—மலர்கடலை
வெண்முத்தவிழ்வயல்சூழ்வீங்குபுனற்காழியே
யொண்முத்தமிழ்பயந்தானூர் ............ ............ (உ௩)

கலித்துறை.

உளரும்பசும்புரவித்தேரொளித்ததொளிவிசும்பிற்
கூருமிருளொடுகோழிகண்டுஞ்சாகொடுவினையேற்
காருமுணர்ந்திலர்ஞானசம்பந்தனந்தாமரையின்
ருருந்தருகிலனெங்ஙனமியான்சங்குதாங்குவதே ... ...... (உச)

இணைக்குறளாசிரியப்பா.

தேமலிகமலப்பூமலிபடப்பைத்
தலைமுகடேறியிளவெயிற்காயுங்
கவடிச்சிறுகாற்கற்கடகத்தைச்
சுவடிச்சியங்குஞ்சூனரிமுதுகைத்
துன்னியெழுந்துசெந்நென்மோதுங்
காழிநாட்டுக்கவுணியர்குலத்தை
வாழத்தோன்றியவண்டமிழ்விரகன்
றெண்டிரைக்கடல்வாய்க்
காண்டகுசெவ்விக்களிறுகளுகுத்த
முட்டைமுன்கவரும்பெட்டையங்குருகே
வாடையடிப்பவைகறைப்போதிற்
றனிநீபோந்துபனிநீரொழுகக்
கூசிக்குளிர்ந்துபேசாதிருந்து
மேனிவெளுத்தகாரணமுரையா
யிங்குத்தணந்தெய்திறுமரு
யின்னம்வந்திலரோசொல்லிளங்குருகே ......... (உரு)

வெண்பா.

குருகும்பணிலமுங்கூனந்துஞ்சேலும்
பெருகும்வயற்காழிப்பிள்ளை—யருகந்தர்
முன்கலங்கநட்டமுடைகெழுமியாலின்னம்
புன்கலங்கல்வைகைப்புனல் ... ...... ... ... (உசு)

கலித்துறை.

புனமாமயில்சாயல்கண்டுமுன்போகாகிளிபிரியா
வினமான்மொழியொக்குமென்றுவிட்டேகாவிருநிலத்துக்
கனமாமதிற்காழிஞானசம்பந்தன்கடன்மலைவாய்த்
தினைமாதிவள்காக்கவெங்கேவிளையுஞ்செழுங்கதிரே ......... (உஎ)

நிலைமண்டிலவாசிரியப்பா.

கதிர்மதிநுழையும்படர்சடைமகுடத்
தொருத்தியைக்கரந்தவிருத்தனைப்பாடி
முத்தின்சிவிகைமுன்னாட்பெற்ற
வத்தன்காழிநாட்டுறையணங்கோ—மொய்த்தெழு
தாமரையல்லித்தவிசிடைவளர்ந்த
காமருசெல்வக்கனங்குழையவளோமீமருத்
தருவளர்விசும்பிற்றவநெறிகலக்கு
முருவளர்கொங்கையுருப்பசிதானோ
வாருணக்கொம்போமதனன்கொடியோ
வாரணியத்துளருந்தெய்வமதுவோ

வண்டமர்குழலுங்கெண்டையங்கண்ணும்
வஞ்சிமருங்குங்கிஞ்சுகவாயு
மேந்திளமுலையுங்காந்தளங்கையு
மோவியர்தங்களொண்மதிகாட்டும்
வட்டிகைப்பலகைவான்றுகிலிகையா
லியக்குதற்கரியதோருருவுகண்டென்னை
மயக்கவந்துதித்ததோர்வடிவிதுதானே ...... (உஅ)

வெண்பா.

வடிக்கண்ணியாளையிவ்வான்சுரத்தூடே
கடிக்கண்ணியானொடுங்கண்டோம்—வடிக்கண்ணி
மாம்பொழில்சேர்வைகையமண்மலைந்தான்வண்காழிப்
பூம்பொழிலேசேர்ந்திருப்பர்புக்கு ...... ......... ... (உகூ)

கலித்துறை.

குருந்துந்தரளமும்போல்வண்ணவெண்ணகைக்கொய்மலராள்
பொருந்துந்திரள்புயத்தண்ணல்சம்பந்தன்பொற்றாமரைக்கா
வருந்துந்திரள்கொங்கைமங்கையைவாட்டினைவானகத்தே
திருந்துந்திரண்முகின்முந்திவந்தேறுதிங்கட்கொழுந்தே ...... (௩௦)

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தர்திருமும்மணிக்கோவை முற்றும்

———oo———

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார் நம்பியருளிச்செய்த

# திருஞானசம்பந்தர் திருவுலாமாலை

கலிவெண்பா.

திருந்தியசீர்ச்செந்தாமரைத்தடத்துச்சென்றே
ரிருந்தணிளமேதிபாயப்—பொருந்திய
புள்ளிரியப்பொங்குகயல்வெருவப்பூங்குவளைக்
கள்ளிரியச்செங்கழுநீர்கால்சிதையத்—துள்ளிக்
குருகிரியக்கூனிறவம்பாயக்களிறு
முருகுவிரிபொய்கையின்கண்மூழ்க—வெருவுற்ற
கோட்டகத்துப்பாய்வாளைகண்டலவன்கூசிப்போய்த்
தோட்டகத்தசெந்நெற்றுறையடையச், சேட்டகத்த
காவிமுகமலரக்கார்நீலங்கண்படுப்ப
வாவிக்கணெய்தலலமர, மேவிய
வன்னந்துயிலிழப்பவஞ்சிறைசேர்வண்டினங்க
டென்னுந்துணையிழப்பச்சூழ்கிடங்கின்—மன்னிய
வள்ளைநகைகாட்டவண்குமுதம்வாய்காட்டத்
தெள்ளுபுனற்பங்கயங்கடேன்காட்ட—மெள்ள
நிலவுமலரணையினின்றிழிந்தசங்க
மிலகுகதிர்நித்திலங்களீன—வுலவிய
மல்லைப்பழனத்துவார்பிரசமீதழிய
வொல்லைவரம்பிடறியோடிப்போய்—புல்லிய
பாசடையசெந்நெற்படரொளியாற்பல்கதிரோன்

றேசடையவோங்குசெறுவுகளு—மாசினீர்
நித்திலத்தின்சாயுநிகழ்மரகதத்தோலுந்
தொத்தொளிசெம்பொற்றொழிற்பரிய—மொய்த்த
பவளத்தின்செவ்வியும்பாங்கணையவோங்கித்
திவளக்கொடிமருங்கிற்சேர்த்தித்—துவளாமைப்
பட்டாடைகொண்டுடுத்துப்பைந்தோடிலங்குகுழை
யிட்டமைந்தகண்ணாரிளங்கமுகும்—விட்டொளிசேர்
கண்களழல்சிதறிக்காய்சினத்தவாய்மதத்துத்
தண்டலையினீழற்றறியணைந்து—கொண்ட
கொலைபுரியாநீர்மையவாய்க்கொம்புவளைத்தேந்தி
மலையுமரவடிவங்கொண்டாங்—கிலைநெருங்கு
சூதத்திரளுந்தொகுகனிகளாணிவந்த
மேதகுசீர்த்தெங்கின்வியன்பொழிலும்—போதுற்
றினமொருங்குசெவ்வியவாயின்றேன்றதும்பு
கனிநெருங்குதிண்கதலிக்காடு—நனிவிளங்கு
நாற்றத்தாலெண்டிசையும்வந்துநலஞ்சிறப்ப
ஆற்றுமடுத்தவுயர்பலவு—மாற்றமரு
மஞ்சளெழில்வனமுமாதளையும்வார்பொழிலு
மிஞ்சியிளங்காவினீட்டமு—மெஞ்சாத
கூந்தற்கமுகுங்குளிர்பாடலத்தெழிலும்
வாய்ந்தசீர்ச்சண்பகத்தின்வண்காடு—மேந்தெழிலார்
மாதவியும்புன்னையுமன்னுமலர்க்குரவுங்
கேதகையுமெங்குங்கெழீஇப்—போதி
னிளந்தென்றல்வந்தசைப்பவெண்டிசையும்வாசம்
வளர்ந்துன்றுவார்பொழிலின்மாடே—கிளர்ந்தெங்கு
மாலையொலியுமரிவார்குரலொலியுஞ்
சோலைக்கிளிமிழற்றுஞ்சொல்லொலியு—மாலு
மறுபதங்களார்ப்பொலியுமான்றபொலிவெய்தி
யுறுதிரைநீர்வேலையொலிப்ப—வெறிகமழும்
நந்தாவனத்தியல்புநற்றவத்தோர்சார்விடமு
மந்தமில்சீராரழகினான்—முந்திப்
புகழ்வாருந்தன்மையவாய்ப்பூதலத்துளோங்கி
நிகழ்கிடங்குஞ்சூழ்கிடப்பநேரோ—திகழ
முளைநிரைத்துமூரிச்சிறைவகுத்துமொய்த்த
புளகத்தின்பாம்புரிசூழ்போகி—வளர
விரும்பதணஞ்சேரவிருத்தியெழிஞ்சின்
மருங்கணையவட்டாலையிட்டுப்—பொருந்தியசீர்த்
தோமரமுந்தொல்லைப்பொறிவீசியந்திரமுங்
காமரமுமெப்புழையுங்கைகலந்து—மீமருவும்
வெங்கதிரோன்றேர்விலங்குமிக்குயர்ந்தமேருப்போன்
றங்கனகத்திஞ்சியணிபெற்றுப்—பொங்கொளிசேர்
மாளிகையுமன்னியசீர்மண்டபமுமொண்டலத்த
சூளிகையுந்துற்றெழுந்ததெற்றிகளும்—வாளொளிய
நாடகசாலையுநன்பொற்கபோதகஞ்சேர்
பீடமைத்தமாடத்தின்பெற்றியுங்—கேடி
லுருவுபெறவகுத்தவம்பலமுமோங்கு
தெருவுவகுத்தசெய்குன்றும்—மருவினிய

சித்திரக்காவுஞ்செழும்பொழிலும்வாவிகளும்
நித்திலஞ்சேர்நீடுநிலைக்களமு—மெத்திசையுந்
துன்னியெழில்சிறப்பச்சோதிமலர்மடந்தை
மன்னிமகிழ்ந்துறையும்வாய்மைத்தாய்ப்—பொன்னு
மரகதமுநித்திலமுமாமணியும்பேணி
யிரவலர்கட்கெப்போதுமீந்துங்—கரவாது
கற்பகமுங்காருமெனக்கற்றவர்க்குநற்றவர்க்குந்
தப்பாக்கொடைவளர்க்குஞ்சாயாத—செப்பத்தாற்
பொய்மைகடிந்துபுகழ்புரிந்துபூதலத்து
மெய்மைதலைசிறந்துமேதக்கு—முண்மை
மறைபயில்வார்மன்னுவியாகரணக்கேள்வித்
துறைபயில்வார்தொன்னூல்பயில்வார்—முறைமையினு
லாகமங்கள்கேட்பாரருங்கலைநூலாதரித்துப்
போகமொடுங்காப்பொருடெய்ப்பார்—சோகமின்றி
நீதிநிலையுணர்வார்நீணிலத்துளைம்புலனுங்
காதல்விடுதவங்கள்காமுறுவா—ராதி
யருங்கலைநூலோதுவாராதரித்துவென்றிக்
கருங்கலியைநீங்கக்கனல்வகுப்பா—ரொருங்கிருந்து
காமநூல்கேட்பார்கலைஞானங்காதலிப்பா
ரோமநூலோதுவாருத்தரிப்பார்—பூமன்னு
நான்முகனேயன்னசீர்நானூற்றுவர்மறையோர்
தாமன்னிவாழுந்தகைமைத்தாய்—நாமன்னு
மாரணங்குமற்றையருந்ததியும்போன்மடவா
ரோரணங்குமாடத்தினிதிருந்து—சீரணங்கு
வீணைபயிற்றுவாரியாழ்பயில்வார்மேவியசீர்ப்
பாணம்பயில்வார்பயனுறுவார்—பேணியசீர்ப்
பூவைக்குப்பாட்டுரைப்பார்பொற்கிளிக்குச்சொற்பயில்வார்
பாவைக்குப்பொன்புனைந்துபண்புறுப்பா—ராயெங்கு
மங்கையர்கள்கூட்டமுமன்னுசிறுர்குழுவும்
பொங்குலகமெல்லாம்பொலிவடையத்—தங்கிய
வேதவொலியும்விழாவொலியுமெல்லியலார்
கீதவொலியுங்கிளர்ந்தெங்கு—மாதரார்
பாவையொலியும்பறையொலியும்பல்சனங்கண்
மேவுமொலியும்வியனகரங்—காவலர்கள்
பம்பைத்துடியொலியும்பவ்வப்படையொலியுங்
கம்பக்களிற்றொலியுங்கைகலந்து—நம்பிய
கார்முழக்குமற்றைக்கடன்முழக்கும்போற்கலந்த
சீர்முழக்கமெங்குஞ்செவிடுபடப்—பார்விளங்கு
செல்வநிறைந்தவூர்சீரிற்றிகழ்ந்தவூர்
மல்குமலர்மடந்தைமன்னுமூர்—சொல்லினிய
ஞாலத்துமிக்கவூர்நானூற்றுவர்களூர்
வேலொத்தகண்ணார்விளங்குமூ—ராலித்து
மன்னிருகால்வேலைவளர்வெள்ளத்தும்பரொடும்
பன்னிருகானீரின்மிதந்தவூர்—மன்னும்
பிரமனூர்வேணுபுரம்பேரொலிநீர்ச்சண்பை
யரன்மன்னுதண்காழியம்பொற்—சிரபுரம்
பூந்தராய்கொச்சைவயம்வெங்குருப்பொங்குபுனல்

வாய்ந்தநற்றோணிபுரமறையோ—ரேய்ந்த
புகலிகழுமலம்பூம்புறவமென்றிப்
பகர்கின்றபண்பிற்றதாகித்—திகழ்கின்ற
மல்லைச்செழுநகரமன்னவும்வல்லமண
ரொல்லைக்கழுவிலுலக்கவு—மெல்லையின்
மாதவத்தோர்வாழவும்வையகத்தோருய்யவு
மேதக்கவானோர்வியப்பவு—மாதியாம்
வென்றிக்கலிகெடவும்வேதத்தொலிமிகவு
மொன்றிச்சிவனடியாரோங்கவுந்—துன்றிய
பன்னுதமிழ்ப்பதினாறாயிரநற்பனுவன்
மன்னுபுவியவர்க்குவாய்ப்பவு—முன்னிய
சிந்தனையாற்சீரார்கவுணியர்க்கோர்சேயென்ன
வந்தங்கவதரித்தவள்ளலை—யந்தமில்சீர்
ஞானச்சுடர்விளக்கைநற்றவத்தோர்கற்பகத்தை
மானமறையவற்றின்வான்பொருளை—யானசீர்த்
தத்துவனைநித்தனைச்சைவத்தவரரசை
வித்தகத்தாலோங்குவிடலையை—முத்தமிழின்
செஞ்சொற்பொருள்பயந்தசிங்கத்தைத்தெவ்வருயி
ரஞ்சத்திகழ்ந்தவடலுருமை—யெஞ்சாமை
யாதிச்சிவனருளாலம்பொன்செய்வட்டிலிற்
கோதிலமிர்தநுகர்குஞ்சரத்தைத்—தீதறுசீர்க்
காலத்தொகுதியுநான்மறையின்காரணமு
மூலப்பொருளுமுழுதுணர்ந்த—சீலத்
திருஞானசம்பந்தனென்றுலகஞ்சேர்ந்த
வொருநாமத்தாலுயர்ந்தகோவை—வருபெருநீர்ப்
பொன்னிவளநாடனைப்பூம்புகலிநாயகனை
மன்னர்தொழுதிறைஞ்சுமாமணியை—முன்னே
நிலவுமுருகர்க்குநீலநக்கர்க்குந்
தொலைவில்புகழ்ச்சிறுத்தொண்டர்க்குங்—குலவிய
தோழமையாய்த்தொல்லைப்பிறப்பறுத்தசுந்தரனை
மாழையொண்கண்மாதர்மதனனைச்—சூழொளிய
கோதைவேற்றென்னன்றன்கூடற்குலநகரில்
வாதிலமணர்வலிதொலையக்—காதலாற்
புண்கெழுவுசெம்புனலாறோடப்பொருதவனை
வண்கழுவிற்றைத்தமறையோனை—யொண்கெழுவு
ஞாலத்தினரறியமன்னுநனிபள்ளியது
பாலைதனைநெய்தலாக்கியுங்—காலத்து
நீரெதிர்ந்துசென்றுநெருப்பிற்குளிர்படைத்தும்
பாரெதிர்ந்தபல்விடங்கடீர்த்துமுன்—னேரெழுந்த
யாழைமுரித்துமிருங்கதவந்தானடைத்துஞ்
சூழ்புனலிலோடத்தொழில்புரிந்துந்—தாழ்பொழிற்
கொங்கிற்பனிநோய்ப்பரிசனத்தைத்தீர்ப்பித்துந்
துங்கப்புரிசைத்தொகுமிழலை—யங்கதனில்
நித்தன்செழுங்காசுகொண்டுநிலாநெல்வாயின்
முத்துச்சிவிகைமுதல்கொண்டு—மத்தகுசீர்
மாயிருஞாலத்துமன்னுவடுதுறைபுக்
காயிரஞ்செம்பொனதுகொண்டு—மாய்வரிய

மாண்புதிகழ்பெருமான்மன்னுதிருவோத்தூர்புக்
காண்பனைகள்பெண்பனைகளாக்கியும்—பாண்பரிசிற்
கைப்பாணியொத்திக்காழிக்கோலக்காவிற்பொற்
சப்பாணிகொண்டுதராதலத்து—ளெப்பொழுது
நீக்கரியவின்பத்திராகமிருக்குக்குற
ளுக்கரியபாசுரம்பல்பத்தோடு—மாக்கரிய
யாழ்மூரிசக்கரமாற்றீரடிமுக்காலும்
பாழிமையாற்பாரகத்தோர்தாமுய்ய—வூழி
யுரைப்பமரும்பல்புகழாலோங்கவுமைகோனைத்
திருப்பதிகம்பாடவல்லசேயை—விருப்போடு
நண்ணுபுகழ்மறையோர்நாற்பத்தெண்ணாயிரவ
ரெண்ணின்முனிவரரீட்டத்துப்—பண்ணமரு
மோலக்கத்துள்ளிருப்பவொண்கோயில்வாயிலின் கட்
கோலக்கடைகுறுகிக்கும்பிட்டாங்—காலும்
புகலிவளநகருட்பூசுரர்புக்காங்
கிகலில்புகழ்பரவியேத்திப்—புகலிசேர்
வீதியெழுந்தருளவேண்டுமெனவிண்ணப்ப
மாதரத்தாற்செய்யவவர்க்கருளி—நீதியாற்
கேதகையுஞ்சண்பகமுநேர்கிடத்திக்கீழ்தாழ்ந்த
மாதவியின்போதைமருங்கணைத்துக்—கோதி
லிருவேலிதன்னையிடையிருத்தியீண்டு
மருவோடுமல்லிகையைவைத்தாங்—கருகே
கருமுகையைக்கைகலக்கவைத்துக்கழுநீர்ப்
பெருகுபிளவிடைப்பெய்து—முருகியலும்
புன்னாகந்தன்னைப்புணரவிருவாச்சி
தன்னயலேமுல்லைதலையெடுப்ப—மன்னிய
வண்செருந்திவாய்நெகிழ்ப்பமௌவலலர்படைப்பத்
தண்குருந்தமாடேதலையிறக்க—வொண்கமலத்
தாதடுத்தகண்ணியாற்றண்ணறுங்குஞ்சிமேற்
போதடுத்தகோலம்புனைவித்துக்—காதிற்
கனவயிரகுண்டலங்கள்சேர்த்திக்கழுத்தி
னினமணியினாரமிலகப்—புனைகனகத்
தொத்தடுத்தபூஞ்சுரிகைச்சோதிசேர்தாளிம்பம்
வைத்தமணிக்கண்டிகைபூண்டு—முத்தடுத்த
கேயூரந்தோண்மேற்கிடத்திக்கிளர்பொன்னின்
வாய்மைபெறுநூல்வலந்திகழ—வேயுந்
தமனியத்தின்றூழ்வடமுந்தண்டரளக்கோப்புஞ்
சிமையவரைமார்பிற்சேர்த்தி—யமைவுற்ற
வெண்ணீற்றினொண்களபமட்டித்துமேவுதொழி
லொண்ணூற்கலிங்கமுடல்புனைந்து—திண்ணேக்கிற்
காற்றுருவோகுன்றேகடலோவடலுருமோ
கூற்றுருவோவென்னக்கொதித்தெழுந்து—சீற்றத்
தழல்விழித்துநின்றெதிர்ந்துதாலவட்டம்வீசிப்
புழைதடக்கைகொண்டெறிந்துபொங்கி—மழைமதத்தாற்
பூத்தகடதடத்துப்போகமிகப்பொலிந்து
காத்திரத்ததாகிக்கலித்தெங்கும்...கோத்த
கொடுநிகளம்போக்கிநிமிர்கொண்டெழுந்துகோபித்

திடுவண்டையிட்டுக்கலித்து—முடுகி
நெடுநிலத்தைத்தானுழக்கிநின்றுநிகர்நீத்
திடிபெயரத்தாளந்திலுப்பி—யடுசினத்தாற்
கன்றமுகம்பருகிக்கையெடுத்தாராய்ந்து
வென்றிமருப்புருவவெய்துயிர்த்—தோன்றிய
கூடமரணழித்துக்கோபுரங்களைக்குத்தி
நிடுபொழிலைநிகரழித்—தோடிப்
பணப்பாகரைப்பரிந்துகுத்திப்பறித்த
நிணப்பாகைநீள்விசும்பின்வீசி—யணைப்பரிய
வோடைக்கருங்களிற்றையொண்பரிக்காரர்கடா
மாடணையக்கொண்டுவருதலுமே—கூடி
நயந்துகுரற்கொடுத்துநட்பளித்துச்சென்று
வியந்தணுகிவேட்டந்தணித்தாங்—குயர்ந்த
வுடற்றூயவாசிதனைப்பற்றிமேல்கொண்டாங்
கடற்கூடற்சந்தியணுகி—யடுத்த
பயில்பலவும்பேசிப்படுபுரசைநீக்கி
யயர்வுகெடவணைத்துத்தட்டி—யுயர்தரு
தண்டுபேரோசைபின்கட்டாள்கோத்துச்சீர்ச்சிறுத்
தொண்டர்பிறகணையத்தோன்றுதலு—மெண்டிசையும்
பல்சனமுமாவும்படையும்புடைகிளர
வொல்லொலியாலோங்குகடல்கிளர—மல்லற்
பரித்தூரங்கொட்டப்படுபணிலமார்ப்பக்
கருத்தோடிசைகவிஞர்பாட—விரித்த
குடைபலவுஞ்சாமரையுந்தொங்கல்களுங்கூடிப்
புடைபரந்துபொக்கம்படைப்பக்—கடைபடு
வீதியணுகுதலும்வெள்வளையாருண்மகிழ்ந்து
காதல்பெருகிக்கலந்தெங்குஞ்—சோதிசே
ராடரங்கின்மேலுமணிமாளிகைகளிலுஞ்
சேடரங்குநீண்மறுகுந்தெற்றியிலும்—பீடுடைய
பேரிளம்பெண்ணீருகப்பேதைமுதலாக
வாரிடங்கொங்கைமடநல்லார்—சீர்விளங்கப்
பேணுஞ்சிலம்பும்பிறங்கொளிசேராரமும்
பூணும்புலம்பப்புறப்பட்டுச்—சேண்மறுகிற்
காண்டகையவென்றிக்கருவரைமேல்வெண்மதிபோ
லீண்டுகுடையினெழினிழற்கீழ்க்—காண்டலுமே
கைதொழுவார்நின்றுகலைசரிவார்மால்கொண்டு
மெய்தளர்வார்வெள்வளைகள்போய்வீழ்வார்-வெய்துயிர்த்துப
பூம்பயலைகொள்வார்புணர்முலைகள்பொன்பயப்பார்
காம்பனையமென்றோட்கவின்கழிவார்—தாம்பயந்து
வென்றிவேற்சேயென்னவேனில்வேட்கோவென்ன
வன்றென்னவாமென்னவையுற்றுச்—சென்றணுகிக்
காழிக்குலமதலையென்றுதங்கைசோர்ந்து
வாழிவளைசரியநின்றயர்வார்—பாழிமையா
லுள்ளநிலைதளர்ந்தவொண்ணுதலார்வெல்களிற்றை
மெள்ளநடவென்றுவேண்டுவார்—கள்ளலங்க
ரூராமையன்றியுந்தையனல்லார்முகத்தைப்
பாராமைசாலப்பயனென்பார்—நேராக

வென்னையேநோக்கினனேந்திழையீரிப்பொழுது
நன்மைநமக்குண்டெனநயப்பார்—கைம்மையா
லொண்கலையுநாணுமுடை துகிலுந்தோற்றவர்கள்
வண்கமலத்தார்வலிந்துகோடுமெனப்—பண்பின்
வடிக்கண்மலர்வாளிவார்புருவம்வின்மேற்
றொடுத்ததரந்தொண்டைதுடிப்பப்—பொடித்தமுலைக்
காசைக்கருங்குழலார்காதற்கவுணியன்பாற்
பூசற்கமைந்துபுறப்படுவார்—வாசச்
செழுமலர்த்தாரின்றெனக்குநல்காதேசீரார்
கழுமலத்தார்கோவேகழல்க—டொழுவார்க
ளங்கோல்வளையிழக்கப்போவதுநின்னுடைய
செங்கோன்மையோவென்றுசெப்புவார்—நங்கைமீ
ரின்றிவனல்குமேயெண்பெருங்குன்றத்தி
லன்றமணர்கூட்டத்தையாசழித்துப்—பொன்ற
வுரைகெழுவுசெந்தமிழ்ப்பாவொன்றினல்வென்றி
நிரைகழுமேலுய்த்தானைநேர்ந்து—விரைமலர்த்தார்
பெற்றிடலாமென்றிருந்தநம்மிலும்பேதையர்கண்
மற்றுளரோவென்றுவகுத்துரைப்பார்—மற்றிவனே
பெண்ணிரக்கமன்றேபிறைநுதலீர்மாசுணத்தி
னண்ணுகடுவிடத்தாலுட்சென்று—விண்ணுற்ற
வாருயிரைமீட்டன்றவளையணிமருக
லூரறியவைத்ததெனவுரைப்பார்—பேரிடரா
லேசுவார்தாமுற்றவேசறவைத்தோழியர்முன்
பேசுவார்நின்றுதம்பீடழிவா—ராசையா
னைவார்நலனழிவார்நாணொடுபூணிழப்பார்
மெய்வாடுவார்வெகுள்வார்வெய்துயிர்ப்பார்—தையலார்
பூந்துகிலைப்பூமாலையென்றணைவார்பூவினைமுன்
சாந்தமெனமெய்யினிற்றைவருவார்—வாய்ந்த
கிளியென்றுபாவைக்குச்சொற்பயில்வார்பந்தை
யொளிமேகலையென்றுடுப்பா—ரளிமேவு
பூங்குழலார்மையலாய்க்கைதொழமுன்போதந்தா
னோங்கொலிசேர்வீதியுலா.

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தர் திருவுலாமாலை முற்றும்,

---

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார் நம்பி அருளிச்செய்த

# திருக்கலம்பகம்.

* ஒருபோகு மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

அலையார்ந்தகடலுலகத்தருந்திசைதோறங்கங்கே
நிலையார்ந்தபல்பதிகநெறிமனிதர்க்கினிதியற்றி

---

* இக்கலிப்பா தரவின்றிவந்தது - இதின் விகற்பங்களைத் தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் - ' ௧௪௮ ௫ " அவற்றுள்-தரவின்றாகித்

யீங்கருளியெம்போல்வார்க்கிடர்கெடுத்தல்காரணமா
வோங்குபுகழ்ச்சண்பையெனுமொண்பதியுளுதித்தனையே

செஞ்சடைவெண்மதியணிந்தசிவனெந்தைதிருவருளால்
வஞ்சியாநுண்ணிடையாண்மலையனையன்மடப்பாவை
நற்கண்ணியளவிறந்தஞானத்தையமிர்தாக்கிப்
பொற்கிண்ணத்தருள்புரிந்தபோனகமுன்னுகர்ந்தனையே.

தோடணிகாதினனென்றுந்தொல்லமரர்க்கெஞ்ஞான்றுந்
தேடரியபராபரனைச்செழுமறையினகன்பொருளை
யந்திச்செம்மேனியனையடையாளம்பலசொல்லி
யுந்தைக்குக்காணவரனுவனுமென்றுரைத்தனையே—

இவைமூன்றும்நான்கடித்தாழிசை.

வளமலிதமிழிசைவடகலைமறைவல
முளரிநன்மலரணிதருதிருமுடியினை—
கடல்படுவிடமடைகறைமணிமிடறுடை
யடல்கரியுரியனையறிவுடையளவினை—

இவையிரண்டும் அராகம்.

கரும்பினுமிக்கினியபுகழ்க்கண்ணுதல்விண்ணவனடிமேற்
பரம்பவிரும்புவியவர்க்குப்பத்திமையைவிளைத்தனையே—
பன்மறையோர்செய்தொழிலும்பரமசிவாகமவிதியு
நன்மறையின்விதிமுழுதுமொழிவின்றிநவின்றனையே—

இவையிரண்டும் இரண்டடித்தாழிசை.

அணிதவத்தவர்களுக்கதிகவித்தகனுநீ
தணிமனத்தருளுடைத்தவனெறிக்கமிர்தநீ
யமணரைக்கழுநுதிக்கணைவுறுத்தவனுநீ
தமிழ்நலத்தொகையினிற்றகுசுவைப்பனுவனீ.

இவைநான்கும் நாற்சீரோரடியம்போதரங்கம்.

மறையவர்க்கொருவனீஇ
மருவலர்க்குருமுநீஇ
நிறைகுணத்தொருவனீஇ
நிகரிலுத்தமனுநீஇ

இவைநான்கும் முச்சீரோரடியம்போதரங்கம்.

அரியைநீஇ—எளியைநீஇ
அறவனீஇ—துறவனீஇ
பெரியைநீஇ—யுரியைநீஇ
பிள்ளைநீஇ—வள்ளனீஇ

இவைஎட்டும் இருசீரோரடியம்போதரங்கம்.

எனவாங்கு இதுதனிச்சொல்.

அருந்தமிழ்விரகனிற்பரசுதுந்திருந்திய
நிரைச்செழுமாளிகைநிலைதொறுநிலைதொறு

---

தாழிசை பெற்றுந் - தாழிசையின்றித் தரவுடைத்தாகியு - மெண்ணிடையிட்டுச் சின்னங்குன்றியு - மடக்கியலின்றி யடிநிமிர்ந்தொழுகியும் - யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது - கொச்சக வொருபோகாகுமென்ப" என்பதனானும் நச்சினார்க்கினியரெழுதிய வுரையானுமுணர்க.

முறைச்சதுர்மறையினோங்கியவொலிசேர்
சீர்கெழுதழனித்திருமுகம்பொலிவுடை
தார்கெழுதண்டலைதண்பணைதழீஇக்
கற்றொருகுபுரிசைக்காழியர்நாத
நற்றொருகுசீர்த்திஞானசம்பந்த
நின்பெருங்கருணையைநீதிநி
னன்புடையடியவர்க்கருளுவோயெனவே. (இது சரிதகம்) (க)

## நேரிசை வெண்பா.

எனவேயிடரகலுமின்பமேயெய்து
நனவேயரனருளைநாளும்—புனன்மேய
செங்கமலத்தண்டார்த்திருஞானசம்பந்தன்
கொங்கமலத்தண்காழிக்கோ. ... ... (உ)

## கட்டளைக் கலித்துறை.

கோலப் புலமணிசுந்தரமாளிகைகொந்தளவா
ரோலப்பொழிலணிசண்பையர்கோனையிருங்கடல்சூழ்
ஞாலத்தணிபுகழ்ஞானசம்பந்தனைநற்றமிழே
போலப்பலபுன்கவிகொண்டுசேவடிபோற்றுவனே. ... (ந)

## எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

### தலைவன் மொழிபெறுதுகூறல்.

போற்றுவாரிடர்பாற்றியபுனிதன்
பொழில்சுலாவியபுகலியர்பெருமா
னேற்றுவார்புகழ்ஞானசம்பந்த
னெம்பிரானிருஞ்சுருதியங்கிரிவாய்ச்
சேற்றுவார்புனங்காவல்புரிந்தென்
சிந்தைகொள்வதுஞ்செய்தொழிலானுன்
மாற்றுநீரொமக்கின்றுரைசெய்தால்
வாசியோகுறமாதுநலீரோ ... (ச)

## எழுசீர்க்கழிநெடில் விருத்தம்

நலமலிதரும்புவனிநிறைசெய்புகழின்பநனிபனிமதியணைந்தபொழில்சூழ்
பொலமதிலிரும்புகலியதிபதிவிதம்பெருகுபுனிதகுணனெந்தமிறைவன்
பலமலிதருந்தமிழின்வடகலைவிடங்கன்மிகுபரசமையவென்றியரிதன்
சலமலிதருங்கமலசரணினைவனென்றனது தகுவினைகள்பொன்றும்வகையே.

## பன்னிருசீர்க்கழிநெடில் விருத்தம்.

### தலைவன்வரவு மறுத்தல்.

வகைதகுமுத்தமிழாகரன்மறைபயிறிப்பியவாசகன்,வலகலைவித்தகன்வானவி
ன்மதியணைபொற்குவைமாளிகை— திகைதிகைமட்டலர்வார்பொழிறிகழ்புக
லிக்கரசாகிய, திருவளர்விப்பிரசிகாமணிசெழுமலையத்தமிழ்கேசரி—
மிகமதவெற்றிகொள்வாரணமிடைவருடைக்குலமியாளிகள்
விரவிருளிற்றனிநீணெறிவினைதுயர்மொய்த்துளவேமணி
நகையெழிலிற்குறமாதுனதருமைநினைக்கிலணீயிவ, ணசையின்முழுப்
பழியாதன்முன்னணுகலினிக்கிரிவாணனே... ... ... (ரு)

பன்னிருசீர்க்கழிநெடில் விருத்தம்.

நற்றாய்வருந்தல்.

வாணிலவும்புனலும்பயில்செஞ்சடைவண்கருணாகரனை
மலைமாதுமையொடுமிவனுவானெனமுன்னுளுரைசெய்தோன்
சேணிலவும்புகழ்மாளிகைநீடியதென்புகலிக்கரசைத்
திருவாளனையெழிலருகாசனிதனைமருவாதவர்கிளைபோல்
நாணிலவும்பழியோகருதாதயலானொருகாளையுட
னசைதீமிலைகொலைபுரிவேடுவர்பயிறருகானதர்வெயிலிற்
சேணிலவுங்கிளிபாவையொடாயமியாயெனையும்மொழியக்
கிழியாலெனதொருமகள்போயுறுதுயர்கெடுவேனறிகலனே ... (எ)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

தோழியறத்தொடுநிற்றல்.

அறிவாகியின்பஞ்செய்தமிழ்வாதில்வென்றந்தவமணவன்குண்டர்கழு
வேறமுன்கண்ட, செறிமாடவண்சண்பைநகராளியென்றந்தைதிருஞானசம்
பந்தனணிநீடுதிண்குன்றின், நெறியாலமண்டின்றிமூனாள்சினங்கொண்டுநி
றைவார்புனந்தின்றுமகண்மேல்வருந்துங்க,வெறியார்மதந்தங்குகதவாரணங்
கொன்றவெகுளாதநன்சிந்தைவிறலானுளான்பண்டே... ... (அ)

பதின்சீர்க்கழிநெடில் விருத்தம்.

பண்டமிர்துசெய்ததுமைநங்கையருண்மேவுசிவஞானம்
பைந்தாளநன்சிவிகைசெம்பொனணிநீடுகிறதாளங்
கொண்டதரனும்பர்பரனெங்கள்பெருமானருள்படைத்துக்
கொடுத்ததமிழைத்தவகுலத்தவர்களுக்குலகிலின்பங்
கண்டதருகந்தர்குலமொன்றிமுழுதுங்கழுவிலேறக்
கறுத்ததுவினைப்பயன்மனத்திலிறைகாதலதுவன்றி
விண்டதுவும்வஞ்சகரைமஞ்சணவுகின்றமணிமாட
வேணுபுரநாதன்றிருவேதியர்சிகாமணிபிரானே... ... (கூ)

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

மாலையம்பொழுதுகண்டிரங்கல்.

பிரானைமெய்த்திருஞானசம்பந்தனைமறையவர்பெருமானைக்
குராமலர்ப்பொழிற்கொச்சையர்நாதனைக்குரைகழலிணைவாழ்த்தித்
தராதலத்தினிலவனருணியினைவொடுதளர்வுறுதமியேனுக்
கிராவினைக்கொடுவந்ததிவ்வந்திமற்றினிவிடிவறியேனே... ... (க0)

பதினான்குசீர்க்கழிநெடில் விருத்தம்.

களி.

ஏனமுகத்தவபுத்தரையிந்திரசித்துமணம்புணர்வுற்றூ
னீழவனூர்சொரிதொட்டியிளங்களைவெட்டியிசித்தனர்பட்டர்
தானமிரக்கிறசீதைமடிப்பதுசாதிகுடத்தொடுகண்டீர்
சக்கிரவர்த்திகள்சிக்கரமட்டுவர்தத்துவமிப்பரிசுண்டே
யானபுகழ்ப்பயில்விப்பிரசிகாமணியத்தகுமைப்புனாயுங்கா
ரார்பொழினீடியசண்பையர்காவலன்வண்களியேனெளியேனே
சோனகனுக்குமெனக்குமெனத்தரையம்மனைசூலதுகொண்டா
டும்புருவாலியைவென்றுநிலத்திடைநின்றுதுலுக்குகிறேரே...(கக)

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

தேர்வழிநோக்கிக் கடலொடுகூறல்.

ஆர்மலிபுகலிநாதனருளெனவிரவில்வந்தென்
வார்முலைபயலைதீரமணந்தவர்தணந்துபோன
தேரதரழியவும்மைச்செய்பிழையெம்மதில்லை
கார்திரைகளுலிமோதிக்கனைபொருங்கடலினீரே ... (கஉ)

கலிவிருத்தம்.

தலைவன்றன்றுணிபுரைத்தல்.

கடன்மேவுபுவியேறுகவிநீரர்பெருமான்
தடமாடமிகுகாழிதகுபேதையருளாமை
திடமாகிலணிநீறுசெழுமேனிமுழுதாடி
மடலேறியெழில்வீதிவருகாதலொழியேனே ... (க௩)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

தலைவன்றேர்வரவுகூறல்.

ஒழியாதின்புறுபொழில்சூழ்சண்பைமனுயர்பார்துன்றியதகுஞானன்புக
ழெழிலாருங்கவுணியர்திபன்றிகழிணையார்செங்கரனிகர்வான்விண்குயின்
பொழியாநின்றனதுளிதார்கொன்றைகள்புலமேதுன்றினகலைமானுன்றின
பழிமேல்கொண்டதுநுமர்தேரன்பொடுமறுகேவந்ததுவதுகாண்மங்கையே()

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

தலைவனுற்றதுரைத்தல்.

மங்கையிடத்தரனைச்சவிநீரொதிரோடமதித்தருள்செய்
தங்குபுகழ்ச்சதுமாமறைநாவளர்சைவசிகாமணிதன்
றுங்கமதிற்பிரமாபுரமேவியசூழ்பொழினின்றொளிர்மென்
கொங்கையிடைக்கொடியேரிடையாள்குடிகொண்டனளெம்மனமே.(கரு)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

அலரறிவுறுத்தல்.

மனங்கொண்டுநிறைகொண்டுகலையுங்கொண்டென்மணிநிறமுமிவள் செங்கைவளையுங்கொண்ட, தனங்கொண்டபெருஞ்செல்வந்திகழுங்கீர்த்திச் சண்பையர்கோன்றிருஞானசம்பந்தற்கு, நனங்கொண்டுமெய்கொண்டுபய லைகொண்டேநன்னுதலாளயர்கின்றுணடுவேநின்று, மினங்கொண்டுநகைகொண்டுமடவீர்வாளாவென்செயநீரலர்தூற்றியெழுகின்றீரே. ... (க௬)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

சம்பிரதம்.

எழுகுலவெற்பிவைமிடறிலடக்குவனெறிகடலிற்புனல்குளறிவயிற்றினின், முழுதுமொளித்திரவியையிநிலத்திடை முடுகுவனிப்பொழுதிவையலவிச்சை கள், கழுமலநற்பதியதிபதமிழ்க்கடல்கவுணியநற்குலதிலதனிணைக்கழ, றொழு துவழுத்திய பிறரொருவர்க்குறுதுயர்வருவிப்பனிதரியதொர்விச்சையே(கஎ)

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

சயமிகுத்தருகனாமுருக்கியதமிழ்பயிற்றியநாவன்
வியலியற்றிருமருகலிற்கொடுவிடமழித்தருணீதன்
கயலுடைப்புனல்வயல்வளத்தகுகழுமலப்பதிநாத
னியல்புடைக்கழறொழநினைப்பவரிருவினைத்துயர்போமே......... (கஅ)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

பருவங்கினைந்திரங்கல்.

மேதகுந்திகழ்பூகநாகசண்பகசூதவேரிவண்டறைசோலையாலைதுன்றிய காழி, நாதனந்தணர்கோனெனுணேவண்புகழாளிஞானசுந்தரன்மேவுதார்நி னைந்தயர்வேனை, நீதியென்றனபேசுமியாயுமிந்துவும் வாசநீடுதென்றலும்வீ ணையோசையுங்கரைசேர, மோதுதெண்டிரைசேவல்சேருமன்றிலும்வேயுமூ டுதண்பனிவாடைகூடிவன்பகையாமே. ... ... ... (௧௧)

இதுவுமது.

தோழிகூறல்.

வன்பகையாமக்குண்டரைவென்றோய் மாமலர்வாளிபொருமதவேளைத்
தன்பகையாகச்சிந்தையுணேயுந் தையலையுய்யக்கொண்டருள்செய்யாய்
நின்புகழ்பாடிக்கண்பனிசோராநின்றெழின்ஞானவென்றகனெக்கிட்
டன்பகலாமெய்ச்சிந்தையரின்பாவம்பொழின்மாடச்சண்மையர்கோவே. ()

இதுவுமது.

மறம்.

கோவின்றிருமுகமீதோடுவருதூதுவனீர, குளிர்பைம்பொழில்வளநாடெ ழினிதியம்பரிசம்மீ—மாவீரியரிவர்தங்கையென்மகுடன்றிறமமண, மறவெங் குலமறிகின்றிலன்பழியச்சதவரசன்,பாவேறியமதுரத்தமிழ்விரகன்புகலியர் மன்,பயில்வண்புகழருகாசனிபணியன்றெனிலெமர்காள்-தூவேரியைமடுமின் றுடியடிமின்படையெழுமின், றெருசேனையுமவனும்படமலையும்பரிசினியே.()

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

மகட்பேச்சுரைத்தல்.

இனியின்றெழிமின்வெறியும்மறியுடுதொழிலும்மிடுகுரவையுமெல்லா
நனிசிந்தையினிவண்மிகவன்புறுவதொர்நசையுண்டதுநமுதுபெண்டீர்
புனிதன்புகலியரதிபன்புனேதமிழ்விரகன்புயமுறுமரவிந்தம்
பனிமென்குழலியையணிமின்றுயரொடுமயலுங்கெடுவதுசரதம்மே... (௨௨)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

வரைவுகடாதல்.

சரதமணமலிபரிசம்வருவனதளர்வில்புகலியரதிபனதிதரு
வரதனணிதமிழ்விரகன்மிகுபுகழ்மருவுசுருதிநன்மலையினமர்தரு
விரதமுடையைநினிடையினவண்மனம்விரைசெய்குழலியையணேவதரிதென
விரதமழிதரவருதன்முனமினியெளியதொருவகைகருதுமலையனே... (௨௩)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

அயனெடியமாலுமவரறிவரியதாணுவரனருளினெடுநீடவனியிடர்முழுது போயகல, வயலணிதென்வீழிமிழலையினிலவுகாசின்மலிமழைபொழியுமான குணமதுரன்மதிதோய்கனக, செயநிலவுமாடமதில்புடைதழுவுவாசமலிசெ றிபொழில்சுலாவிவளர்சிரபுரசுநாதன்முதிர், பயனிலவுஞானதமிழ்விரகன்ம றைஞானமயிறருணதனெனுணேமிகுபரசமையகோளரியே. ... (௨௪)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

நெறி விலக்கிக்கூறல்.

அரியாருங்கிரிநெறியெங்ஙன நீர்வந்தீ, ரழகிதினிப்பயமில்லையந்திக்கப் பாற், றெரியாபுன்சிறுநெறிகளெந்தம்வாழ்விச்சிறுகுடியின்றிரவிங்கேசிரமந்

தீர்ந்திச், சுரியார்மென்குழலியொடும்விடியச்சென்றுதொகுபுகழ்சேர்திருஞானசம்பந்தன்றன், வரியாரும்பொழிலெழிலுமதிலுந்தோற்றும் வயற்புகலிப்பதியினிதுமருவலாமே. ... ... ... (உடு)

ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

ஆமாண்பொன்கூட்டகத்தவஞ்சொலிளம்பைங்கிளியே
பாமாலையாழ்முரியப்பாணழியப்பண்டருள்செய்
மாமானசுந்தரன்வண்சம்பந்தமாமுனியெங்
கோமான்றன்புகழொருகாலின்புறநீகூறாயே
கொச்சையர்கோன்றன்புகழ்யானின்புறநீகூறாயே ......... ... (உசு)

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

ஏறுகோள்கூறிவரைவுகடாதல்.

கூறதாகமெய்யடிமைதானெனையுடையகொச்சையரதிபதி
வீறதார்தமிழ்விரகன்மேதகுபுகழினுளிவண்மிகுவனச்
சேறதார்தருதிரள்களைக்கனசெழுமுலைக்குரியவர்சினத்
தேறுதானிதுதழுவினானெனவிடிகொண்மாமுரசதிருமே. ... (உஎ)

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

தோழியாற்றுவித்தல்.

சதுரன்புகலியரதிபன்கூர்தவசுந்தரகவுணியர்தீஞ்சீர்
முதல்வன்புகலியர்தீபன்றுண்முறைவந்தடையலர்நகரம்போ
லெதிர்வந்தனர்விறல்கெடவெம்போரொரிவெங்கணைசொரிபுரிமின்கா
ரதிர்கின்றனவிதுபருவஞ்சேரலர்தம்பதிமதிலிடிமின்னே...... ......(உஅ)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

ஆற்றாமைகூறல்.

மின்னுமாகத்தெழிலியுஞ்சேர்மிகுபொன்மாடப்புகலிநாதன்
றுன்னுஞானத்தெம்பிரான்மெய்த்தொகைசெய்பாடற்பதிகமன்னுள்
பொன்னுமாநற்றரளமுந்தன்பொருகயற்கண்டனநிறைத்தா
ளின்னுமேகிப்பொருள்படைப்பானெங்ஙனேநானெண்ணுமாறே.... (உகூ)

பன்னிருசீர்க்கழிநெடில் விருத்தம்.

பிச்சியார்.

மாறிலாதபொடிநீறேறுகோலவடிவும்வம்புபம்புகுழலுந்துங்கதொங்கையிணையு, மூறியூறுபதிகத்தோசைநேசநுகர்வுமொத்துகித்துநடையுஞ்சித்தபத்திமிகையும், வீறதேறும்வயல்சூழ்காழிஞானபெருமான்வென்றிதுன்றுபுகழ்மையொன்றிலொன்றுபணியுந், தேறல்போலுமொழியுஞ்சேல்கள்போலும்விழியுஞ்சிந்தைகொண்டபரிசும்நன்றிம்மங்கைதவமே ...... (௩௦)

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

பாணனைவெகுளல்.

கைதவத்தாலென்னிடைக்குநீவந்ததறியேனோகலதிப்பாணு
மெய்தவத்தாருயிரனையமிகுசைவசிகாமணியைவேணுக்கோனைச்
செய்தவத்தால்விதிவாய்த்தசெழுமலையாரவனுடையசெம்பொற்றிண்டோ
ளெய்தவத்தால்விளிவிலக்கேன்யாதுக்குநீபலபொய்யிசைக்கின்றாயே. (௩க)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.
மதங்கு.

இசையைமுகந்தெழுமிடறுமிதிங்கிவ ணிடுகரணங்களினியல்பும்வளம்பொலி
திசைதிசைதுன்றியபொழில்சுலவுந்திகழ்சிரபுரமன்றருதமிழ்விரகன்பல
நசைமிகுவண்புகழ்பயிலுமதங்கி தனளிர்முலைசெங்கயல்விழிநகைகண்டபின்
வசைதருமென்குலமவைமுழுதுங்கொளமதிவளர்சிந்தனைமயல்வருகின்றதே.

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.
தலைமகன்றலைமகளசைவறிந்துரைத்தல்.

வருகின்றனனென்றனதுள்ளமுநின் வசமேநிறுவிக்குறைகொண்டுதணித்
தருகும்புனல்வெஞ்சுரம்யானமரும்மதுநீயிறையுன்னினையாதலின்முன்
கருகும்புயல்சேர்மதில்வண்புகலிக்கவிஞன்பயில்செந்தமிழாகரன்மெய்
பெருகுந்திருவாரருள்பேணலர்போற்பிழைசெய்தனைவந்ததர்பெண்கொடியே

இதுவுமது.
வலைச்சியார்.

கொடிநீடுவிடையுடையபெருமானையடிபரவுகுணமேதைகவுணியர்கள் குலதீபசுபசரித, னடியேனதிடர்முழுதுமறவீசுதமிழ்விரகனணியானபுகலிநகரனையானகனைகடலின், முடிநீடுபெருவலைகொடலையூடுபுகுவனுமர்முறையேவுபணிபுரிவன்மணிதோணிபுனைவனவை, படியாருநிகரரியவரியாருமதர்நயனிபணைவார்மென்முலைநுளையர்மடமாதுனருள்பெறினே. ... (௯௪)

இதுவுமது.

பெறுபயன்மிகப்புவியுளருளுவனபிற்றைமுறைபெருநெறியளிப்பனபல் பிறவியையொழிச்சுவன, வுறுதுயரழிப்பனமுனுமைதிருவருட்பெருகவுடையனநதிப்புனலினெதிர்பஃறியுய்த்தனபு, னறுமுறு * குளாச்சமணைநிரைகழுநிறுத்தியனநனிகதவடைத்தனதுனருவிடமகற்றியன, துறுபொழின்மதிற்புறவமுதுபதுமறைப்பரியதொழில்பலமிகுத்ததமிழ்விரகனகவித்தொகையே.

பன்னிருசீர்க்கழிநெடில் விருத்தம்.

தொகுவார்பொழில்சுற்றியவான்மதிதோயுமதிற்கனமார், தொலையாததிருப்பொழின்மாளிகைமாடநெருக்கியசீர், மிகுகாழிமன்முத்தமிழாகரன்மேதகுபொற்புனைதார், விரையார்கமலக்கழலேதுணையாகநினைப்பவர்தா, மகராதரநித்திலநீர்நிலையார்புவியுத்தமராய், வரலாறுபிழைப்பினினூழியிலக்கிதமா, தகுவாழ்வுநிலைத்தெழில்சேரறமான பயிற்றுவர்மா, சதுரால்வினைசெற்றதன்மேலணுகார்பிறவிக்கடலே...... ... ...... ... (௯௫)

நேரிசையாசிரியப்பா.
பாணாற்றுப்படை.

கருமங்கேண்மதிகருமங்கேண்மதி
திருமதிப்பாணகருமங்கேண்மதி
நிரம்பியபாடனின்கண்ணேடு
மரும்பசிநலியவலக்கணுற்றிளைத்துக்

* நறுமுறல்—பொருமைப்படல்.

காந்தியவுதரக்கனறழைத்தெழுதலிற்
றேய்ந்துடல்வற்றிச்சின்னரம்பெழுந்
திறுகுபுசுள்ளியயற்றியகுரம்பை
யுறுசெறுத்தனையவுருவுகொண்டுள்வளைஇ
யின்னிசைநல்லியாழ்சுமந்தன்ன
மன்னியவளநகர்மனைக்கடைதோறுஞ்
சென்றுழிச்சென்றுழிச்சில்பலிபெறுது
நின்றுழிநிலாவுவன்றுயர்போயொழிந்
தின்புற்றிருநிதியெய்துமதுறுன
துள்ளத்துள்ளதாகின்மதுமலர்
வண்டறைசோலைவளவயலகவ
வொண்டிறற்கோண்மீனுலாவுகுண்டக
முயர்தருவளையினியறருபதணத்துக்
கடுநுதிக்கழுக்கடைமிடைதருவேலிக்
கனகப்பருமுரட்கணையக்கபாட
விலையக்கோபுரவிளங்கெழில்வாயில்
நெகிழ்ச்சியில்வகுத்துத்திகழ்ச்சியிலோங்கு
மஞ்சணையிஞ்சிவண்கொடிமிடைந்த
செஞ்சுடர்க்கனகத்திகழ்சிலம்பனைய
மாளிகையோளிச்சூளிகைவளாகத்
தணிவுடைப்பலபடமணிதுடைத்தழுத்திய
நல்லொளிபரந்துநயந்திகழிந்திர
வில்லொளிபலபலவிசும்பிடைக்காட்ட
மன்னியசெல்வத்துத்துன்னியபெருமைச்
செம்மலர்மாதுசேர்ந்திறைபிரியாக்
கழுமலநாதன்கவுணியர்குலபதி
தண்டமிழ்விரகன்சைவசிகாமணி
பண்டிதரின்பன்பரசமையகோளரி
யென்புன்றமிழ்கொண்டிரங்கியென்னுள்ளத்
தன்பினையருளியவாண்டகைதன்புகழ்
குறைவறுத்துள்கிநிறைகடைகுறுகி
நாப்பொலிநல்லிசைபாட
மாப்பெருஞ்செல்வமன்னுதிநீயே ...... ...... (௬எ)

வஞ்சித்துறை.

நீதியினிறைபுகழ், மேதகுபுகலிமன்
மாதமிழ்விரகனே, யோதுவதுறுதியே. (௬அ)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

கலவியிடத்தூடல்

உறுதிமுலைதாழவெனையிகழுநீதி
யுனதுமனமாரமுழுவதுமதாக
வறுதிபெறுமாதர்பெயறருதருனு
மழகிதினியானுனருள்புனைவதாக
பெறுதியிவைநீயெனடிபணிதன்மேவு
பெருமைகெடநீடுபடிறுழிபொன்மாட
நறைகமழும்வாசம்வளர்பொழில்சூலாவு
நனிபுகலிநாததமிழ்விரகனீயே ............... (௬௯)

நான்கடியா யிடையீறு
குறைந்துவந்த வாசிரியத்துறை.

நீமதித்துன்னிநினேயென்மடநெஞ்சமே
காமதிக்கார்பொழிற்காழி
நாமதிக்கும்புகழ்ஞானசம்பந்தனொண்
பூமதிக்குங்கழல்போற்றே ............ ...... (சO)

கட்டளைக் கலிப்பா.
மடக்கு.

போற்றிசெய்தரன்பொற்கழல்பூண்டதே, புந்தியானுந்தம்பொற்கழல்பூண்டதே—மாற்றியிட்டதுவல்விடவாதையே, மன்னுகுண்டனைவென்றதுவாதையே, யாற்றெதிர்ப்புனலுற்றதந்தோணியே, யானதன்பதியாவதந்தோணியே, நாற்றிசைக்கவிஞானசம்பந்தனே, நல்லநாமமுஞானசம்பந்தனே...... (சக)

மருட்பா.
கைக்கிளை.

அம்புந்துகண்ணிமைக்குமானநுதல்வியர்க்கும்
வம்புந்துகோதைமலர்வாடுஞ்—சம்பந்தன்
காமருகழுமலமனையா
ளாமிவளணங்கலளடிநிலத்தனவே... ... ... (சஉ)

பன்னிருசீர்க்கழிநெடில் விருத்தம்.
பாணற்குக்கூறல்

தனமுந்துகிலுஞ்சாலிக்குவையுங்கோலக்கனமாடச்
சண்பைத்திகழ்மாமறையோரதிபன்றவமெய்க்குலதீபன்
கனவண்கொடைநீடருகாசனிதன்கமலக்கழல்பாடிக்
கண்டார்நிறையக்கொள்ளப்பசியைக்கருதாதெம்பாண
புனேதண்டமிழின்னிசையார்புகலிக்கரைசைப்புகழ்பாடிப்
புலையச்சேரிக்காலேபுகுந்தாலென்சொற்புதிதாக்கிச்
சினவெங்கதமாகளிறென்றிந்தச்சேரிக்கொடுவந்தார்
சேருங்குடிலுமிழந்தாரிதனேச்செய்வதறியாரோ ...... (சஙு)

இன்னிசை வெண்பா.

யாரோயெம்போலவருளுடையாரின்கமலத்
தாரோயுஞ்சென்னித்தமிழ்விரகன்—பேரோயுங்
கொச்சைவயவன்குரைகழற்கேமெச்சி
யடிமைசெய்யப்பெற்றேனறிந்து ...... (சச)

பதின்சீர்க்கழிநெடில் விருத்தம்.
முன்னிலைப்புறமொழிமொழிந்தறிவுறுத்தல்

அறிதருநுண்பொருள்சேர்பதிகமரன்கழன்மே
லணிதருசுந்தரமற்றமிழ்விரகன்பிறைதோய்
செறிதருபைம்பொழின்மாளிகைசுலவுந்திகழ்சீர்த்
திருவளர்சண்பையின்மாடலைகடலொண்கழிசே
ரெறிதிரைவந்தெழுமீனிரைநுகர்கின்றிலைபோ
யினமுமடைந்திலைகூரிடரோடிருந்தனையா
லுறுதுயர்சிந்தையினீடுதவினரொந்தமர்போ
லுமருமகன்றனரோவிதுவுரைவண்குருகே ...... (சரு)

கலிவிருத்தம்.
அழுங்குதாய்க்குரைத்தல்.

குருகணிமணிமுன்கைக்கொடியுமவ்விறலவனு
மருகணைகுவரப்பாலரிதினிவழிமீண்மின்
றருகெழுமுகில்வண்கைத்தகுதமிழ்விரகன்ற
னருள்கெழுபொழின்மாடக்கழுமலவளநாடே ... ...... (௬௬)

இதுவுமது.
தோழிமுன்னிலைப்புறமொழி மொழிந்தறிவுறுத்தல்.

நாடேறும்புகழ்ஞானசம்பந்தன்வண்
சேடேறுங்கொச்சைநேர்வளஞ்செய்துளை
மாடேறுந்தையல்வாடமலர்ந்தனை
கோடேறுங்கொடியாய்கொல்லைமுல்லையே ...... ... (௬௭)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.
ஐயுறுதல்.

முல்லைநகையுமைதன்மன்னுதிருவருளைமுந்தியுறுமரியசெந்தண்முனிவன்மிகு, நல்லபொழில்சுலவுதொல்லையணிபுகலிநாதன்மறைமுதல்வன்வேதமலையதனின், வில்லையிலர்கணையுமில்லர்பகழியுறுவேழமிரலைகலைகேழல்வின, வுறுவர், தொல்லையிலர்விரகரல்லர்தழைகொணர்வர்தோழியிவரொருவராவவழிதர்வரோ. ...... (௬௮)

வஞ்சித்துறை.

வழிதருபிறவியினுறு
தொழிலமர்துயர்கெடுமிகு
பொழிலணிதருபுகலிம
னெழிலிணையடியிறைமினே......... (௬௯)

திருச்சிற்றம்பலம்.
திருக்கலம்பகம் முற்றும்.

நம்பியாண்டார் நம்பியருளிச்செய்த

# திருஞானசம்பந்தர் திருத்தொகை

பூவார்திருநுதன்மேற்பொற்சுட்டியிட்டொளிரக்
கோவாக்குதலைசிலம்பரற்ற—வோவா
தழுவான்பசித்தானென்றுங்கிறைவன்காட்டத்
தொழுவான்றுயர்தீர்க்குந்தோகை—வழுவாமே
முப்பத்திரண்டறமுஞ்செய்தாண்முதிராத
செப்பொத்தகொங்கைத்திருநுதலி—யப்ப
னருளாலேயூட்டுதலுமப்பொழுதேஞானத்
திரளாகிமுன்னின்றசெம்ம—லிருடீர்ந்த
காழிமுதல்வன்கவுணியர்தம்போறு
ஊழிமுதல்வனுவனென்றுகாட்டவல்லான்
வீழிமிழலைப்படிக்காசுகொண்டபிரான்
பாழியமணைக்கழுவேறப்பாண
ரியாழைமுரித்தானெரிவாயிடும்பதிக
மாழியுலகத்தழியாமற்காட்டினு
னேழிசைவித்தகன்வந்தேனேரும்வானேருந்
தாழுஞ்சரணச்சதங்கைப்பருவத்தே
பாலையுநெய்தலும்பாடவல்லான்சோலைத்
திருவாவடுதுறையிற்செம்பொற்கிழியொன்
றருளாலேபெற்றருளுமையன்—றெருளாத

தென்னவனுடெல்லாந்திருநீறுபாலித்த
மன்னன்மருகல்விடந்தீர்த்தபிரான்—பின்னைத்தென்
கோலக்காவிற்றாளம்பெற்றிக்குவலையத்தின்
மாலக்காலத்தேமாற்றினான்—ஞாலத்து
முத்தின்சிவிகையரன்கொடுப்பமுன்னின்று
தித்தித்தபாடல்செவிக்களித்தா—னித்திலங்கண்
மாடத்தொளிருமறைக்காட்டிறைகதவைப்
பாடியடைப்பித்தபண்புடையா—னீடுந்
திருவோத்தூராண்பனையைப்பெண்பனையாகென்னும்
பெருவார்த்தைதானுடையபிள்ளை—மருவினிய
கொள்ளம்பூதூர்க்குழகனுவாயதுகொடுப்ப
வுள்ளமேகோலாகவூன்றினான்—வள்ளன்
மழவன்சிறுமதலைவான்பெருநோய்தீர்த்த
குழகன்குலமறையோர்கோமானிலவிய
வைகையாற்றேடிட்டுவானீரொதிரோட்டுஞ்
செய்கையான்மிக்கசெயலுடையான்—வெய்யபெருங்
கூனிமிர்த்தாவற்போடுகூட்டமடக்கொடியே
வாவென்றழைப்பித்திம்மண்ணுலகில்வாழ்வித்த
சீர்நின்றசெம்மைச்செயலுடையா—னேர்வந்த
புத்தன்றலையைப்புவிமேற்புரள்வித்த
வித்தகப்பாடல்விளம்பினான்—மொய்த்தொளிசேர்
கொச்சைச்சதுரன்றன்கோமானைத்தான்செய்த
பச்சைப்பதிகத்துடன்பதினாயிரம்பா
வித்துப்பொருளைவிளைக்கவலான்—பெரிய
முத்திப்பகவன்முதல்வன்றிருவடியைப்
யத்திக்கும்பத்தரொதிராணைநமதென்னவலான்
கத்தித்திரிபிறவிச்சாகரத்துளாழாமே
பத்தித்தனித்தெப்பம்பார்வாழத்தந்தபிரான்
பத்திச்சிவமென்றுபாண்டிமாதேவியொடுங்
கொற்றக்கதிர்வேற்குலச்சிறையுங்கொண்டாடு
மற்றைப்பொழுதத்தமணரிடுவெந்தீயைப்
பற்றிச்சுடுகபோய்ப்பாண்டியனையென்னவல்லான்
வர்த்தமானீசர்கழல்வணங்கிவாழ்முருகன்
பத்தியையீசன்பதிகத்தேகாட்டினு
னத்தன்றிருநீலநக்கற்குமன்புடையான்
துத்தமொழிக்குதலைத்தூயவாய்நன்னுதலி
நித்திலப்பூண்முலைக்குநீண்டதடங்கண்ணினுக்குங்
கொத்தார்கருங்குழற்குங்கோலச்செங்கைமலர்க்கு
மத்தாமரையடிக்குமம்மென்குறங்கினுக்குஞ்
சித்திரப்பொற்காஞ்சிசேர்ந்தபேரல்குலுக்கு
முத்தமிழ்நூலெல்லாமுழுதுணர்ந்தபிள்ளையார்க்
கொத்தமணமிதுவென்றோதித்தமர்களெலாஞ்
சித்தங்களிப்பத்திருமணஞ்செய்காவணத்தி
லற்றைப்பொழுதத்துக்கண்டுடனேநிற்கப்
பெற்றவர்களோடும்பெருமணம்போய்ப்புக்குத்த
னத்தனடியேயடைந்தானழகிதே.

திருச்சிற்றம்பலம்.

திருத்தொகை முற்றும்.

நம்பியாண்டார் நம்பியருளிச்செய்த

# திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை.

பதின்றுசீர்க்கழிநெடில் விருத்தம்.

புலனொடாடித்திரிமனத்தவர்பொறிசெய்காமத்துரிசடக்கிய
புனிதநேசத்தொடுதமக்கையர்புணர்வினூலுற்றுரைசெயக்குடல்
சுலவுசூலைப்பிணிகொடுத்தொளிர்சுடுவெணீறிட்டமணகற்றிய
துணிவினுன்முப்புரமெரித்தவர்சுழலிலேபட்டிடுதவத்தின
ருலகின்மாயப்பிறவியைத்தருமுணர்விலாவப்பெருமயக்கினை
யொழியவாய்மைக்கவிதையிற்பலவுபரிபாகப்பொருள்பரப்பிய
வலகின்ஞானக்கடலிடைப்படுமயிர்தயோகச்சிவவொளிப்புக
வடியரோமுக்கருளினைச்செயுமரையதேவத்திருவடிக்களே. (க)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

திருநாவுக்கரைசடியவர்நாடற்கதிநிதி
தெளிதேனொத்தினியசொன்மடவாருற்பசிமுதல்
வருவானத்தரிவையர்நடமாடிச்சிலசில
வசியாகச்சொலுமவைதுகளாகக்கருதிமெய்
யுருஞானத்திரண்மனமுருகாநெக்கழுதுக்
ணுழவாரப்படைகையிலுடையான்வைத்தனதமிழ்
குருவாகக்கொடுசிவனடிசூடத்திரிபவர்
குறுகார்புக்கிடர்படுகுடர்யோனிக்குழியிலே. (உ)

பதின்சீர்க்கழிநெடில்விருத்தம்.

குழிந்துசுழிபெறுநாபியின்கொண்மயிர்நிரையார்
குரும்பைமுலையிடையேசெலுந்தகைநன்மடவா
ரழிந்தபொசியதிலேகிடந்திரவுபகனி
யளைந்தயருமதுநீயறிந்திலைகொன்மனமே
கழிந்தகழிகிடுநாளினங்கிதையநெகவே
கசிந்திதையமெழுநூறரும்பதிகநிதியே
பொழிந்தருளுதிருநாவினெங்களரைசினையே
புரிந்துநினையிதுவேமருந்துபிறிதிலையே. (௩)

எழுசீர்க்கழிநெடில் வி த்தம்.

இலைமாடென்றிடர்பரியாரிந்திரனேயொத்துறுகுறைவற்றாலும்
நிலையாதிச்செல்வமெனவேகருதுவர்கீழ்சன்மக்கடலிடையிற்புக்
கலையார்சென்றரனெறியாகுங்கரையண்ணப்பெறுவர்கள்வண்ணத்தின்
சிலைமாடந்திகழ்புகழாமூருறைதிருநாவுக்கரைசென்போரே. (௪)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்,

என்பட்டிக்கட்டியவிந்தப்பைக்குரம்பையை
யிங்கிட்டுச்சுட்டபினெங்குத்தைக்குச்செலுமிது
முன்பிட்டுச்சுட்டிவருந்திக்கெத்திக்கென
மொய்ம்புற்றுக்கற்றறிவின்றிக்கெட்டுச்சில
வன்பட்டிப்பிட்டர்கடுன்புற்றுப்புந்தியை
வஞ்சித்துக்கத்திவிழுந்தெச்சுத்தட்டுவ
ரன்பர்க்குப்பற்றிலர்சென்றர்ச்சிக்கின்றில
ரந்தக்குக்கிக்கிரைசிந்தித்தப்பித்தரே. (௫)

இதுவுமது.

பித்தரைசுபதையாதகொத்தைநிலையுளதேவு
பெட்டியுரைசெய்துசேறுசுட்டியுழல்சமண்வாயர்
கைத்தரைசுபதையாதசித்தமொடுசிவபூசை
கற்றமதியினனோசையித்தரசுபுகழ்ஞால

முத்திபெறுதிருவாளனெற்றுணையின்மிதவாமல்
கற்றுணையில்வருமாதி
பத்தரசுவசைதீரவைத்ததனதமிழ்மாலை
பற்பலவுமவையோதநற்பதிகநிதிதானே. (௬)

இதுவுமது.

பதிகமேழெழுநூறுபகருமாகவியோகி
பரசுநாவரைசானபரமகாரணவீச
னதிகைமாநகர்மேவியருளினாலமண்மூட
ரவர்செய்வாதைகடீருமனகன்வார்கழல்சூடி
னிதியராகுவர்சீர்மையுடையராகுவர்வாய்மை
நெறியராகுவர்பாவம்வெறியராகுவர்சால
மதியராகுவரீசனடியராகுவர்மான
முடையராகுவர்பாரின்மனிதாரனவர்தாமே (௭)

பன்னிருசீர்க்கழிநெடில் விருத்தம்.

தாமரைநகுமகவிதழ்த்தகுவனசாய்பெறுசிறுதளிரிணையனையன
சார்தருமடியவரிடர்தடிவனதாயினுநலகருணையையுடையன
தூமதியினையொருபதுகொடுசெய்தசோதியின்மிகுகதிரினையுடையன
தூயனதவமுனிவர்கடொழுவனதோமறுகுணநிலையினதலையின
ஓமரைசினைமறைகளின்முடிவுகளோலிடுபரிசொடுதொடர்வரியன
வோய்தலினுணர்வொடுசிவவொளியனையூறியகசிவொடுகவிசெய்தபுக
ழாமரைசுயரகநெகுமவருளனாரரசதிகையினரனருளவ
னுமரைசுகொளரசெனைவழிமுழுதாளரைசுதனடியிணைமலர்களே. (௮)

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

அடிநாயைச்சிவிகைத்தவிசேறித்திரிவித்
தறியாவப்பசுதைச்சிறியோர்பாற்செறியுங்
கொடியேனுக்கருளைத்திருநாவுக்கரைசைக்
குணமேருத்தனைவிட்டெனையாமொட்டகல்விற்
பிடியாரப்பெறுதற்கரிதாகச்சொலுமப்
பிணநூலைப்பெருகப்பொருளாகக்கருதுஞ்
செடிகாயத்துறிகைச்சமண்மூடர்க்கிழவுற்
றதுதேவர்க்கரிதாஞ்சிவலோகக்கதியே. (௯)

பன்னிருசீர்க்கழிநெடில் விருத்தம்.

சிவசம்பத்திடைத்தவஞ்செய்துதிரியும்பத்தியிற்சிறந்தவர்
திலகன்கற்றசிட்டன்வெந்தொளிர்திகழும்பைம்பொடித்திவண்டணி
கவசம்புக்குவைத்தரன்கழல்கருதுஞ்சித்தனிற்கவன்றிய
கரணங்கட்டுதற்கடுத்துளகளகம்புக்கநற்கவந்திய
னவசம்புத்தியிற்கசிந்துகொடழுகண்டத்துவைத்தளித்தன
னனகன்குற்றமற்றபண்டிதனரைசெங்கட்கொர்பற்றுவந்தறு
பவசங்கைப்பதைப்பரஞ்சுடர்படிநின்றித்தனைத்தொடர்ந்தவர்
பசுபந்தத்தினைப்பரிந்திடுபரிசொன்றப்பணிக்குநன்றுமே. (௧0)

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

நன்றுமாதரநாவினுக்கரைசடிநளினம்வைத்துயினல்லா
லொன்றுமாவதுகண்டிலமுபாயமற்றுள்ளனவேண்டோமா
லென்றுமாதியுமந்தமுமில்லதோரிகபரத்திடைப்பட்டுப்
பொன்றுவார்புகுஞ்சூழலிற்புகேம்புகிற்பொறியிலைம்புலனோடே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை முற்றும்.

நம்பியாண்டார் நம்பியருளிச்செய்த திருப்பிரபந்தங்கள் முற்றும்.

---

பதினோராந் திருமுறை முற்றும்.

